ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவர முநயே நம:

மொழியைக் கடக்கும் பெரும்புகழாளரான ஸ்ரீகூரத்தாழ்வான் அருளிச்செய்த பஞ்சஸ்தவத்தில் மூன்றாவது ஸ்தவமான

# ஸௌந்தரபாஹுஸ்தவம்

ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமி இயற்றிய வியாக்கியானத்துடன்

மணவாள மாமுனிகளின் 600ஆவது ஆண்டு நிறைவு நினைவு மலர்களில் 13ஆவது மலராக பதிப்பிக்கப்பெற்றது.

**பதிப்பித்த ஆண்டு :**

*3-11-1970 (சாதாரண ஐப்பசி திருமூலம்)*

**வெளியீடு :**

கிரந்தமாலா, காஞ்சிபுரம்.

**அச்சிட்டோர் :**

Freedom Press, Madras - 21.

**மறுஅச்சு மற்றும் கிடைக்குமிடம் :**

ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ

***ஸ்ரீரங்கநாச்சியார் அச்சகம்***

214, கீழை உத்தரவீதி, ஸ்ரீரங்கம்-6.

☎: 0431 - 2434398. E-Mail: akchari@vsnl.com

24.01.2004

விலை ரூபாய் 45/-

தபாற்செலவு தனி.

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:



ஸ்ரீகள்ளழகர் ஸந்நிதி முகப்புத் தோற்றம் - திருமாலிருஞ்சோலை

ஸ்ரீமந்தௌ ஹரிசரணௌ ஸமாச்ரிதோஹம்
ஸ்ரீராமாவரஜமுநீந்த்ரலப்தபோத: ।
நிர்ப்பீகஸ் தத இஹ ஸுந்தரோருபாஹும்
ஸ்தோஷ்யே தச்சரணவிலோகநாபிலாஷீ ॥

- ஸுந்தரபாஹுஸ்தவம் 1

இந்நூலினை ஸ்ரீவைஷ்ணவ சமூகத்தினர் அனைவரும் குறைந்த விலையில் பெற்றுப் பயன்பெறும் வண்ணம், தரமான அச்சுத் தாளினை கொடுத்து உதவியவர் நமக்கு பரம ஆப்தரும், ஸ்ரீவைஷ்ணவ திவ்யதேசங்களுக்கும், ஸம்ப்ரதாயத்திற்கும் பற்பல நற்பணிகளைச் செய்துவருபவருமான ஸ்ரீ.S.A.R.ப்ரஸன்ன வேங்கடாசார்யர் சதுர்வேதி ஸ்வாமி *(ஸ்ரீபாஷ்யகாரர் சாரிடபிள் டிரஸ்ட், சென்னை - 17.)*

ஸ்ரீரஸ்து.

கூரத்தாழ்வானருளிச்செய்த பஞ்சஸ்தவங்களுள்

மூன்றாவது ஸ்தவமான

# ஸுந்தரபாஹுஸ்தவம்.

[ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய வியாக்கியானத்துடன்.]

---

## — வியாக்கியான அவதாரிகை —

எம்பெருமானார் திருவடிவாரத்திலே அத்தாணிச் சேவகராயெழுந்தருளியிருந்து *மொழியைக்கடக்கும் பெரும்புகழான்* என்று வாசாமகோசரமான புகழைப் பெற்றவரான கூரத்தாழ்வான் சோழ ராஜனுடைய ஸதஸ்ஸிலேயெழுந்தருளி *சிவாத் பரதரம் நாஸ்தி* என்றதற்கு ப்ரதியாக *த்ரோணமஸ்தி ததஃபரம்* என்று பரிஹாஸமாகக் கையெழுத்திட்டு ச்ருதீதிஹாஸ புராண ப்ரமாண சத ஸஹஸ்ரங்களை யுபந்யஸித்து ஸ்ரீமந் நாராயணனுடைய பாரம்யத்தை ஸ்தாபித்தருளினவளவிலே வீரசைவனான அந்த சோழன் மிகச் சினங்கொண்டு ஆழ்வானுடைய திருக்கண்களுக்குத் தீங்கு விளைக்க, ஆழ்வானும் போர க்லேசித்து ஆச்வஸித்து மீண்டு நம்பெருமாள் ஸந்நிதியேற வெழுந்தருளி, அவ்விடத்தில் எம்பெருமானார் ஸேவை ஸாதித்தருளாமல் மேல்நாட்டுக்கெழுந்தருளியிருப்பதறிந்து அங்கு வஸிக்க ருசியாமையாலே திருமாலிருஞ்சோலையேற வெழுந்தருளப் புறப்பட்டு இந்த க்லேசங்கள் திருவுள்ளத்திலே நடையாடாதபடி எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபகுணவிபூதி சேஷ்டிதாதிகளை யநுஸந்தித்துப் போதுபோக்க விரும்பிச் சில ஸ்தவங்களை யருளிச்செய்யத்தொடங்கி ஸ்ரீவைகுண்டஸ்தவமும் அதிமாநுஷஸ்தவமும் வழியிடையே அருளிச்செய்து, திருமாலிருஞ்சோலைமலை சென்று சேர்ந்து அழகருடைய ஸர்வாங்க ஸௌந்தர்யத்தை யநுபவித்து அவ்வநுபவ பரீவாஹ ரூபமாக ஸ்ரீ ஸுந்தரபாஹுஸ்தவ மென்கிற இந்த ஸ்தோத்ரத்தை யருளிச் செய்தாராயிற்று.

இது சப்த காம்பீர்யத்தாலும் அர்த்த புஷ்டியாலும் ஒப்புயர்வற்றதாயிருக்கும். ச்ருதீதிஹாஸ புராணங்களிலும் திவ்ய ப்ரபந்தங்களிலும் சிரபரிசயம் பண்ணியறிய வேண்டிய அரும்பெரும் பொருள்களெல்லாம் இதுதன்னிலே ச்லோகந்தோறும் அறியக் கிடக்கும்.

இந்த ஸ்தவத்தின் முடிவில் *விஜ்ஞாபநாம் வநகிரீச்வரஸத்யரூபாம்* என்று தொடங்கியுள்ள நான்கு ச்லோகங்களின் பொருளை யுற்றுநோக்கினால் ஸ்ரீரங்க வாஸத்தை யிழக்க நேர்ந்த வருத்தம் பொறுக்கமாட்டாமையே இந்த ஸ்தவமாகப் பரிணமித்ததென்பது கைகொள் கனியாகும். திருவரங்கம் பெரிய கோயிலிலே அஸத்துக்களை யொழித்து ஸத்துக்களைக் குடியிருக்கப்பண்ணி எம்பெருமானாருடைய திருவடி நிழலிலே அடியேன் பண்டுபோலே வாழும்படி கடாக்ஷித்தருளவேணும் என்கிற ப்ரார்த்தனையாகவே இந்த ஸ்தவம் நிகமிக்கப்பட்டுள்ளமை காண்க. ... ... *

அவதாரிகை முற்றிற்று.

---

கூரத்தாழ்வான் திருவடிகளே சரணம்.

    

# ஸுந்தரபாஹுஸ்தவம்.

(ஆழ்வான் தனியன்.)

श्रीवत्सचिह्नमिश्रेभ्यो नमउक्तिमधीमहे ।
यदुक्तयस्त्रयीकण्ठे यान्ति मङ्गलसूत्रताम् ॥

ஸ்ரீவத்ஸசிஹ்நமிச்ரேப்யோ நமஉக்திமதீமஹே,
யதுக்தயஸ் த்ரயீகண்டே யாந்தி மங்களஸூத்ரதாம்.

---

श्रीमन्तौ हरिचरणौ समाश्रितोऽहं श्रीरामावरजमुनीन्द्रलब्धबोधः ।
निर्भीकस्तत इह सुन्दरोरुबाहुं स्तोष्ये तच्चरणविलोकनाभिलाषी ॥ १ ॥

ஸ்ரீமந்தௌ ஹரிசரணௌ ஸமாச்ரிதோஹம்
ஸ்ரீராமாவரஜமுநீந்த்ரலப்தபோத:,
நீர்ப்பீகஸ் தத இஹ ஸுந்தரோருபாஹும்
ஸ்தோஷ்யே தச்சரணவிலோகநாபிலாஷீ. 1

— (வியாக்கியானம்.) —

काञ्चीवादिभयंकरवंशीयाण्णङ्गरार्यदासेन ।
सुन्दरबाहुस्तवकृतिविवृतिर्विशदा विरच्यते सैषा ॥

எம்பெருமானார் திருவடிகளை ஸேவிக்கப் பெறவேணுமென்னுமவாவினால் இந்த ஸ்தவத்தை விண்ணப்பஞ் செய்யப்புகுகின்றேனென்கிறார். இந்த ஸ்தவத்தின் பயனாக எம்பெருமானாருடைய திருவடி நிழலில் வாழ்ச்சி தமக்குக் கிடைக்கவேணுமென்கிறாராயிற்று.

ஸ்ரீமந்தௌ ஹரிசரணௌ ஸமாச்ரித: அஹம்—எம்பெருமானுடைய திருப்பொலிந்த சேவடியைப் பணிந்தவனான அடியேன்;

ஸ்ரீராமாவரஜமுநீந்த்ர லப்த போத:—எம்பெருமானார் பக்கலிலே சைதந்யம் பெற்றவன். ஸ்வாமி திருவடிகளிலே ஆச்ரயித்து ஸகலார்த்தங்களையும் கேட்டு ஸத்தை பெற்றவுண்மையை வெளியிட்டுக் கொண்டபடி.

ததோ நிர்ப்பீக:— ஆதலால் பயப்படாதே நின்று. *கஜம் வா வீக்ஷ்ய ஸிம்ஹம் வா வ்யாக்ரம் வாபி வராங்கநா, நாஹாரயதி ஸந்த்ராஸம் பாஹூ ராமஸ்ய ஸம்ச்ரிதா * என்று, பிராட்டி பெருமாளுடைய திருத்தோள்களையண்டை கொண்ட பலத்தாலே ஒன்றுக்கு மஞ்சாதாப்போலே,

இஹ ஸுந்தரோருபாஹும் ஸ்தோஷ்யே — இவ்விடத்தில் சுந்தரத்தோளுடையானைத் துதிக்க விழிகின்றேன். (ஸுந்தர-உரு—பாஹும்—ஸுந்தரமாயும் பெரிதாயுமுள்ள பாஹுக்களையுடைய பெருமானை யென்கை.) எந்த பலஸித்திக்காக இந்த ஸ்தோத்ரமென்னில்;

தச்சரண விலோகந அபிலாஷீ ஸந் (ஸ்தோஷ்யே) — அந்த எம்பெருமானுராகிற அஸ்மதாசார்ய ஸார்வ பௌமருடைய திருவடிகளைக் கண்ணுரக் காணவேணுமென்னு மாசையையுடையேனுய்க்கொண்டு இந்த ஸ்தவத்திலிழியாநின்றேனென்கை.

இந்த ஸ்தவத்தின் முடிவிலும் *ஸ்ரீரங்கதாமநி யதாபுர மேகதோஹம் ராமாநுஜார்யவசகஃ பரிவர்த்திஷீய* என்று இந்தப் பலன் ஸ்பஷ்டீக்ருதம். முதலிரண்டு பாதங்களினுல் தெரிவிக்கப்பட்ட விஷயம் (அதாவது—ஸ்ரீஹரிசரண ஸமாச்ரிதத்வமும், ஸ்ரீராமாவரஜமுநீந்த்ரலப்த போதத்வமும்) நிர்ப்பீகஃ என்னப்பட்ட நிர்ப்பயத்வத்தில் ஹேதுக்கள். கோட்டையினுள்ளே கிடப்பார்க்கு அஞ்சவேணுமோ? (1)

सुन्दरायतभुजं भजामहे वृक्षषण्डमयमद्रिमास्थितम् ।
यत्र सुप्रथितनूपुरापगातीर्थमर्थितफलप्रदं विदुः ॥२॥

ஸுந்தராயதபுஜம் பஜாமஹே வ்ருக்ஷஷண்டமய மத்ரி மாஸ்திதம்,
யத்ர ஸுப்ரதித நூபுராபகாதீர்த்தம் அர்த்தித பலப்ரதம் விதுஃ. 2

சிலம்பாறு பாயும் தென் திருமாலிருஞ்சோலைமலை யுறையும் பெருமானை யடிபணிகின்றேனென்கிருர்.

வ்ருக்ஷஷண்டமயம் அத்ரிம் ஆஸ்திதம் ஸுந்தராயதபுஜம் பஜாமஹே—*கதள வகுள ஜம்பூ பூக மாகந்தேத்யாதிகளான வ்ருக்ஷங்கள் பலவும் நெருங்கிப் பெருஞ்சோலையாயிருப்பதுபற்றியேயிறே இத்தலத்திற்குத் திருமாலிருஞ்சோலையென்று திருநாமமாயிற்று. அப்படிப்பட்ட திருமலையிலே எழுந்தருளியிருக்கின்ற சுந்தரத்தோளுடையானைத் தொழுகின்றோம். (ஆச்ரிதம், ஆஸ்திதம் என்பன பாடபேதங்கள்.) அந்தத் திருமலையின் பெருமை எப்படிப்பட்டதென்ன, அது சொல்லுகிறது உத்தரார்த்தத்தில்.

யத்ர—யாதொரு திருமாலிருஞ்சோலைமலையிலே,

ஸுப்ரதித நூபுராபகாதீர்த்தம்—'சிலம்பாறு' என்றும் 'நூபுரகங்கை' என்றும் மிகவும் புகழ்பெற்றதாகி விளங்கும் திவ்ய தீர்த்தத்தை;

அர்த்தித பலப்ரதம் விது:—அவரவர்கள் விரும்பும் ஸகல பலன்களையும் அளிக்கவல்லதாக மஹான்கள் அறிந்துள்ளார்களோ, அப்படிப்பட்ட அத்ரிம் ஆச்ரிதம் பஜாமஹே என்று முடிவு காண்க.

ஆரோக்யம் ஸந்தானம் ஐச்வர்யம் மோக்ஷம் என்று சொல்லப்படும் ஸகல பலன்களையும் அர்த்திகளுக்கு அளிக்கவல்லதென்று புராண பௌராணிகர்களால் புகழப்பட்டதான நூபுரகங்கையினுலே அலங்க்ருதமான திருமாலிருஞ்சோலையிலே யெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ ஸுந்தரபாஹு பகவானை பஜிக்கின்ருேமென்றதாயிற்று. [ஸுந்தர ஆயத புஜம்] ஆயதமென்றது நீண்டதென்றபடி. [நூபுராபகாதீர்த்தம்] எம்பெருமான் திரிவிக்கிரமனுய் உலகளந்தருளுகிற காலத்திலே திருவடியில் அணிந்திருந்த நூபுரத்தினின்று [சிலம்பினின்று] பெருகின கங்கையென்கிற காரணத்தினுல் நூபுர கங்கையென்று ப்ரஸித்திபெற்றது. பெரியாழ்வாரும் ஆண்டாளும் திருமங்கை

யாழ்வாரும் தத்தம் திவ்ய ப்ரபந்தங்களிலே இந்த நூபுர கங்கையின் ப்ரசம்ஸை செய்தருளியுள்ளார்கள்; *சிலம்பார்க்கவந்து தெய்வமகளிர்களாடுஞ் சீர்ச்சிலம்பாறுபாயுந் தென்திருமாலிருஞ்சோலையே* என்றார் பெரியாழ்வார்; *சந்தொடு காரகிலுஞ்சுமந்து தடங்கள் பொருதுவந்திழியுஞ் சிலம்பாறுடைமாலிருஞ்சோலை* என்றாள் ஆண்டாள். *சிலம்பியலாறுடைய திருமாலிருஞ்சோலை நின்ற* என்றார் திருமங்கையாழ்வார். (2)

क्वचित्त्वरितगामिनी क्वचन मन्दमन्दालसा क्वचित्स्खलितविह्वला क्वचन फेनिला सारवा ।

पतन्त्यपि किल क्वचिद्व्रजति नूपुराह्वा नदी सुसुन्दरभुजाह्वयं मधु निपीय मत्ता यथा ॥३॥

க்வசித் த்வரிதகாமிநீ க்வசந மந்தமந்தாலஸா

க்வசித் ஸ்கலித விஹ்வலா க்வசந பேநிலா ஸாரவா,

பதந்த்யபி கில க்வசித் வ்ரஜதி நூபுராஹ்வா நதீ

ஸுஸுந்தரபுஜாஹ்வயம் மது நிபீய மத்தா யதா. 3

கீழ்ச்லோகத்தில் நூபுராபகாதீர்த்தத்தின் ப்ரஸ்தாவம் செய்தருளினபடியாலே அந்த திவ்ய நதியின் கதிவிசேஷங்களை வருணித்தருளுகிறார் இந்த ச்லோகத்தில்.

நூபுராஹ்வா நதீ—நூபுரகங்கையானது,

ஸுஸுந்தரபுஜாஹ்வயம் மது நிபீய மத்தா யதா வ்ரஜதி—ஸுந்தரபாஹு பகவானாகிற மதுவைப்பருகி மதம்பிடித்ததுபோல இத்திருமலையிலே பெருகாநின்றது. *எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே திருமாலிருஞ் சோலைக்கோனே யென்கிற திருவாய்மொழியை நோக்குமளவில் சுந்தரத்தோளுடையானை மதுவென்னத் தகுதியுண்டே. உலகில் மதுபானம்பண்ணி மதித்தவர்களின் கதியும் இந்த நதியின் கதியும் ஒத்திருக்கையாலே "மது நிபீய மத்தா யதா வ்ரஜதி" என்கிறது. அந்த கதி எங்ஙனேயிராநின்றதென்னில்.;

க்வசித் த்வரித காமிநீ—சிலவிடங்களில் விரைந்தோடாநின்றது. வழியில் இடையூறொன்றுமில்லாதவிடங்களில் விரைந்தோடும் வெள்ளம் காணலாமிறே.

க்வசந மந்த மந்தாலஸா—சிலவிடங்களில் மிகமந்தமான கதியையுடைத்தாய்ப் பெருகாநின்றது. मन्दमन्दा च सा अलसा चेति विशेषणोभयपदकर्मधारयः ॥

க்வசித் ஸ்கலிதவிஹ்வலா—சிலவிடங்களிலே பெரிய கற்பாறைகளின் அபிகாதம் முதலான இடையூறுகளாலே தட்டித்தடுமாறிப் பெருகாநின்றது.

க்வசந பேநிலா—சிலவிடங்களில் நுரைததும்பிப் பெருகா நின்றது.

க்வசந ஸாரவா—பெரு முழக்கத்துடனே சிலவிடங்களில் பெருகா நின்றது.

க்வசிதபி பதந்தீ வ்ரஜதி—மேடான நிலத்திலிருந்து கீழுலகுபாதாளத்திலே பெருகுமிடமும் சிலவுண்டு.

ஆகவிப்படி பஹுமுகமான விப்ரமங்களுடனே ப்ரவஹிக்கிற கதிவிசேஷங்களை நோக்குமிடத்தில் உலகில் மதுபானம்பண்ணி நடப்பாருடைய நடை நினைவுக்கு வாராநிற்குமாயிற்று. வேதாந்தங்களில் மதுவாகச் சொல்லப்பட்ட எம்பெருமானே இத்திருமலையில் அழகராக எழுந்தருளியிருப்பதனால் இவரை யநுபவித்ததனாலே மதுபர்களின் கதி விசேஷங்கள் இந்த நதிக்குமுண்டாயிற்றுப்போலுமென்று உல்லேகித்தபடி. ச்லோகத்தின் முடிவில் यथा என்றது இவ என்றபடி. ... (3)

उदधिगमन्दराद्रिमथिमन्थनलब्धपयोमधुररसेन्दिराह्वसुधसुन्दरदोःपरिघम् ।
अशरणमादृशात्मशरणं शरणार्थिजनप्रवणधियं भजेम तरुषण्डमयाद्रिपतिम् ॥४॥

உததிக மந்தராத்ரி மதி மந்தநலப்தபயோ
மதுரரஸேந்திராஹ்வஸுதஸுந்தரதோ: பரிகம்,
அசரணமாத்ருசாத்மசரணம் சரணார்த்திஜந
ப்ரவணதியம் பஜேம தருஷண்டமயாத்ரிபதிம். 4

ஆண்டாள் திருமாலிருஞ் சோலையழகரைப் பற்றிப் பேசும்போது (நாச்சியார் திருமொழியில்) *மந்தரம் நாட்டியன்று மதுரக் கொழுஞ்சாறு கொண்ட சுந்தரத்தோளுடையான் * என்றருளிச் செய்தாள். இப்பாசுரத்தில் 'மதுரக் கொழுஞ்சாறு' என்று பெரிய பிராட்டியாரையும் குறித்ததாக ஆழ்வான் திருவுள்ளம்பற்றி இந்த ச்லோகமருளிச்செய்கிறார்.* விண்ணவரமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்ட வெம்பெருமானே !* என்று திருமங்கையாழ்வாருமருளிச் செய்கிறார். தேவர்களுக்கு அமுதமெடுத்துக் கொடுக்கக் கடல் கடைந்த தென்பது வ்யாஜ மாத்ரம்.* फलेग्रहिर्हि कमलालाभेन सर्वः श्रमः:—பலேக்ர்ஹிர் ஹி கமலாலாபேந ஸர்வச் ச்ரம:* என்று பட்டரருளிச் செய்தபடியே பிராட்டியைப் பெறுவதே பரம ப்ரயோஜனமென்கையிலே ஔசித்யமிருக்கையாலே *மந்தரம் நாட்டியன்று மதுரக்கொழுஞ்சாறு கொண்ட* என்கிற ஆண்டாள் பாசுரத்திற்கு ஆழ்வான் திருவுள்ளம்பற்றின பொருள் இன்சுவை மிக்கதேயாகும். அப்பொருளைப் பதிய வைத்து இதில் பூர்வார்த்த மருளிச்செய்கிறார்.

*[உததிகேத்யாதி.]* உததிக—ஸமுத்ரத்தை யடைந்ததான, மந்தராத்ரி மதி—மந்தரமலையாகிற மத்தாலே (செய்யப்பட்ட) மந்தந—கடைதலினாலே, லப்த—அடையப்பட்ட,

பயோமதுரரஸ இந்திராஹ்வ ஸுத—பயஸ்ஸாகிற மதுரரஸமென்ன, பெரிய பிராட்டியாராகிய ஸுதை யென்ன இவ்விரண்டையு முடைத்தான, ஸுந்தரதோஃ பரிகம்—உழல் தடிபோன்ற ஸுந்தர புஜங்களையுடையவராய். இதன் கருத்தாவது, தம்முடைய வலி மிக்க ஸுந்தர புஜங்களினாலே மந்தரமலையாகிற மதத்தைக் கடலிலே யிட்டு அக்கடலைக் கடைந்து விண்ணவர்களின் அம்ருதமான உப்புச் சாற்றையும், *சீதக்கட லுள்ளமுது* என்கிறபடியே தம்முடைய அம்ருதமான பிராட்டியையும் கொண்டருளினவரென்கை.

அசரணமாத்ருசாத்ம சரணம்—புகலொன்றில்லாத அடியேன்போல்வாரான ஆத்மவர்க்கங்களுக்குப் புகலானவராய்;

சரணார்த்தி ஜந ப்ரவணதியம்—அடைக்கலம்புகுந்த அடியார்கள் பக்கலிலே அபிமுகமான திருவுள்ள முடையவராயிரா நின்ற;

தருஷண்டமய அத்ரிபதிம் பஜேம—திருமாலிருஞ் சோலைத் தலைவரை ஆச்ரயிக்கக் கடவோம். நம்முடைய பக்திக்கு இலக்கா குவோ மென்றபடி. ... (4)

शशधररिङ्खणाढ्यशिखमुच्छिखरप्रकरं तिमिरनिभप्रभूततरुषण्डमयं भ्रमदम् ।
वनगिरिमावसन्तमुपयामि हरिं शरणं भिदुरितसप्तलोकसुविश्रृङ्खलशङ्खरवम् ॥५॥

சசதரரிங்கணாட்யசிகம் உச்சிகரப்ரகரம்
திமிர நிபப்ரபூததருஷண்டமயம் ப்ரமதம்;
வநகிரிமாவஸந்தமுபயாமி ஹரிம் சரணம்
பிதுரிதஸப்தலோகஸுவிச்ருங்கலசங்கரவம். 5

திருவாய்மொழியில் *மதி தவழ்குடுமி மாலிருஞ்சோலை* என்றும், *அதிர்குரல் சங்கத்தழகர்தங்கோயில்* என்றுமுள்ள சந்தைகளைத் திருவுள்ளம்பற்றி இந்த ச்லோக மருளிச்செய்கிறார்.

சசதரரிங்கணுட்ய சிகம்—*மதிதவழ் குடுமி* என்கிறபடியே சந்த்ரஸஞ்சார ஸம்பந்தமான சிகரத்தை யுடைத்தாயும். *திங்கள் நன்மாமுகில்சேர் திருமாலிருஞ் சோலை* என்றார் திருமங்கையாழ்வாரும். இத்தால், சந்த்ரபதத்தளவு மோங்கினதென்று திருமலையின் உச்ச்ராயம் சொன்னபடி.

உச்சிகரப்ரகரம்—உத்துங்கமான கொடுமுடிகளின் கூட்டங்களை யுடைத்தாயும்.

திமிரநிப ப்ரபூததருஷண்ட மயம்—இருள் செறிந்தாற்போலவும் அபரிமிதமாகவு முள்ள சோலைகளால் ப்ரசுரமாயும்.

ப்ரமதம்—'இது சோலையே யல்லது மலையன்று' என்கிற ப்ராந்தியை விளைக்கவல்ல தாயு மிருக்கிற.

வநகிரிம் ஆவஸந்தம்— திருமாலிருஞ் சோலையிலே எழுந்தருளியிருப்பவராய்.

பிதுரித ஸப்தலோக ஸுவிச்ருங்கல சங்கரவம்—ஏழுலகங்களையும் பேதிக்கவல்லதான அப்ரதிஹத சங்கத்வநியை யுடையவரான.

ஹரிம் சரணம் உபயாமி— அழகரைத் தஞ்சமாகவடைகின்றேன்.

நான்காவது பாதமாகிய விசேஷணம் திருமாலிருஞ் சோலைக்கு மந்வயிக்கலாம். அழகர்க்கு மந்வயிக்கலாம்; இந்த விசேஷணத்திற்கு மூலமான *அதிர்குரல் சங்கத்தழகர்தங் கோயில்* என்ற திருவாய் மொழிப் பாசுரத்திலும் *அதிர்குரல் சங்கமென்கிற அடைமொழி அழகர்க்கும் அழகர்தங் கோயிலுக்கும் அந்வயிக்க வுரித்தாயிறே யிருப்பது. *மயல்மிகு பொழில்சூழ் மாலிருஞ் சோலை* என்கிற பாசுரத்தை இதில் இரண்டாவது பாதத்திற்குச் சேர அநுஸந்திப்பது. ... ... ... (5)

यत्तुङ्गशृङ्गविनिषङ्गिसुराङ्गनानां न्यस्तोर्ध्वपुण्ड्रमुखमण्डनमण्डितानाम् ।
दर्पण्यभूद्धृतमपाङ्कशशाङ्कपृष्ठं तद्धाम सुन्दरभुजस्य महान् वनाद्रिः ॥६॥

யத்துங்கச்ருங்க விநிஷங்கி ஸுராங்கநாநாம்
ந்யஸ்தோர்த்வ புண்ட்ரமுக மண்டந மண்டிதாநாம்,
தர்ப்பண்யபூத் த்ருதமபாங்க சசாங்கப்ருஷ்டம்
தத் தாம ஸுந்தர புஜஸ்ய மஹாந் வநாத்ரி:. 6

இந்த ச்லோகமும் திருமலையின் திருவளர்த்தியை வர்ணிக்கிற புடையிலே அமைந்தது. அதிசயோக்தி யலங்காரம். அழகரை ஸேவிப்பதற்காக தேவலோகத்திலிருந்து தெய்வ மகளிர்கள் திருமலைக்கு வருகிறார்கள்; *சிலம்பு ஆர்க்கவந்து தெய்வ மகளிர்களாடுஞ் சீர்ச்சிலம்பாறு பாயுந் தென் திருமாலிருஞ்சோலையே* என்று பெரியாழ்வாரருளிச்செய்தாரே. அப்படி வருகின்ற அவர்கள் நெற்றியில் ஊர்த்வ புண்ட்ராலங்காரமின்றிக்கே பெருமாளை ஸேவிக்க மாட்டாதவர்களாகையாலே திருமலையினுடைய உந்நதமான சிகரத்திலே யிருந்து நிர்மலமான சந்த்ர மண்டலத்தையே கண்ணுடியாகக்கொண்டு முகாலங்காரம் செய்துகொள்ளுகிறார்கள் என்பது இதில் சொல்லப்படுகிறது. இதனால் சந்த்ரமண்டலாவகாஹியான சிகரத்தையுடையது இத்திருமலையென்று ஒக்கம் சொல்லிற்றாகிறது.

ந்யஸ்தோர்த்வ புண்ட்ர முகமண்டநமண்டிதாநாம்— அணியப்பட்ட ஊர்த்வபுண்ட்ரமாகிற முகாலங்காரத்தாலே அலங்கரிக்கப்பட்டவர்களான; (இது ஸுராங்கனைகளுக்கு விசேஷணம்.)

யத்துங்கச்ருங்கவிநிஷங்கி ஸுராங்கநாநாம்—யாதொரு திருமலையினுடைய உந்நதமான சிகரத்திலே வந்து சேர்ந்த தேவமாதர்களுக்கு,

த்ருதம் அபாங்க சசாங்கப்ருஷ்டம் தர்ப்பணயூத்—அகளங்க சந்த்ரமண்டலமானது கையிலேந்தப்பட்டுக் கண்ணாடியாயிற்றே;

தத் தாம—அந்த ஸ்தானமானது,

ஸுந்தரபுஜஸ்ய மஹாந் வநாத்ரி:—சுந்தரத் தோளுடையானது திருமாலிருஞ்சோலைமலையாம்.

*மலமறு மதிசேர் மாலிருஞ்சோலை* என்ற திருவாய்மொழிப் பாசுரத்தை நோக்கி 'அபாங்க சசாங்க' என்றது. அபாங்கமென்றது அபகதமான அங்கத்தை [களங்கத்தை] யுடையதென்றபடி. நிஷ்களங்கமென்கை. சந்திரன் நிஷ்களங்கனாக இருக்க முடியுமோ வென்னில்; அடுத்த ச்லோகத்தில் சொல்லுகிறபடியே தேவதாந்தர ஸ்பர்சத்தினாலாகுங்களங்க முண்டே, அது தவிர்ந்தமை சொன்னபடி. சந்திரன் திருமாலிருஞ்சோலையை ஸேவித்து அந்தப் பாதகத்தைத் தீர்த்துக்கொண்டானென்க. ... (6)

यदीयशिखरागतां शशिकलां तु शाखामृगा निरीक्ष्य हरशेखरीभवनमामृशन्तस्ततः ।
स्पृशन्ति न हि देवतान्तरसमाश्रितेति स्फुटं स एष सुमहातरुव्रजगिरिर्गृहं श्रीपतेः ॥७॥

யதீயசிகராகதாம் சசிகலாம் து சாகாம்ருகாः
நிரீக்ஷ்ய ஹரசேகரீபவநம் ஆம்ருசந்தஸ் ததः,
ஸ்ப்ருசந்தி ந ஹி தேவதாந்தரஸமாச்ரிதேதி ஸ்புடம்
ஸஏஷ ஸுமஹாதருவ்ரஜகிரிர் க்ருஹம் ஸ்ரீபதேः. 7

திருமாலிருஞ்சோலை மலையுச்சியில் சாகாமிருகங்கள் [வானரங்கள்] ஸஞ்சரித்துக் கொண்டிருக்குமே; அவை சந்திரமண்டலத்தினருகே யிருக்கச் செய்தேயும் அந்த சந்திர மண்டலத்தைத் தொடுவதில்லையாம்; எதனாலே யென்னில்; "பிறைதங்கு சடையான்" என்றும் "சந்த்ரமௌலி" என்றும் சிவன் பேர் பெற்றிருப்பதற்கிணங்க சந்திரன் சிவனுக்குச் சிரோ பூஷணமாயிருப்பதனால், தேவதாந்தர ஸம்பந்தம் பெற்ற இந்த சந்த்ர கலையை பகவத் ஸம்பந்திகளான நாம் ஸ்பர்சிக்கத்தகாது என்று கருதித் தொடுகின்றனவில்லைபோலும் என்று உத்ப்ரேக்ஷிக்கிறது இந்தச்லோகம். இத்தால் சந்த்ரமண்டலத்தளவு மோங்கின சிகரத்தையுடையது திருமலையென்று திருமலையின் உந்நதியின் விறு தான் சொல்லிற்றாகிறது.

சாகாம்ருகாஸ் து—குரங்குகளோவென்னில்; கீழ் ச்லோகத்தில் சொல்லப்பட்ட ஸுராங்கனைகளை வ்யாவர்த்திக்கிறது இந்த து சப்தம்; அவர்கள் வைஷ்ணவத்வ பூர்த்தியை யுடையவர்களல்லாமையாலே சந்திரமண்டலத்தைக் கையாலே தொட்டுக் காரியங் கொள்ளுகிறார்கள்; இந்தக் குரங்குகள் அவர்களிற் காட்டிலும் விலக்ஷணங்களென்று வாசிகாட்டப்பட்டதாயிற்று.

யதீயசிகராகதாம் சசிகலாம் நிரீக்ஷ்ய—யாதொரு திருமலையினுடைய சிகரத்தில் வந்த சந்திரகலையைப் பார்த்து;

ஹரசேகரீபவநம் ஆம்ருசந்தஸ் ஸந்த:—'இந்த சந்திரகலையானது ருத்ரனுக்கு சிரோ பூஷணமானதன்றோ' என்று அந்தத் தன்மையை ஆராய்ந்தவைகளாய்க் கொண்டு;

ததः தேவதாந்தரஸமாச்ரிதேதி ந ஹி ஸ்ப்ருசந்தி—தேவதாந்தரஸங்க முள்ளதன்றோவிது என்று கொண்டு அதனை ஸ்பர்சிப்பதில்லையோ:

ஸஏஷ ஸுமஹாதருவ்ராஜகிரி :—அப்படிப்பட்டதான விந்தத் திருமாலிருஞ்சோலைமலை யானது;
ஸ்ரீபதே: க்ருஹம்—திருமாலின் கோயிலாம்.

மூன்றும் பாதத்தின் முடிவில் ஸ்புடம் என்றது உத்ப்ரேக்ஷாலிங்கமென்று கொள்ளக்கடவது. ... ... ... ... (7)

सुन्दरदोर्दिव्याज्ञालम्भनकातरवशानुयायिनि करिणि ।
प्रणयजकलहसमाधिर्यत्र वनाद्रिस्स एष सुन्दरदोष्णः ॥८॥

ஸுந்தரதோர்திவ்யாஜ்ஞாலம்பந காதரவசாநுயாயிநி கரிணி,
ப்ரணயஜகலஹஸமாதிர் யத்ர வநாத்ரிஸ் ஸஏஷ ஸுந்தரதோஷ்ண: 8

பெரியாழ்வார் திருமொழியில் *கருவாரணம் தன்பிடி துரந்தோடக், கடல் வண்ணன் திருவாணை கூறத்திரியும் தண்மாலிருஞ்சோலையே* என்றருளிச்செய்தவதுவே இந்த ச்லோகமாக வடிவெடுத்திரா நின்றது. அப்பாசுரத்தின் மொழிபெயர்ப்பாகவே யமைந்ததாம் இந்த ச்லோகமென்க. அப்பாட்டின் முன்னடிகளை விட்டுப் பின்னடிகளைமாத்திரம் கொண்டாரிங்கு. திருமலையில் ஒரு யானை தன் பேடையோடு விளையாடிக்கொண்டிருக்கையில் ப்ரணயகலஹம் [ஊடல்] உண்டாகி அந்தப் பேடையானது ஆண்யானையை விட்டுநீங்கி அப்பால் செல்லப் புறப்பட்டதாம்; அப்போது அந்தக்களிறு 'என்னை நீ பிரிந்து போருயாகுல் அழகர் ஸ்ரீபாதத்தின்மேலாணை' என்று ஆணையிட்டவாறே அந்தப்பிடியானது அதனை மீறிப் போகமாட்டாதே அஞ்சி நிற்குமென்று இங்குச் சொல்லப்படுகிறது. இதனுல் திருமலையிலுள்ள திர்யக்குக்களுக்கும் அழகர்பக்கலிலே யுண்டான ப்ரதிபத்தியின் கனம் தெரிவிக்கப்பட்டதாகும்.

யத்ர—யாதொரு திருமாலிருஞ்சோலைமலையிலே,
கரிணி—ஒரு காட்டு யானையானது, (இது, ஸதிஸப்தமி.)

ஸுந்தரதோர்திவ்யாஜ்ஞாலம்பநகாதரவசாஅநுயாயிநிஸதி—'அழகர் ஆணை' என்று சொல்லி அழகர்மேல் ஆணையிட்டதனுலே அந்த ஆணையை மீறிப்போகமாட்டாமல் திகைத்து நின்ற தன்பேடையை அநுஸரித்து நின்றவளவிலே,

ப்ரணயஜகலஹஸமாதி:—ப்ரணயகலஹம் சாந்தமாகி ஸமாதானமுண்டாகின்றதோ;

ஸ ஏஷ வநாத்ரி: ஸுந்தரதோஷ்ண:—அந்தத் திருமலையானது ஸுந்தரபாஹு வெம்பெருமானுடையதாம்.

இரண்டாவது பாதத்தில் லம்பந என்றும் லங்கந என்றும் இருவகையான பாடமுண்டு; இரண்டுபடியுமொக்கும்; (லம்பந) என்னும் பாடத்தில் லம்பநேந காதரா என்று த்ருதீயாஸமாஸம் கொள்ளக்கடவது; (லங்கந) என்னும் பாடத்தில் லங்கநாத் காதரா என்று பஞ்சமீஸமாஸம் கொள்ளக்கடவது. வசா என்று பெண்யானைக்குப் பெயர்; தமிழில் பிடி என்பதுபோல. .... ... ... (8)

स एष सौन्दर्यनिधेर्धृतश्रियो वनाचलो नाम सुधाम यत्र हि ।
भुजङ्गराजस्य कुलस्य गौरवान्न खण्डिताः कुण्डलिनश्शिखण्डिभिः ॥९॥

ஸஏஷ ஸௌந்தர்யநிதேர் த்ருதச்ரிய: வநாசலோ நாம ஸுதாம யத்ர ஹி,
புஜங்கராஜஸ்ய குலஸ்ய கௌரவாத் ந கண்டிதா: குண்டலிநச் சிகண்டிபி: 9

ப்ரஸங்காத் இதுமுதல் மூன்று ச்லோகங்களாலே திருமலையிலுள்ள திர்யக்குக்களின் விலக்ஷண சர்யாவிசேஷங்கள் பேசப்படுகின்றன. மயில்களானவை எங்கும்

இயற்கையாக ஸர்ப்பங்களைக் கண்டிப்பனவென்று ப்ரஸித்தம்; திருமலையிலுள்ள மயில்களோவென்னில், * சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம், நின்றால் மரவடியாம் நீள்கடலுள் - என்றும் புணையாமணி விளக்காம் பூம்பட்டாம் புல்குமணையாம் திருமாற்கு அரவு* என்கிற பொய்கையாழ்வார் பாசுரப்படியும், * நிவாஸ சய்யாஸந பாதுகாம்சுகோபதாந வர்ஷாதபவாரணாதிபி:, சரீரபேதைஸ் தவ சேஷதாம் கதைர் யதோசிதம் சேஷ இதீரிதே ஜநை:* என்கிற ஆளவந்தார் ஸ்ரீஸூக்திப்படியும் எம்பெருமானுக்கு ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வவித கைங்கர்யங்களிலும் நிரதனான திருவனந்தாழ்வான் பக்கலிலுள்ள கௌரவப்ரதிபத்தியாலே அவனுடைய குலத்திலுதித்தவர்களை நாம் நலியலாகாதென்று நட்புக்கொண்டாடியிருக்கும்படியை இந்த ச்லோகத்திலருளிச்செய்கிறாராயிற்று. “ தத்ஸந்நிதௌ வைரத்யாக:” என்னக் கடவதிறே.

யத்ர—யாதொரு திருமாலிருஞ்சோலைமலையிலே,

குண்டலிந:—(மயில்களுக்கு இயற்கையில் வைரிகளான) ஸர்ப்பங்களானவை,

புஜங்கராஜஸ்ய குலஸ்ய கௌரவாத்—ஆதிசேஷஸந்தானமென்கிற கௌரவப்ரதிபத்தியாலே,

சிகண்டிபி: ந கண்டிதா:—மயில்களினால் கடிக்கப்படவில்லையோ;

வநாசலோ நாம ஸஏஷ:—திருமாலிருஞ்சோலையென்று ப்ரஸித்தமான இத்திருமலையானது,

ஸௌந்தர்யநிதே: த்ருதச்ரிய: ஸுதாம—*ஏறுதிருவுடையாரென்று ப்ரஸித்திபெற்ற அழகருக்கு அழகிய கோயிலாம். ... ... .... (9)

वृषगिरिरयमच्युतस्य यस्मिन् स्वमतमलङ्घयितुं परस्परेभ्य: ।
खगपतिचरणौ खगाश्शपन्ते भुजगपतेर्भुजगाश्च सर्व एव ॥१०॥

வ்ருஷகிரிரயமச்யுதஸ்ய யஸ்மிந் ஸ்வமதமலங்கயிதும் பரஸ்பரேப்ய:,
ககபதிசரணௌ ககாச் சபந்தே புஜகபதேர் புஜகாச் ச ஸர்வ ஏவ.

பறவைத்திரள்களுள் ப்ரணயகலஹம் நேர்ந்தால் பெரிய திருவடிபாதத்தின்மேலாணையிடுவதும், ஸர்ப்பகணங்களுள் ப்ரணயகலஹம் நேர்ந்தால் திருவனந்தாழ்வானடிமேலாணையிடுவதும் திருமலையில் நிகழ்கிறபடியை யருளிச்செய்கிறாரிதில்.

யஸ்மிந்—யாதொரு திருமாலிருஞ்சோலைமலையிலே;

ஸர்வே ககா:—ஸகல பக்ஷிவர்க்கங்களும்,

ஸ்வமதம் அலங்கயிதும்—தம்தமக்கு ப்ரதிஜ்ஞாதமான அம்சத்தை அதிக்ரமித்து நடவாமைக்காக,

ககபதிசரணௌ பரஸ்பரேப்ய: சபந்தே—பக்ஷிராஜனுடைய பாதங்களின்மேல் ஆணையிடுவதையே பரஸ்பரம்செய்து போருகின்றனவோ,

புஜகாச்ச ஸர்வே புஜகபதேரேவ சரணௌ சபந்தே—“ஸ்வமத மலங்கயிதும் பரஸ்பரேப்ய:” என்றதற்கு இவ்விடத்திலும் அநுஷங்கமாகக் கடவது. ஸர்ப்பஜாதிகளெல்லாம் ஸ்வாபிமத ஸித்திக்காக ஆதிசேஷனடிமேல் ஆணையிடுகின்றனவோ;

அயம் வ்ருஷகிரி: அச்யுதஸ்ய—இந்தத் திருமாலிருஞ்சோலை மலையானது அடியார்களை ஒருகாலும் நழுவவிடாதவரான அழகருடையதாம். கீழ்ச்லோகத்திலிருந்து ஸுதாம என்கிற பதத்தை இங்கும் ஆகர்ஷித்துக்கொள்ளவுமாம். ... ... (10)

हरिकुलमखिलं हनूमदङ्घ्रिं स्वकुलपजाम्बवतस्तथैव भल्लाः ।
निजकुलपजटायुषश्च गृध्राः स्वकुलपतेश्च गजा गजेन्द्रनाम्नः ॥ ११ ॥

ஹரிகுலமகிலம் ஹநூமதங்க்ரிம் ஸ்வகுலபஜாம்பவதஸ் தஹைவ பல்லாஃ,
நிஜகுலபஜடாயுஷச் ச க்ருத்ரா: ஸ்வகுலபதேச் ச கஜா கஜேந்த்ர நாம்நஃ. 11

கீழ்ச்லோகத்தி லிருந்து "ஸ்வமத மலங்கயிதும் பரஸ்பரேப்யச் சபந்தே" என்கிற வாக்யம் இந்த ச்லோகத்தில் பாதந்தோறும் அநுஷங்கம் செய்துகொள்ளத் தக்கது. இது, மூலத்தில் (தஹைவ) என்பதனால் ஸூசிதம். முடிவில்* வ்ருஷகிரிரயமச்யுதஸ்ய* என்பதும் கீழ்ச்லோகத்திலிருந்து வருவித்துக்கொள்ள வுரியது. கீழ்ச்லோகமும் இந்த ச்லோகமும் சேர்ந்து குளகம் என்றதாயிற்று.

ஹரிகுல மகிலம் ஹநூமதங்க்ரிம்—திருமலையில் வாநரவர்க்கமெல்லாம் ஆணையிடவேண்டிய ப்ரகரணங்களிலே திருவடியின் ஸ்ரீபாதத்திலாணை என்னுமாம்;

ஸ்வகுலபஜாம்பவதஸ் தஹைவ பல்லாஃ— கரடிகளெல்லாம் தங்கள் குலக்கொழுந்தான ஜாம்பவான்மேல் ஆணையிடுமாம்.

க்ருத்ராஃ நிஜகுலபஜடாயுஷஃ— கழுகுகளெல்லாம் தங்கள் குலத்தரசனான ஜடாயுவின் மேல் ஆணையிடுமாம்.

கஜாஃ ஸ்வகுலபதேஃ கஜேந்த்ரநாம்நஃ—யானைகளெல்லாம் தங்கள் குலபதியான கஜேந்திராழ்வான்மேல் ஆணையிடுமாம்.

முதல் பாதத்தில் அங்க்ரிம் என்பது வ்யஸ்த பதமாகவன்றிக்கே ஸமஸ்தபதமாயிருந்தாலும் மேல்பாதங்களிலுள்ள ஷஷ்ட்யந்த விசேஷ்ய பதங்களின் பக்கத்திலும் சேர்த்துக்கொள்ளத் தக்கது. ஜாம்பவதஃ அங்க்ரிம், ஜடாயுஷஃ அங்க்ரிம், கஜேந்த்ர நாம்நஃ அங்க்ரிம்—என்று கொள்க. ஜடாயு சப்தத்தை அதிமாநுஷஸ்தவத்தில் உகாராந்தமாக ப்ரயோகித்த இவர்தாமே இங்கு ஷகாராந்தமாக ப்ரயோகித்திருக்கையாலே இரண்டுபடியு முண்டென்று கொள்வது. ... ... ... (11)

वकुलधरसरस्वतीविषक्तस्वररसभावयुतासु किन्नरीषु ।
द्रवति दृषदपि प्रसक्तगानास्विह वनशैलतटीषु सुन्दरस्य ॥ १२ ॥

வகுலதரஸரஸ்வதீவிஷக்த ஸ்வரரஸ பாவயுதாஸு கிந்நரீஷு,
த்ரவதி த்ருஷதபி ப்ரஸக்தகாநாஸு இஹ வநசைலதடீஷு ஸுந்தரஸ்ய.()

திருமாலிருஞ்சோலைமலையிற் பெருகும் நூபுர கங்கைக்குத் தமிழில் சிலம்பாறு என்று திருநாமம். நூபுர மென்னும் வடசொல் சிலம்பென்று கிடப்பதாக யாவருமறிவர். ஆனாலும், சிலம்பென்கிற தமிழ்ச் சொல்லுக்கு மலையென்கிற பொருளும் தமிழ் நிகண்டுகளில் ப்ரஸித்தம். மூன்றாந் திருவந்தாதியில் *வேங்கடமே தீங்குழல் வாய்வைத்தான் சிலம்பு* என்ற பாசுரத்திலும் மலையென்கிற பொருளிலே சிலம்பென்கிற பதம் பிரயோகிக்கப்பட்டிருப்பது காணத்தக்கது. ஆழ்வான் இப்போது இப்பொருளைத் திருவுள்ளம் பற்றி இந்த ச்லோக மருளிச்செய்கிறபடி. சிலம்பு என்னப்படுகிற மலைதானே ஆறாகவுருகிப் பெருகினபடியாலே சிலம்பாறு என்னப் பெற்றது போலும் என்று இப்படிப்பட்ட உல்லேகம் இப்போது ஆழ்வான் திருவுள்ளத்திலோடுகின்றது. மலை ஆறாகவுருகிப் பெருகவேண்டிய காரணமென்னென்ன, அது தன்னைச் சொல்லுகிறதாய்த்து இந்த ச்லோகம் முழுவதும்.

கிந்நரஸ்த்ரீகள் அழகரை ஸேவிக்க இத்திருமலையில் தாழ்வரைகளிலே வந்து சேர்ந்து, நம்மாழ்வார் இத்திருப்பதி விஷயமாக அருளிச்செய்த *கிளரொளியிளமை* *முடிச்சோதியாய் *செஞ்சொற்கவிகாள்* என்கிற திருவாய்மொழிகளை ஸுஸ்வரமாகவும் ரஸவத்தரமாகவும் ஸாபிப்ராயமாகவும் பாடுகிறார்களாம்; *மரங்களு மிரங்கும் வகை மணிவண்ணவோவென்று கூவுமால்* என்னும்படியான அருளிச் செயல்களை அப்படி பாடும்போது கல்லும் உருகாநின்றது; உருகினவதுதானே ஆறாய்ப் பெருகிற்று—என்கிறார்.

வகுலதராஸரஸ்வதீவிஷக்த—மகிழ்மாலை மார்பினரான நம்மாழ்வாருடைய திருவாய்மொழியில் ஸம்பந்தித்திருக்கிற,

ஸ்வரரஸ பாவயுதாஸு கிந்நரீஷு—ஸ்வரங்கள் ரஸங்கள் கருத்துகள் ஆகிய இவற்றோடு கூடினவர்களான கின்னர மாதர்கள்,

ஸுந்தரஸ்மு இஹ வநசைலதடீஷு—அழகருடைய திருமலைத் தாழ்வரைகளிலே,

ப்ரஸக்த கானாஸு ஸதீஷு—அவ்வருளிச் செயல்களைப் பாடாநின்றவளவில்,

த்ருஷதபி த்ரவதி—கல்லும் கரையா நின்றது. (அதுவே சிலம்பாறென்று பேர் பெற்றதென்பதாகப் பூரித்துக் கொள்வது.) .... ... (12)

भृङ्गी गायति हंसतालनिभृतं तत्पुष्णती कोकिलाऽप्युद्गायत्यथ वल्लितल्लजमुखाद्दास्रं मधु स्यन्दते ।
निष्पन्दस्तिमिताः कुरङ्गततयश्शीतं शिलासैकतं सायाह्ने किल यत्र सुन्दरभुजस्तस्मिन्वनक्ष्माधरे ॥ १३ ॥

ப்ருங்கி காயதி ஹம்ஸதாள நிப்ருதம் தத் புஷ்ணதீ கோகிலாபி
உத்காயத்யத வல்லிதல்லஜமுகாத் ஆஸ்ரம் மது ஸ்யந்ததே,
நிஷ்பந்தஸ்திமிதா: குரங்கததயச் சீதம் சிலாஸைகதம்
ஸாயாஹ்நே கில யத்ர ஸுந்தரபுஜஸ் தஸ்மிந் வநக்ஷ்மாதரே. 13

சுந்தரத் தோளுடையான் எழுந்தருளி யிருக்கிற திருமலையிலே மாலைப் பொழுதுகளில் நிகழும்படிகளை ஸ்வபாவோக்தி முறையிலேயே யருளிச்செய்கிறார்.

ஹம்ஸதாள நிப்ருதம் யதாததா ப்ருங்கீ காயதி—ஹம்ஸ கதியானது தாளமாகவும் வண்டினம் முரல்வது ஸங்கீதமாகவும் ஆகா நின்றது. ஹம்ஸகதியைப்போலவே ஹம்ஸ ஸ்வநத்தையும் தாளமாகக் கொள்ளலாம். ஹம்ஸதாளத்திற்குப் பொருத்தமாக வண்டுபாடா நின்றதாம்.

கோகிலாபி தத் புஷ்ணதீஸதீ உத்காயதி—அந்த வண்டினம் முரல்வதை யநுஸரித்துக் குயில் பேடை தானும் உயரக் கூவாநின்றது.

அத வல்லிதல்லஜமுகாத் மது ஆஸ்ரம் ஸ்யந்ததே—செவிக்கினிதாகப் பாடுவாருண்டாகில் கேட்டு ஆனந்த பரீவாஹமாகக் கண்ணீரைப் பெருக்குவாருமுண்டே; அப்படியே இங்கு முண்டென்கிறது. சிறந்த கொடிகளில் நின்றும் மகரந்தமே அச்ருவாகப் பெருகுகின்றதாம். அத—கீழ்ச்சொன்ன ஸங்கீத ப்ரவ்ருத்திக்குப் பிறகு என்றபடி.

குரங்கததய: நிஷ்பந்தஸ்திமிதா:—உயர்ந்த ஸங்கீதத்தைக் கேட்டு ஸ்தம்பித் திருப்பாருமுண்டே, அப்படியு முண்டென்கிறது; கண்ணபிரான் குழலூதினபோது *மருண்டு மான்கணங்கள் மேய்கை மறந்து மேய்ந்த புல்லுங் கடைவாய் வழிசோர, இரண்டுபாடுந் துலுங்காப் புடை பெயரா எழுது சித்திரங்கள்போல நின்றனவே* என்கிறபடியே மான்கள் ஸ்தம்பித்திருந்ததுபோலவே இங்குமுள்ளது. நிஷ்பந்தத்வ

மாவது கரசரணாதிகளை அசைக்காமலிருத்தல்; ஸ்திமிதத்வமாவது இமைகொட்டாமலிருத்தல் என்று கொள்வது.

சிலாஸைகதம் சீதம்—கற்களும் மணல்களும் நீரைப் பெருக்கிக் குளிர்ச்சி பெற்றனவாயின. *ஸர்வோ த்வந்த்வோ விபாஷயா ஏகவத் பவதி* என்கிற பரிபாஷையினால் *சிலாஸைகத மென்கிற ஏகவசநம் உபபந்நம்.

ஏவம் ஸாயாஹ்நே யத்ர வநக்ஷ்மாதரே பவதி, தஸ்மிந் ஸுந்தரபுஜ: (விலஸதி)—இவ்வண்ணமாக மாலைப் பொழுதில் எந்தத் திருமலையில் நிகழ்கின்றதோ அந்தத் திருமலையில் சுந்தரத்தோளுடையானுளன். "யத்ர ஸுந்தரபுஜ: அஸ்தி, தஸ்மிந் வநக்ஷ்மாதரே ஸாயாஹ்நே ஏவம் பவதி" என்றும் யோஜித்துக் கொள்ளலாம். ... (13)

पीताम्बरं वरदशीतलदृष्टिपातमाजानुलम्बिभुजमायतकर्णपाशम् ।
श्रीमन्महावनगिरीन्द्रनिवासदीक्षं लक्ष्मीधरं किमपि वस्तु ममाविरस्तु ॥ १४ ॥

பீதாம்பரம் வரதசீதலத்ருஷ்டிபாதம் ஆஜாநுலம்பிபுஜமாயதகர்ணபாசம்,
ஸ்ரீமந்மஹாவநகிரீந்த்ர நிவாஸ தீக்ஷம் லக்ஷ்மீதரம் கிமபி வஸ்து மமாவிரஸ்து.

கீழ்ப் பதின்மூன்று ச்லோகங்களும் இந்த ஸ்தவத்திற்கு ப்ரவேசமபோலமைந்தன; திருமலையின் வளஞ் சொல்லித் தலைக் கட்டினாராயிற்று. இனி அழகருடைய துதியிலே யொருப்படுகிறார்.

கிமபி வஸ்து மம ஆவிரஸ்து— அழகரென்கிற ஒரு பரஞ்சோதி என் கண் முன்னே தெருஉளுள்ளே தோன்றக் கடவது: அதுதான் எப்படிப்பட்டதென்னில்;

பீதாம்பரம்— *பீதகவாடைப் பிரானார்* என்கிறபடியே பீதாம்பரதரமாயிருக்கும்.

வரதசீதலத்ருஷ்டிபாதம்— வேண்டுவார் வேண்டின வரங்களெல்லா மளிக்கவல்லதாய் சீதளமான கடாக்ஷ வீக்ஷணத்தை யுடையதாயிருக்கும்;

ஆஜாநுலம்பிபுஜம்— முழந்தாளளவும் தொங்குகின்ற புஜங்களை யுடைத்தாயுமிருக்கும்;

ஆயதகர்ணபாசம்— தோளளவும் நீண்ட திருச் செவிமடல்களையுடைத்தாயுமிருக்கும்;

ஸ்ரீமந்மஹாவநகிரீந்த்ரநிவாஸதீக்ஷம்— திருமாலிருஞ்சோலைமலையிலே நித்ய வாஸநிரதமாயுமிருக்கும்;

லக்ஷ்மீதரம்— *பூவார் திருமாமகள் புல்கிய மார்பதாயுமிருக்கும். ஆகவிப்படிப்பட்ட ஒரு விலக்ஷண வஸ்து அடியேனுக்கு விளங்கவேணு மென்றாராயிற்று. ... (14)

जनिजीवनाप्ययविमुक्तयो यतो जगतामिति श्रुतिशिरस्सु गीयते ।
तदिदं समस्तदुरितैकभेषजं वनशैलसम्भवमहं भजे महः ॥ १५ ॥

ஜநி ஜீவநாப்யய விமுக்தயோ யதோ
ஜகதாமிதி ச்ருதிசிரஸ்ஸு கீயதே,
ததிதம் ஸமஸ்த துரிதைகபேஷஜம்
வநசைலஸம்பவமஹம் பஜே மஹ:. 15

இனி வேதாந்த ப்ரக்ரியையாலே ஸ்துதிக்க உபக்ரமிக்கிறார்; *யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே, யேந ஜாதாநி ஜீவந்தி, யத் ப்ரயந்த்யபிஸம்விசந்தி, தத் ப்ரஹ்ம* என்று உபநிஷத்து ஓதின கட்டளையிலேயாகிறது.

ஜகதாம் ஜநிஜீவநாப்யய விமுக்தய:— ஜகத்துக்களுக்கெல்லாம் உத்பத்தி ஸ்திதிலயங்களும் மோக்ஷப்ராப்தியும்.

யதঃ இதி ச்ருதி சிரஸ்ஸு கீயதே — யாதொரு பரஞ்சோதியிடத்தினின்றுமாகின்றன வென்று வேதாந்தங்களிலே ஓதப்படுகின்றதோ,

ஸமஸ்த துரித ஏகபேஷஜம்—ஸகல பாபங்களுக்கும் அருமருந்தாய்,

வநசைலஸம்பவம்— திருமாலிருஞ் சோலைமலையிலே தோன்றிற்றாகவுள்ள,

ததிதம் மஹ:—அப்படிப்பட்ட பரஞ்சோதியை,

அஹம் பஜே— நான் பஜிக்கிறேன்.

முதற்பாதத்தின் முடிவில் (யதঃ) என்றருளிச் செய்தது *யதோ வா இமாநி பூதாநி* என்கிற உபநிஷத் வாக்யத்திற்கு ப்ரத்யபிஜ்ஞாபகமாகும். அந்த ச்ருதிவாக்யத்தில் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் மாத்திரமே சொல்லப்பட்டிருந்தாலும் *அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி* இத்யாதி கீதாஸித்தமான விமுக்தியையும் சேர்த்து "ஜநிஜீவநாப்யயவிமுக்தயঃ" என்றருளிச் செய்தாராயிற்று. அது தோன்றவே கீயதே என்று ப்ரயோகித்தருளிற்று. எம்பெருமானுக்குள்ள மோக்ஷப்ரதத்வத்தை ஸ்திதி ஸம்ஹாரங்களுள் ஏதேனுமொன்றிலே அடக்கிவிடலாமானாலும் *வீடாம் தெளிதருநிலைமையது ஒழிவிலன்* என்று ஆழ்வார் அந்த மோக்ஷப்ரதத்வத்தைத் தனியே அருளிச் செய்ததை யடியொற்றி ஆசாரியர்களும் அதனைத் தனிப்படவே அருளிச் செய்து போருவர்கள். *த்வதாச்ரிதாநாம் ஜகதுத்பவஸ்திதி ப்ரணாச ஸம்ஸாரவிமோசந* என்று ஆளவந்தாரருளிச் செய்ததும் காண்க.

ஆக, ஸகல ஜகத்துக்களுக்கும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரகாரகமாய், ஸர்வபாப நிவாரண பூர்வக மோக்ஷப்ரதாநத்திற்கும் கடவதாக வேதாந்த ஸித்தமான பரஞ்சோதி திருமாலிருஞ் சோலைமலையிலே உறைகின்றதென்றதாயிற்று ... ... (15)

सद्ब्रह्मात्मपदैस्त्रयीशिरसि यो नारायणोक्त्या तथा व्याख्यातो गतिसाम्यलब्धविषयानन्यत्वबोधोज्ज्वलैः ।
निस्तुल्याधिकमद्वितीयममृतं तं पुण्डरीकेक्षणं प्रारूढश्रियमाश्रये वनगिरेः कुञ्जोदितं सुन्दरम् ॥ १६ ॥

ஸத்ப்ரஹ்மாத்மபதைஸ் த்ரயீசிரஸி யோ நாராயணோக்த்யா ததா
வ்யாக்க்யாதோ கதிஸாம்யலப்தவிஷயாநந்யத்வ போதோஜ்ஜ்வலை:,
நிஸ்துல்யாதிகமத்விதீயமம்ருதம் தம் புண்டரீகேக்ஷணம்
ப்ராரூடச்ரியமாச்ரயே வநகிரே: குஞ்ஜோதிதம் ஸௌந்தரம். 16

பரப்ரஹ்மத்தினுடைய ஸ்வரூப ரூபகுண விபூத்யாதிகளை ஸம்சய விபர்யயமற நிர்ணயிக்கவேண்டும்போது ஸகல சாகா ப்ரத்யயந்யாயத்தாலும் ஸகல வேதாந்த ப்ரத்யயந்யாயத்தாலும் செய்யவேணும்; அதில் ஸகல சாகாப்ரத்யயந்யாயமாவது— ஒரு வாக்கியத்திலே ஓரர்த்தத்தைச் சொன்னால் அதினுடைய அங்கோபாங்காதிகளை நேராக அறிகைக்காக சாகாந்தரங்களெல்லாவற்றிலும் ஸஞ்சரித்து அவற்றில் சொல்லுகிற அர்த்தங்களிலும் ஜ்ஞானம் பிறந்து அவ்வர்த்தங்களுக்கு அந்யோந்ய விரோதங்களையும் சமிப்பித்து தனக்கபிமதமான அங்கியோடே சேருமவற்றைச் சேர்க்கை. இனி, ஸகல வேதாந்த ப்ரத்யயந்யாயமாவது— ஒரு வேதாந்தத்திலே ஒரு வாக்யம் ஓரர்த்தத்தைச் சொன்னால் அல்லாத வேதாந்தங்களிலும ஸஞ்சரித்து அவற்றில் சொல்லுகிற அர்த்தங்களுக்கு அந்யோந்ய விரோதம் பிறவாதபடி விஷய விபாகம் பண்ணி, தனக்கு அபிமதமான அர்த்தங்களோடே சேருமவற்றைச் சேர்க்கை. இப்

டிப்பட்ட நியாயங்களையே இந்த ச்லோகத்தில் (கதிஸாம்ய) என்கிற பதத்தாலே விவக்ஷிக்கிறார்.

சாந்தோக்யத்திலே *ஸதேவ ஸோம்ய இதம் அக்ர ஆஸீத் ஏகமேவ அத்விதீயம்* என்று காரணவஸ்துவொன்று நிர்தேசிக்கப்பட்டது; இதில் ஸத் என்னும் சப்தமானது ஒரு வ்யக்தி விசேஷத்தைக் குறிப்பிட மாட்டாதே 'உள்ளதான வஸ்து' என்று இவ்வளவையே தெரிவித்ததாகும். அதற்குமேல் வாஜஸநேயகத்திலே *ப்ரஹ்ம வா இதமேவ அக்ர ஆஸீத்* என்று அந்த காரண வஸ்துவானது ப்ரஹ்ம சப்தத்தாலே நிர்தேசிக்கப்பட்டது. இதுவும் ஒரு வ்யக்தி விசேஷத்தைக் குறிப்பிட மாட்டாதே ப்ருஹத்தான வஸ்துவென்று இவ்வளவையே தெரிவித்ததாகும். சாந்தோக்யத்தில் ஸத் என்னும் சப்தத்தாலே குறிக்கப்பட்ட காரண வஸ்துவானது சிறியதா? பெரியதா? என்று ஸந்தேஹம் விளைந்தவளவிலே, அது சிறியதன்று பெரியதே என்று இவ்வளவே வாஜஸநேயகத்தில் தெரிவிக்கப்பட்டதாயிற்று. அவ்விடத்திலே ஸர்வசாகாப்ரத்யய ந்யாயத்தாலே காரண வாக்கியங்களெல்லாவற்றுக்கும் ஏக விஷயத்வம் வேண்டுகையாலே *பசும் ஆலபேத* என்றவிடத்தில் ஸாமாந்யமான பசு சப்தம் *ச்சாகோ வா மந்த்ர வர்ணாத்* என்கிற ஸூத்ரத்தில் விசேஷோபஸ்தாபகமான ச்சாக பசுவிலே பர்யவஸிக்குமதாக நிர்ணயிக்கப்பட்ட கணக்கிலே, இங்கும் ஸாமாந்யமான ஸச்சப்தத்துக்கு வாச்யமான காரண வஸ்துவானது விசேஷோபஸ்தாபக ப்ரஹ்மசப்த வாச்யமென்று நிச்சயிக்கப்படுகிறது. இந்த ப்ரஹ்ம சப்தமானது *மம யோநிர் மஹத் ப்ரஹ்ம* என்றும் *தத் ஜ்ஞாநம் ப்ரஹ்மஸம்ஜ்ஞிதம்* என்றும் சொல்லுகிறபடியே சேதந அசேதந ஸாதாரணமாகையாலே காரணவஸ்துவானது சேதநமா அசேதநமாவென்கிற ஸந்தேஹம் தீராமலிருந்தது. ஐதரேயத்திலே *ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத்; நாந்யத் கிஞ்சந மிஷத்* என்று சேதனனுக்கே அஸாதாரணமான ஆத்ம சப்தத்தாலே விசேஷித்தது. இந்த ஆத்ம சப்தமும் வ்யக்தி விசேஷ நிர்ணாயகமாக மாட்டாது; ஆத்மாக்களில் வைத்துக்கொண்டு ஜகத் காரண பூதர் ஆரென்று விசேஷாகாங்க்ஷை பிறக்கும்; இந்திரனோ அக்நியோ ஆதித்யனோ சந்திரனோ வைச்ரவணனோ வருணனோ வாயு யம ப்ரப்ருதிகளான தேவதா விசேஷங்களோ வென்னில்; அவையொன்றுமன்று, நாராயணனே — என்னுமிடத்தை நாராயணாநுவாகமும் ஸுபாலோபநிஷத்து முதலியனவும் நிஷ்கர்ஷித்துக் கொடுத்தன. இவ்விஷயமே இந்த ச்லோகத்தில் பூர்வார்த்தத்தாலே பேசப்பட்டது.

[கதிஸாம்யலப்த விஷயாநந்யத்வ போதோஜ்ஜ்வலை: இத்யாதி] காரண வாக்கியங்களுக்கெல்லாம் விஷயம் ஒன்றேயாயிருக்கவேண்டுகையாலே, காரண வஸ்துவைச் சொல்லுமிடங்களில் ஸச்சப்த—ப்ரஹ்மசப்த—ஆத்ம சப்தங்களாலே ஸாமாந்யமாகச் சொல்லப்பட்ட வஸ்துவானது *ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசாந:* இத்யாதிகளில் ஸுஸ்பஷ்டமான நாராயண சப்தத்தாலே விசேஷித்து விசதீகரிக்கப்பட்டதாயிற்று. அந்த நாராயணனே திருமாலிருஞ்சோலையில் ஸேவைஸாதிக்கக் காண்கிறோமென்று உத்தரார்த்தத்தாலே அருளிச் செய்கிறார். *ஏஷ ஈச இதி நிர்ணயம் த்ரயீபாகதேயரஹிதஷேு நோ நிசேத், ஹஸ்திதாமநி ந நிர்ணயேத க: தேவராஜம் அயமீச்வரஸ் த்விதி* என்று வரதராஜஸ்தவத்தில் அருளிச்செய்த கணக்கிலே வேதாந்தங்களிலே நமக்குப் பரதத்வ நிஷ்கர்ஷம் ஆயாஸ பஹுளமாயிருந்தாலும் திவ்யதேசத்தில் நிலைகளிலே அது மிகவெளிது என்று நிரூபிப்பதே இந்த ச்லோகத்தின் பரமதாற்பரியமாகும்.

நிஸ்துல்யாதிகம்—*ஒத்தார் மிக்காரை யிலையாய மாமாயா* என்கிறபடியே ஒத்தாரும் மிக்காருமில்லாதவனென்கை. ஒத்தாரில்லையென்றபோதே மிக்காரில்லை யென்னுமிடம் தன்னடையே ஸித்தமாயிருக்க, மிக்காரில்லையென்று தனிப்படச் சொல்லவேணுமோவென்று சங்கைதோன்றும்; *ந தத்ஸமச்ச அப்யதிகச்ச த்ருச்யதே* என்று

உபநிஷத்து ஓதிக்கிடக்கையாலே அதைத் தழுவி அருளிச்செய்தபடியென்று ஸமாதானம் கூறுவர். உபநிஷத்துத்தான் அங்ஙனே ஏன் ஓதிற்று? என்று கேள்வி பிறக்குமே; கேண்மின்; அலங்கார சாஸ்த்ரத்தில் அநந்வயமென்று ஓர் அலங்காரமுண்டு; "உபமாநோபமேயத்வம் யதேகஸ்யைவ வஸ்துநः" என்பது அதன் லக்ஷணம். "இந்துரிந்துரிவ ஸ்ரீமாந்—ககநம் ககநாகாரம் ஸாகரஸ் ஸாகரோபமः, ராமராவணயோர் யுத்தம் ராமராவணயோரிவ" என்று லக்ஷ்யங்களுமுள்ளன. அந்தரீதியில் 'எம்பெருமான் எம்பெருமானையேயொப்பன்' என்று சொல்லக் குறையில்லை; ஆழ்வார்களும் "தானே தனக்கு உவமன்" என்றும் "தன்னொப்பான் தானுயுளன்காண்" என்றும் இதனையே யருளிச்செய்தார்கள். ஆகவே இப்படி ஸத்ருசவ்யக்தி ஸித்தியுண்டானாலும் அதிக வ்யக்தி ஸித்தி அஸம்பாவித மென்க.

அத்விதீயம் அம்ருதம்—*ரஸோ வை ஸः* என்றும் *எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே திருமாலிருஞ்சோலைக் கோனே* என்றும் சொல்லுகிறபடியே விலக்ஷண திவ்யாம்ருதம்போலே பரமபோக்யன்.

புண்டரீகேக்ஷணம்—*தாமரைபோற் கண்ணன். *தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகம் ஏவமக்ஷிணீ* என்கிற உபநிஷத்திலே நோக்கு.

ப்ராரூட ச்ரியம்— *நாறு நறும்பொழில் மாலிருஞ் சோலை நம்பிக்கு* என்கிற பாசுரத்தில் *ஏறுதிருவுடையான்* என்று ஆண்டாளருளிச் செய்த திருநாமத்திற்கு இது ஸம்ஸ்க்ருத வ்யபதேசம். மேலே *ஆரூட ஸ்ரீः* என்றும் *ஆரூடலக்ஷ்மயா ஹரேः* என்றும் அருளிச் செய்கிருர். பிராட்டி தானே ஸ்வயம்வரித்து வந்து சேரப் பெற்ற பெருமாளென்றபடி.

வநகிரேः குஞ்ஜோதிதம் ஸுந்தரம் ஆச்ரயே—குஞ்ஜமாவது லதாக்ருஹம்; அதிலே ஸேவை ஸாதிக்கின்ற அழகரை அடிபணிகின்றேனென்றுராயிற்று. ... (16)

पतिं विश्वस्यात्मेश्वरमिति परं ब्रह्म पुरुषः परं ज्योतिस्तत्त्वं परमिति च नारायण इति ।
श्रुतिर्ब्रह्मेशादींस्तदुदितविभूतींस्तु गृणती यमाहारूढश्रीस्स वनगिरिधामा विजयते ॥ १७ ॥

பதிம் விச்வஸ்யாத்மேச்வரமிதி பரம் ப்ரஹ்ம புருஷः
பரம் ஜ்யோதிஸ் தத்வம் பரமிதி ச நாராயண இதி,
ச்ருதிர் ப்ரஹ்மேசாதீந் ததுதிதவிபூதீம்ஸ்து க்ருணதீ
யமாஹாரூடஸ்ரீஸ் ஸ வநகிரிதாமா விஜயதே. 17

இந்த ச்லோகத்தில் பூர்வார்த்தம் முழுதும் உபநிஷத் வாக்யகண்டாநுவாதம். *பதிம் விச்வஸ்யாத்மேச்வரம்* என்றும், *நாராயணபரம் ப்ரஹ்ம* என்றும், *விச்வமேவேதம் புருஷः* என்றும், *பரம் ஜ்யோதிருபஸம்பத்ய* என்றும், *தத்வம் நாராயணः பரः* என்றும், *நாராயண ஏவேதம் ஸர்வம்* என்றும் இங்ஙனேயுள்ள ச்ருதிவாக்யங்களைச் சேர்த்து அருளிச் செய்திருக்கிறபடி.

இதி ச்ருதிः— பூர்வார்த்தத்தில் உதாஹரிக்கப்பட்ட ச்ருதிவாக்யங்களானவைஎன்றபடி.

ப்ரஹ்மேசாதீந் ததுதிதவிபூதீந் க்ருணதீ ஸதீ— பிரமன் சிவன் முதலிய தேவர்களை பகவத் விபூதிகளாகவே தெரிவித்ததாய்க் கொண்டு;

யம் ஆஹ—யாவனொரு திருமாலிருஞ்சோலை யழகரைப் பேசி நின்றதோ; * நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே, நாராயணாத் ருத்ரோ ஜாயதே*. இத்யாதிச்ருதிகளாலே ப்ரஹ்மாதி தேவர்கள் பகவத் விபூதிகளாகவே சொல்லப்பட்டார்களிறே.

ஸ: ஆருடஸ்ரீ: வநகிரிதாமா விஜயதே— வேதாந்த ஸித்தனை அந்த எம்பெருமானே ஏறுதிருவுடையானென்கிற திருநாமத்தோடே தெற்குத் திருமலையிலே ஸர்வோத்கர்ஷசாலியாக விளங்காநின்றுரென்றதாயிற்று.

[तदुदितेत्यादि.] विभूतिर्नाम विभवः; तच्छब्दार्थो नारायणः । नारायणाधीनविभवान् इत्यर्थः । नरत्वशङ्कास्पदभूतानां ब्रह्मरुद्रादीनामपि यद्विभूतित्वम् , यस्य च सर्वस्मात्परत्वं श्रुतिरेव प्राह, स वनगिरिधामा सन् विजयते इत्युक्तं भवति ॥ .... .... .... . (17)

पृथिव्याद्यात्मान्तं नियमयति यस्तत्त्वनिकरं तदन्तर्यामी तद्वपुरविदितस्तेन भगवान् ।
स एष स्वैश्वर्यं नविजहदशेषं वनगिरिं समध्यासीनो नो विशतु हृदयं सुन्दरभुजः ॥ १८ ॥

ப்ருதிவ்யாத்யாத்மாந்தம் நியமயதி யஸ் தத்வநிகரம்
ததந்தர்யாமீ தத்வபுரவிதிதஸ் தேந பகவாந்,
ஸ ஏஷ ஸ்வைச்வர்யம் நவிஜஹதசேஷம் வநகிரிம்
ஸமத்யாஸீநோ நோ விசது ஹ்ருதயம் ஸுந்தரபுஜ:. 18

***— இந்த ச்லோகத்திலும் பூர்வார்த்தத்தாலே உபநிஷத் விசேஷத்தின் பொருளையே அநுவதிக்கிறார். * यः पृथिव्यां तिष्ठन् पृथिव्या अन्तरो यं पृथिवी न वेद यस्य पृथिवी शरीरं यः पृथिवीमन्तरो यमयति * என்று தொடங்கி * य आत्मनि तिष्ठन् आत्मनोऽन्तरः यमात्मा न वेद यस्यात्मा शरीरं य आत्मानमन्तरो यमयति * என்பதீருக அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் சொன்னபடி யாவனொரு பகவான் ப்ருதிவி முதல் ஆத்மா வரையிலுமுண்டான தத்வங்களை ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கு சக்தமாம்படி செய்தருளுகிறானோ; அதுதான் எங்ஙனே யென்னில்; ஒவ்வொரு தத்வத்திலும் அந்தர்யாமியாய்க் கொண்டும், அந்தந்த தத்வங்களை சரீரமாகவுடையனாய்க் கொண்டும்; அந்தந்த தத்வஸமூஹத்தாலே அறியப்படாதவனாய்க் கொண்டும் நியமிக்கிறனாயிற்று. இப்படி உபநிஷத் ப்ரதிபாதிதனை எம்பெருமான் தன்னுடைய பாரமேச்வரப்ரகார மொன்றையும் விடாமல் திருமாலிருஞ் சோலைமலையில் கோயில் கொண்டிரா நின்ற சுந்தரத் தோளுடையானே. அப்பெருமான் நம்முடைய உள்ளத்துள்ளே புகுந்து வர்த்திக்கக்கடவன் என்கிறார்.

ய: பகவாந் ப்ருதிவ்யாதி ஆத்மாந்தம் தத்வநிகரம்-- ததந்தர்யாமீ ஸந் தத்வபுஸ்ஸந் தேந அவிதிதஸ்ஸந் நியமயதி— யாவனொரு பகவான் அந்தர்யாமிப்ராஹ்மண மெடுத்தோதிய கட்டளையிலே ப்ருதிவி முதல் ஆத்மாவளவுமுண்டான தத்வங்களை யெல்லாம் அந்த தத்வங்களில் அந்தர்யாமியாய்க் கொண்டும், அவற்றை சரீரமாகக் கொண்டு அவற்றுக்குத் தான் சரீரியாயும், அவற்றால் 'இவன் நம் முள்ளே யுறைகின்றான்' என்று அறியப்படாதவனாயும், [தத்வநிகரம் நியமயதி] அவற்றின் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளை நிர்வஹித்துக் கொண்டு போருகிறானோ;

ஸ ஏஷ:— இப்படி ச்ருதிப்ரதிபாதிதனை எம்பெருமான்;

ஸ்வைச்வர்யம் அசேஷம் நவிஜஹத்— பகவத்கீதையில் நாலாமத்யாயத்தில் *அஜோபி ஸந் அவ்யயாத்மா பூதாநாமீச்வரோபி ஸந், ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாமி ஆத்மமாயயா* என்று சொன்னபடியும்,* ஆதியஞ்சோதியுருவை அங்கு வைத்திங்குப் பிறந்த* என்று ஆழ்வாரருளிச் செய்தபடியும் தன்னுடையதான பாரமேச்வர ப்ரகாரமொன்றையும் விடாதானாய்க் கொண்டு. ('நவிஜஹத்' என்றவிடத்தில் நைக சப்தத்திற் போலே நசப்தேந ஸமாஸ மென்றுணர்க.)

வநகிரிம் ஸமத்யாஸீநः ஸுந்தரபுஜः— திருமாலிருஞ் சோலை மலையைக் குலவிருக்கையாகக் கொண்டிருக்கின்ற ஸுந்தரபாஹு ;

நः ஹ்ருதயம் விசது— நம்முடைய ஹ்ருதயத்தினுள்ளே புகுந்து வர்த்திப்பானாக. *மலை மேல் தானின்று என் மனத்துளிருந்தானை* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்திலே நோக்கு. "அங்குத்தை வாஸம் ஸாதநம், இங்குத்தை வாஸம் ஸாத்யம்" என்ற ஸ்ரீவசநபூஷண ஸூக்தியும் இங்கே அநுஸந்தேயம். .... .... (18)

प्रत्यगात्मनि कदाऽप्यसंभवद्भूमभूमिमभिवक्ति यं श्रुतिः ।

तं वनाद्रिनिलयं सुसुन्दरं सुन्दरायतभुजं भजामहे ॥ १९ ॥

ப்ரத்யகாத்மநி கதாப்யஸம்பவத்பூமபூமிமபிவக்தி யம் ச்ருதி:,

தம் வநாத்ரிநிலயம் ஸுஸுந்தரம் ஸுந்தராயதபுஜம் பஜாமஹே. (19)

கீழ்ச்லோகத்தில் ஸகல சேதநாசேதந அந்தர்யாமித்வத்தை யருளிச் செய்தார் ; அப்படி அந்தர்யாமியாயிருக்கச் செய்தேயும் தத்கததோஷங்களாலே அஸம்ஸ்ப்ருஷ்டனா யிருக்கையாகிற ஹேயப்ரத்யநீகத்வமும் கல்யாணைகதாநத்வமும் ஜீவாத்மாவுக்கு ஒருகாலும் அஸம்பாவிதமாய் பகவானுக்கே அஸாதாரணமாயிருக்கிறபடியை இந்த ச்லோகத்திலருளிச் செய்கிறார்.

ச்ருதி:— *ஏஷ ஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:* இத்யாதி உபநிஷத்வாக்யம் இங்கு ச்ருதிசப்தவிவக்ஷிதம். இப்படிப்பட்ட ச்ருதியானது ;

யம் பகவந்தம்— யாவனொரு பகவானை ;

ப்ரத்யகாத்மநி கதாபி அஸம்பவத்பூமபூமிம் அபிவக்தி— ஜீவாத்மாவினிடத்தில் முக்தி தசையிலுங்கூட ஸம்பவிக்கமாட்டாததான அதிசயங்களுக்கு ஆஸ்பத பூதனாக ஓதியிராநின்றதோ ;

[தம் வநாத்ரிநிலயம் இத்யாதி.] அந்த பகவான் தானே தெற்குத் திருமலையில் சுந்தரத் தோளுடையானாக ஸேவை ஸாதிக்கின்றான் ; இங்கே நம்முடைய பக்தியைச் செலுத்தக்கடவோமென்கை.

இந்த ச்லோகத்தில் பூம சப்த நிர்தேசம் செய்தருளியிருக்கையாலே ப்ரஹ்ம ஸூத்ரத்தில் முதலத்யாயத்தின் மூன்றுவது பாதத்திலுள்ள பூமாதிகரணத்தின் ப்ரமேயம் இங்கு விவக்ஷித மென்னலாம். "भूमगुणविशिष्टो न प्रत्यगात्मा ; अपि तु परमात्मा" இத்யாதி ஸ்ரீபாஷ்ய ஸூக்திகள் இங்கே அநுஸந்தேயம். ... ... (19)

वन्देय सुन्दरभुजं भुजगेन्द्रभोगसक्तं महावनगिरिप्रणयप्रवीणम् ।

यं तं विदुर्दहरमष्टगुणोपजुष्टम् आकाशमौपनिषदीषु सरस्वतीषु ॥ २० ॥

வந்தேய ஸுந்தரபுஜம் புஜகேந்த்ரபோக
ஸக்தம் மஹாவநகிரிப்ரணயப்ரவீணம்,
யம் தம் விதுர் தஹரமஷ்டகுணோபஜுஷ்டம்
ஆகாசம் ஔபநிஷதீஷு ஸரஸ்வதீஷு. (20)

* * *— சாந்தோக்யத்தில் * अथ यदिदमस्मिन् ब्रह्मपुरे पुण्डरीकं वेश्म दहरोऽस्मिन्नन्तर आकाशस्तस्मिन् यदन्तस्तदन्वेष्टव्यं तद्वाव विजिज्ञासितव्यम् * என்று ஓதினவிடத்தில் ஹ்ருதய புண்ட

ரீக மத்யத்திலுள்ளதாய் தஹராகாச மென்னப்பட்டதான வஸ்து பூதாகாசமா? ஜீவனா? பரமாத்மாவா? என்று சங்கித்துக்கொண்டு, மேலே யெடுத்துக் காட்டப்பட்ட சாந்தோக்ய வாக்யத்தில் மேலே * य एष आत्मा अपहतपाप्मा विजरो विमृत्युर्विशोकोऽविजिघत्सोऽपि-पासस्सत्यकामस्सत्यसंकल्पः * என்று அஷ்டகுணமுடைமை சொல்லியிருக்கையாலே அது பரமாத்மாவுக்கே ஸம்பவிக்குமதாகையாலே தஹராகாச சப்தவாச்யன் பரமாத்மாவேயாகக்கடவன் என்று "தஹர உத்தரேப்ய:" என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தின் ஸ்ரீபாஷ்யத்திலே பரக்க உபபாதிக்கப்பட்டுள்ள அர்த்த விசேஷத்தை ஸங்க்ரஹிக்கிறதாயிற்று இந்த ச்லோகம். அந்த ஸூத்ரத்தின் ப்ரமேயமே இதில் உத்தரார்த்தத்திலுள்ளது.

ஔபநிஷதீஷு ஸரஸ்வதீஷு— உபநிஷத்வாக்யங்களிலே;

அஷ்டகுணோபஜுஷ்டம் தஹரமாகாசம் யம் விது:— அபஹதபாப்மத்வம் முதலாக ஸத்ய ஸங்கல்பத்வமீறாக அஷ்ட குணங்களோடு கூடினவனாக எந்த பரமபுருஷனை வைதிகர்கள் அறிகின்றார்களோ;

தம் ஸுந்தரபுஜம் வந்தேய— அந்த பரமபுருஷனே ஸுந்தரபாஹுவாக ஸேவை ஸாதிக்குமிடத்திலே ஸேவிக்கக்கடவேனென்கை. அவர் எப்படிப்பட்டவரென்னில்;

புஜகேந்த்ரபோகஸக்தம்—அரவணைமேல் பள்ளிகொண்டருளுமவரென்கை. ஸர்ப்பத்தின் உடலுக்கு போக மென்று பெயர்.

மஹாவநகிரிப்ரணயப்ரவீணம்— திருமாலிருஞ் சோலைமலைவாஸத்தில் ரஸிகராயுமிருப்பர் என்றபடி. புஜகேந்த்ர போகஸக்தத்வம் இத்திருமலையில் நின்ற நிலைதன்னிலே இல்லையாகிலும் அது பகவானுக்கு ஐகாந்திகமென்கிற ப்ரதிபத்தியாலே அருளிச் செய்யக் குறையில்லை. ஸ்ரீஹஸ்திசைலசிகரோஜ்ஜ்வல பாரிஜாதமான தேவப்பெருமாளை *அணி மணியின் துத்திசேர்நாகத்தின் மேல் துயில்வான்* என்று பூதத்தாழ்வாரும், *அநந்தசயம் த்வாம்* என்று இவ்வாழ்வான் தாமும் சேஷசாயியாகச் சொன்னவை இங்கு அநுஸந்தேயம். ... ... ... (20)

यत्स्वायत्तस्वरूपस्थितिकृतिकनिजेच्छानियाम्यस्वशेषानन्ताशेषप्रपञ्चस्तत इह चिदिवाचिद्पूर्वाचिशब्दः ।
विश्वैश्शब्दैः प्रवाच्यो हतवृजिनतया नित्यमेवानवद्यस्तं वन्दे सुन्दराह्वं वनगिरिनिलयं पुण्डरीकायताक्षम् ॥२१॥

யத் ஸ்வாயத்த ஸ்வரூப ஸ்திதிக்ருதிக நிஜேச்சா நியாம்யஸ்வசேஷ
அநந்தாசேஷப்ரபஞ்சஸ் தத இஹ சிதிவாசித்வபூர்வாசிசப்தை:,
விச்வைச் சப்தை: ப்ரவாச்யோ ஹதவ்ருஜிநதயா நித்யமேவாநவத்ய:
தம் வந்தே ஸுந்தராஹ்வம் வநகிரிநிலயம் புண்டரீகாயதாக்ஷம். (21)

***—இந்த ச்லோகத்தினால் அத்வைத ச்ருதி நிர்வாஹம் காட்டியருளுகிறார். *ததேவாக்நிஸ் தத் வாயுஸ் தத் ஸூர்யஸ் தது சந்த்ரமா:* என்றும் *ஜ்யோதீம்ஷி விஷ்ணுர் புவநாநி விஷ்ணுர் வநாநி விஷ்ணுர் கிரயோ திசச் ச* என்றும் ஸர்வ பதார்த்த ஸாமாநாதிகரண்யேந எம்பெருமானைச் சொல்லியுள்ளவிடங்களில் விசிஷ்டாத்வைத ப்ரக்ரியையாலே தெளிந்துகொள்ளவேண்டிய நிர்வாஹம் இதுவே காணீர். லோகத்தில் தேவமனுஷ்யாதி சரீரங்களைச் சொல்லவல்ல சப்தங்களைக் கொண்டு சரீரியான ஆத்மாவை வ்யபதேசிக்கக் காணுகின்றோம். "தேவோஹம், மநுஷ்யோஹம்" இத்யாதி வ்யவஹாரங்கள் ப்ரஸித்தங்கள். இங்கு தேவ மநுஷ்ய சப்தங்கள் தேவசரீர மநுஷ்ய சரீரங்களைச் சொல்லவல்லவையேயல்லது ஆத்மஸ்வரூபத்தைச் சொல்லவல்லவையல்ல. அஹமர்த்த பூதனான ஆத்மாவினிடத்தில் தேவ:, மநுஷ்ய: இத்யாதிபதங்களை ஸமாநாதிகரிப்பது எங்ஙனேயென்னில்; தேவசரீர விசிஷ்ட:, மனுஷ்ய சரீர விசிஷ்ட: என்றபடி.

யாதலால் குறையில்லை என்று நிர்வஹிக்கவேண்டும்; அதுபோலவே எம்பெருமான் விஷயத்திலும் சரீர சரீரிபாவப்ரயுக்தமாக அவ்வோவஸ்துக்களோடே அபேத வ்யபதே சம் பொருந்துமென்பதே நம் தர்சனத்தின் ஸாரார்த்தம். இதுவே இந்த ச்லோகத்தி லருளிச்செய்வதாம்.

இஹ—இந்த ஜகத்தில்;

அசித் வபுர்வாசி சப்தைஃ சித் இவ—அசித்பரிணாம பூத தேவமனுஷ்யாதி சரீரங்களைச் சொல்லக் கடவதான சப்தங்களாலே ஜீவாத்மா எப்படி சொல்லப்படுகிறானோ, அப் படி. அதாவது, ஸ்தூலோஹம், க்ருசோஹம் இத்யாதிவ்யவஹாரங்களில் ஸ்தூலத்வ மும் க்ருசத்வமும் ஆத்மாவிலுள்ள தன்றிக்கே சரீரத்திலுள்ளதாயிருக்கச் செய்தேயும் "அஹம் ஸ்தூலஃ, அஹம் க்ருசஃ" என்று சரீரத்ருஷ்ட்யா சொல்லுகிறாப்போலே யென்கை. இந்த த்ருஷ்டாந்தத்தைக் கொண்டு ஸாதிக்கப்படும் அம்சம் ஏதென்னில்;

விச்வைச் சப்தைஃ ப்ரவாச்யஃ—எம்பெருமான் ஸகல சப்த வாச்யனாகிறானென்பதுவே; இதுதனக்கு நிமித்தமேதென்னில்;

யத் ஸ்வாயத்த ஸ்வரூப ஸ்திதிக்ருதிக நிஜேச்சா நியாம்யஸ்வசேஷாநந்தாசேஷப்ரபஞ்சஃ ததஃ—யத் என்றது யாதொரு காரணத்தாலே யென்றபடி. அநந்தமாயுள்ள அசேஷ ப்ரபஞ்சமும் ஸ்வாயத்தஸ்வரூபஸ்திதி க்ருதிகமாய், நிஜேச்சாநியாம்யமாய், ஸ்வசேஷ மாய் இருக்கையாலே என்றபடி. " यस्य चेतनस्य यद् द्रव्यं सर्वात्मना स्वार्थे नियन्तुं धारयितुंच शक्यं तच्छेषतैकस्वरूपंच, तत्तस्य शरीरम् " என்பது சரீரலக்ஷணமாகையாலே இந்த லக்ஷணம் ஸமஸ்தப்ரபஞ்சத்தினிடத்திலும் ஸமந்விதமாகிறது. * स्वाधीनत्रिविधचेतनाचेतनस्वरूपस्थिति-प्रवृत्तिभेदम् * என்கிற கத்யஸூக்திப்படியே ஸகல ப்ரபஞ்சத்தினுடையவும் ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகள் எம்பெருமானதீநமாகையாலும் *அந்தஃ ப்ரவிஷ்டச் சாஸ்தா ஜநாநாம்* என்கிறபடியே ஸகல ப்ரபஞ்ச நியமநமும் அவனுடைய இச்சாதீநமாகை யாலும், இவையடங்கலும் அவனுக்கே சேஷமாகையாலும் அசேஷ ப்ரபஞ்சமும் சரீரலக்ஷண ஸமந்வயம் பெற்றதாயிற்று.

ததஃ விச்வைச் சப்தைஃ ப்ரவாச்யஃ—ஆகவே ஸர்வபதார்த்த வாசக ஸகல சப்தங்களோடும் எம்பெருமானை ஸமாநாதிகரிக்கக் குறையில்லையென்றபடி. ஸமாநவிபக்தியால் நிர்தேசிப்பது ஸமாநாதிகரண நிர்தேசமென்றும், வெவ்வேறு விபக்திகளால் நிர்தே சிப்பது வ்யதிகரண நிர்தேசமென்றும் வழங்கப்பெறும். "ஸகலம் ஜகத் பகவதஃ சேஷபூதம்" என்றால் இது வ்யதிகரண நிர்தேசம். "ஸகலம் ஜகத் பகவாந்" என்றால் இது ஸமாநாதிகரண நிர்தேசம். உண்மையில் வ்யதிகரண நிர்தேசம் ப்ராப்தமாயிருக்க ஸமாநாதிகரண நிர்தேசம் எங்ஙனே பொருந்தும்? என்கிற சங்கை வேதாந்தவ்யுத் பத்தியில்லாதவர்களுக்குத் தோன்றும் *ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம* ஐததாத்ம்ய மிதம் ஸர்வம் *தத் த்வமஸி* என்றிவை முதலான ச்ருதிகளை நிர்வஹிக்கும் வழியை யறிவார்க்கு ஸமாநாதிகரண நிர்தேசத்தோடு வ்யதிகரண நிர்தேசத்தோடு வாசியற இரண்டும் துல்யமாகவே தோன்றும். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரசதகத் தில் "தேஹோ தேஹிநி காரணே" "ஸ்தித்யுத்பத்தி ப்ரவ்ருத்தி" என்னுமிரண்டு ச்லோகங்களினால் இவ்விஷயத்தை விசததமமாக உபபாதித்தருளினார். அவ்விடத்து வியாக்கியானத்திலே மிக விரிவாக வுணர்த்தினோம், காண்க.

ஹ்ருதவ்ருஜிநதயா நித்யமேவாநவத்யஃ—*அபஹதபாப்மா*வாகையாலே எப்போதும் ஹேய ப்ரத்யநீகனாகவே யிருப்பன் என்றபடி. வ்ருஜிநமாவது பாபம்; ஹேயஸாமாந்யத்தை யும் சொல்லுகிறது. (ஹத) என்று பரத்வம்ஸாபாவம் சொல்லுகிறதன்று;

அத்யந்தாபாவமே இங்கு விவக்ஷிதம். இதனால் முக்த புருஷவ்யாவ்ருத்தி. தம் வநகிரிநிலயம் புண்டரீகாயதாக்ஷம் ஸுந்தராஹ்வம் வந்தே—ஆகவிப்படி வேதாந்த வேத்யனான எம்பெருமான் தாமரைக்கண்ணழகுடனே தெற்குத் திருமலையிலே ஸேவை ஸாதிக்குமிருப்பிலே ஸேவிக்கப்பெற்றேனென்கிறார்.

இச்லோகத்தில் முதல் பாதத்தில் க்ருதி சப்தம் ப்ரவ்ருத்தியைச் சொல்லுகிறது. திருவாய்மொழியில் *உயர்வற வுயர்நலமென்கிற முதற்பதிகத்தில் *நாமவனிவனுவன்* *அவரவர் தமதமது *நின்றனரிருந்தனர்* என்கிற மூன்று பாசுரங்களினால் ஸகல சேதநாசேதனங்களுடையவும் ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகள் எம்பெருமானதீனங்களென்று முறையே சொல்லி, அடுத்த பாசுரத்தில் *உடன் மிசையுயிரென* என்று ஜீவாத்மாவை த்ருஷ்டாந்தீகரித்து *உளன் சுடர்மிகு சுருதியுள்* என்று தலைக்கட்டினாராழ்வார்; அந்தச் சாயையிலேயே இந்த ச்லோகம் அமைந்திரா நின்றதாயிற்று. ... (21)

गुणजं गुणिनो हि मङ्गलत्वं प्रमितं प्रत्युत यत्स्वरूपमेत्य ।
तमनन्तसुखावबोधरूपं विमलं सुन्दरबाहुमाश्रयामः ॥ ॥ २२ ॥

குணஜம் குணிநோ ஹி மங்கலத்வம் ப்ரமிதம் ப்ரத்யுத யத்ஸ்வரூபமேத்ய,
தமநந்தஸுகாவபோதரூபம் விமலம் ஸுந்தரபாஹுமாச்ரயாமः. (22)

***—உலகில் நல்ல பதார்த்தங்களாயுள்ளனவென்று சிலவற்றை நாம் ஆதரிப்பது எதனாலேயென்னில்; அவற்றில் நல்ல குணங்களிருப்பதனாலே. மணி த்யுமணி சந்த்ர சந்தந சம்பக அரவிந்தாதிகளை மங்கள வஸ்துக்களாக நாம் சொல்வது அவற்றிலே ஒளியும் தண்ணளியும் நறுமணமுமாகிற மங்கல குணங்கள் இருப்பதுபற்றியேயன்றோ. ஆகவே லௌகிக வஸ்துக்களுக்குச் சொல்லும் மங்களத்வம் மங்கள குணவத்தாப்ரயுக்தமென்றதாயிற்று. இந்த ரீதியானது எம்பெருமான் பக்கலிலே விபரீதமாகக் கொள்ளத் தக்கதாயிரா நின்றது. ஸ்வதோ மங்களபூதனான எம்பெருமான் பக்கலிலே எவையெவையுள்ளனவோ, அவையெல்லாம் எம்பெருமானை ஆச்ரயிக்கப்பெற்ற ராஜகுல மாஹாத்ம்யத்தினாலேயே மங்களமாயின. பகவத்ஸம்பந்த பலத்தினாலே இவற்றுக்கு மங்களத்வமேயொழிய, இவற்றின் ஸம்பந்தத்தினால் பகவானுக்கு மங்களத்வம் என்பதில்லை—என்கிற தத்வார்த்தம் இந்த ச்லோகத்தில் அருளிச்செய்யப்படுகிறது.

குணிநः மங்கலத்வம் குணஜம் ஹி ப்ரமிதம்—(லோகே) என்று கூட்டிக்கொள்ளவேணும். ஸாமாந்யமாக உலகத்தில் குணவத்தாக வழங்கப்படுகிற வஸ்துஸமூஹத்திற்கு மாங்களிகத்வம் குணஸம்பந்த நிபந்தநமாகவன்றோ அறியப்பட்டுள்ளது. ப்ரமிதம் என்பது மத்யம தீபந்யாயத்தாலே முன்னும் பின்னும் அந்வயிக்கக்கடவது. (முதல் பாதத்திலும் அந்வயிக்கும், இரண்டாவது பாதத்திலும் அந்வயிக்கும் என்றபடி.)

ப்ரத்யுத யத்ஸ்வரூபமேத்ய—அந்த நியாயம் இங்கு விபரீதம்; பகவத்ஸ்வரூபத்தையாச்ரயித்தே அவ்வோகுணங்கள் நிறம்பெறுகின்றனவென்க. லோகவிலக்ஷணமாயிறே பகவத் விஷயந்தானிருப்பது.

அநந்தஸுகாவபோதரூபம்—அநந்த ரூபம், ஸுகரூபம், அவபோதரூபம் என்று யோஜித்துக்கொள்வது. தேசபரிச்சேத காலபரிச்சேத வஸ்துபரிச்சேதங்களில்லாமை அநந்தத்வமாவது. ஸுகரூபமென்றது ஆநந்தமயமென்றபடி. அவபோதரூபமென்றது ஜ்ஞாநமயமென்றபடி.

தம் விமலம் ஸுந்தரபாஹும் ஆச்ரயாமः—அகில ஹேயப்ரத்யநீகனாயிரா நின்ற அந்த ஸுந்தரபாஹுவை ஆச்ரயிக்கின்றோமென்றாராயிற்று.

ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில் *ஸர்வஸ்ய சைவ குணதோ ஹி விலக்ஷணத்வம்* என்கிற ச்லோகமும், வரதராஜஸ்தவத்தில் *குணய்பத்தம் லோகே குணிஷு ஹி மதம் மங்கலபதம்* என்கிற ச்லோகமும் ஏதத் ஸமானார்த்தகமாயிருக்குமென்று அறியக் கடவது. இப்படி இவ்வர்த்தத்தை அஸக்ருத் அருளிச்செய்வதற்கொரு திருவுள்ளமுண்டு; எம்பெருமானுக்குப் பரதுக்க துக்கித்வம் முதலானவை குணமாக அநுஸந்திக்கப்படுகின்றனவே; துக்கித்வமென்பது தோஷமே தவிர குணமன்றே; இது எப்படி கல்யாண குணமாக அநுஸந்திக்கப்படுகிறது? என்று சங்கிப்பார்க்கு அவகாசமறும்படி இது சொல்லுகிறது. எம்பெருமானைப்பற்றியுள்ளது எதுவாயினும் சுபகுணமேயொழிய வேறொன்றன்று என்று தெளிவிக்கிறபடி. ... ... (22)

अतिपतितावधिस्वमहिमानुभवप्रभवत्सुखकृतनिस्तरङ्गजलधीयितनित्यदशम् ।
प्रतिभटमेव हेयनिकरस्य सदाऽप्रतिमं हरिमिह सुन्दराह्वमुपयामि वनाद्रितटे ॥ ॥ २३ ॥

அதிபதிதாவதி ஸ்வமஹிமாநுபவ ப்ரபவத்
ஸுகக்ருதநிஸ்தரங்க ஜலதீயித நித்யதசம்,
ப்ரதிபடமேவ ஹேயநிகரஸ்ய ஸதாப்ரதிமம்
ஹரிமிஹ ஸுந்தராஹ்வமுபயாமி வநாத்ரிதடே. (23)

***—பகவச் சாஸ்திரங்களிலே எம்பெருமானுக்கு நித்யோதித தசையென்றும் சாந்தோதித தசையென்றும் இரண்டு தசைகள் சொல்லப்படுகின்றன. தன் வைபவத்தைத் தானேயநுபவித்து உகந்திருக்கும் நிலைமை நித்யோதித தசையெனப்படும்; தன விபூதியையநுபவித்து உகந்திருக்கும் நிலைமை சாந்தோதித தசையெனப்படும். அவற்றுள் முந்தின தசையை அநுஸந்தித்துப் பேசுவது இந்த ச்லோகம்.

அதிபதிதாவதீத்யாதி.—பூர்வார்த்தம் முழுவதும் ஸமஸ்தமான ஓரே பதம். (அதிபதிதாவதி) என்பது (ஸ்வமஹிம) என்பதற்கு விசேஷணம். அவதியைக் கடந்ததான யாதொரு ஸ்வவைபவமுண்டு; அதனை யநுபவிப்பதனாலுண்டான ஆனந்தத்தினால் அலையோய்ந்த கடலின் நிலைமையுண்டாயிருக்கின்றதாம். வரதராஜஸ்தவத்தில் *ப்ரசாந்தாநந்தாத்மாநுபவஜ மஹாநந்த மஹிம ப்ரஸக்த ஸ்தைமித்யாநுக்ருத விதரங்கார்ணவதசம்* என்றவிடத்து எம்முடைய வியாக்கியானம் கண்டுகொள்க. ஜலதீயித-ஜலதிபோன்றதான என்றபடி. நித்யதசா என்றது நித்யோதித தசையென்றவாறு.

ஸதைவ ஹேயநிகரஸ்ய ப்ரதிபடம்—தமஸ்ஸுக்குத் தேஜஸ்ஸுபோலவும் ஸர்ப்பத்துக்கு கருடன்போலவும் ஹேயமான அவத்ய ஸமூஹத்திற்கு எதிராயிருப்பவர். ஹேயஸாமாநாதிகரண்ய அஸஹிஷ்ணுத்வம் சொன்னபடி. ஸதைவ என்றது ஸ்வபாவத ஏவ என்றபடி. இத்தால் நித்ய முக்த வ்யாவ்ருத்தி கொள்க. ஹேய ப்ரத்யநீகத்வம் முக்தர்களுக்கு ஸம்ஸரண தசையில் கிடையாது; நித்யர்களுக்கு அது பகவதிச்சாதீநமாகையாலே ஸ்வாபாவிகமன்று.

அப்ரதிமம்—கீழ்ச்சொன்னதுவே ஹேதுவாக ஒப்பற்றபடி.

ஸுந்தராஹ்வம் ஹரிம் இஹ வநாத்ரிதடே உபயாமி—இப்படிப்பட்ட பெருமைவாய்ந்த அழகப்பிரானரைத் திருமாலிருஞ்சோலை யடிவாரந்தன்னில் அநுபவிக்கின்றேனென்கை. ... ... (23)

सदा षाड्गुण्याख्यैः पृथुलबलविज्ञानशकनप्रभावीर्यैश्वर्यैरवधिविधुरैरेधितदशम् ।
द्रुमस्तोमक्ष्माभृत्परिसरमहोद्यानमुदितं प्रपद्येऽध्यारूढश्रियमिममहं सुन्दरभुजम् ॥ ॥ २४ ॥

ஸதா ஷாட்குண்யாக்யைః ப்ருதுலபலவிஜ்ஞாநசகந
ப்ரபாவீர்யைச்வர்யை ரவதிவிதுரை ரேதிததசம்,
த்ருமஸ்தோம க்ஷ்மாப்ருத் பரிஸரமஹோத்யாநமுதிதம்
ப்ரபத்யேத்யாரூடச்ரிய மிமமஹம் ஸுந்தரபுஜம். (24)

***—பகவானுடைய ஷாட்குண்ய ஸம்பத்தியை அநுபவித்துப் பேசுகிறார். ஜ்ஞாநம் பலம் ஐச்வர்யம் வீர்யம் சக்தி தேஜஸ்ஸு என்கிற ஆறு குணங்கள் ஷாட்குண்யமெனப்படும். இவற்றுக்கு பகமென்று பெயர்; [ षण्णां भग इतीरणा. ] இவையுடைமை பற்றியே பகவானென்கிறது. அஸ்மதாதிகளுக்கும் ஜ்ஞாநபலைச்வர்யாதிகள் உள்ளனவெனினும் இவை மிக அற்பமாயிருக்கும்; அநல்பமாய் அவதிகடந்துள்ளது எம்பெருமானொருவனுக்கே. அது தோன்றவே "ப்ருதுல" என்கிற விசேஷணமும் "அவதிவிதுரைః" என்கிற விசேஷணமுமிட்டது.

ஷாட்குண்யாக்க்யைః—மேலே சொல்லப்படுகிற திருக்குணங்கள் ஷாட்குண்யமென்று பெயர்பெற்றவை. ஷட்குணமே ஷாட்குண்யமென்று *ஸ்வார்த்தே ஷ்யஞ்* பெற்றுக் கிடக்கிறது. சாதுர்வர்ண்யம், சாதுராச்ரம்யம்போலே. அந்த ஷட்குணங்கள் எவையென்னில்; ப்ருதுல பல விஜ்ஞாந சகந ப்ரபா வீர்யைச்வர்யைః—அபரிமிதமான பலம் ஜ்ஞானம் சக்தி தேஜஸ்ஸு வீர்யம் ஐச்வர்யம் ஆகிறவிவை. ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் *யுகபதநிசமக்ஷைః* என்று தொடங்கி *ஸஹகார்யபேக்ஷமபி* என்றளவாக ஏழுச்லோகங்களாலே ஷாட்குண்யஸ்வரூபஸ்வபாவங்கள் விளக்கப்பட்டுள்ளன; அவ்விடத்து நமது வியாக்யானத்திலே விரிவு காண்க. *ப்ரக்ருஷ்டம் விஜ்ஞாநம்* என்ற வரதராஜஸ்தவச்லோக வியாக்கியானத்திலுங் காணலாம்.

அவதிவிதுரைః—அவதிரஹிதைః என்றபடி. ஆனந்தவல்லியில் ஆனந்தகுணமொன்றுக்குக் காட்டப்பட்ட இயத்தாராஹித்யம் ஸகல குணங்களுக்கு மொக்குமென்று இதனால் தெரிவித்தபடி. ஆக இப்படிப்பட்ட ஷட்குணங்களாலே;

ஏதிததசம்—அதிசயிதமான ஸ்வவைபவத்தையுடையவரென்றபடி. இன்னமும் எப்படிப்பட்டவரென்னில்;

த்ருமஸ்தோம க்ஷ்மாப்ருத் பரிஸர மஹோத்யாநமுதிதம்—'த்ருமஸ்தோமக்ஷ்மாப்ருத்' என்றது—திருமாலிருஞ்சோலைமலை யென்றபடி. அதனுடைய பரிஸரமென்று தாழ்வரையைச் சொன்னபடி. அங்குள்ள மஹோத்யானத்திலே—பெரியதொரு சோலையிலே, முதிதம்—திருவுள்ளமுகந்து வர்த்திப்பவர்.

அத்யாரூடச்ரியம் இமம் ஸுந்தரபுஜம் அஹம் ப்ரபத்யே—*ஏறு திருவுடையராய் சுந்தரத் தோளுடையரான பெருமானை அடியேன் அடிபணிகின்றேனென்றதாயிற்று. (24)

सौशील्याश्रितवत्सलत्वमृदुतासौहार्दसाम्यार्जवैः धैर्यस्थैर्यसुवीर्यशौर्यकृतितागाम्भीर्यचातुर्यकैः ।
सौन्दर्यान्वितसौकुमार्यसमतालावण्यमुख्यैर्गुणैर्देवः श्रीतरुषण्डशैलनिलयो नित्यं स्थितस्सुन्दरः ॥ २५ ॥

ஸௌசீல்யாச்ரித வத்ஸலத்வ ம்ருதுதா ஸௌஹார்த ஸாம்யார்ஜவைః
தைர்ய ஸ்தைர்ய ஸுவீர்ய சௌர்ய க்ருதிதா காம்பீர்ய சாதுர்யகைః,
ஸௌந்தர்யாந்வித ஸௌகுமார்ய ஸமதா லாவண்ய முக்க்யைர் குணைః
தேவః ஸ்ரீதருஷண்ட சைலநிலயோ நித்யம் ஸ்திதஸ் ஸுந்தரః. (25)

*** —கீழ்ச்லோகத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஷாட்குண்யத்தின் பரிணமவிததி ரூபங்களாகப் பல திருக்குணங்களுண்டு; அவற்றில் சிலவற்றைக் கூறியனுபவிக்கிறார் இந்தச்லோகத்தில். பகவத் குணங்களைப் பல வகுப்பாகப் பிரிப்பதுண்டு; ஸ்வரூப நிரூபக குணங்கள், நிரூபிதஸ்வரூபவிசேஷண குணங்கள் என்றொரு வகுப்பு. ஆச்ரயண ஸௌகர்யாபாதக குணங்கள், ஆச்ரித கார்யாபாதக குணங்கள் என்றொரு வகுப்பு. திவ்யாத்ம ஸ்வரூபாச்ரித குணங்கள், திவ்யமங்கள விக்ரஹாச்ரித குணங்கள் என்றொரு வகுப்பு. இங்ஙனே பல வகுப்பாக அநுஸந்திக்கப்படுகிற திருக்குணங்களுக்கு 'திவ்யாத்ம ஸ்வரூபாச்ரிதங்கள் திவ்யமங்கலவிக்ரஹாச்ரிதங்கள்' என்கிற பாகுபாடொன்றே முக்கியமாக நெஞ்சிற் கொள்ளத்தக்கது. ஸௌசீல்ய வாத்ஸல்யாதி குணங்கள் ஸ்வரூபாச்ரிதங்கள்; ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகள் விக்ரஹாச்ரிதங்கள்; "தவ வரதராஜோத்தமகுணா விஸீமாநோஸங்க்யாः ப்ரணதஜநபோகம் ப்ரஸுவதே" என்று வரதராஜஸ்தவத்திலருளிச்செய்தபடியே இத் திருக்குணங்களெல்லாம் அநுபவ ரஸிகர்களுக்குப் பரமபோக்யங்களாயிருக்கும்.

ஸௌசீல்ய—சீலமென்றாலும் ஸௌசீல்யமென்றாலும் ஒக்கும். மஹானாயிருப்பவன் தன் மஹிமையைச் சிறிதும் கணிசியாமல் நீசர்களோடும் புரையறக் கலந்து பரிமாறுகையாயிற்று ஸௌசீல்யம் குஹப்பெருமாள்போல்வாரிடத்திலே காட்டியருளின குணமிது.

ஆச்ரிதவத்ஸலத்வ—*என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர் போலும்* என்னும்படி குன்றனைய குற்றஞ்செய்யினும் குணங்கொள்ளுமது வாத்ஸல்யம்.

ம்ருதுதா—மார்தவம் என்றபடி. இது ஸ்வரூபகுணமாகவும் கொள்ளப்படுவதுண்டு; விக்ரஹகுணமாகவும் கொள்ளப்படுவதுண்டு; மேலே ஸௌகுமார்யமென்று தனியே சொல்லுகையாலே அதை விக்ரஹகுணமாகக் கொண்டு மார்தவமென்ற விதனை ஸ்வரூப குணமாகக் கொள்ளவடுக்கும். *மஹாத்மபிர் மாம் அவலோக்யதாம் நய க்ஷணேபி தே யத்விரஹோதிதுஸ்ஸஹः* என்று ஆளவந்தாரருளிச் செய்தபடியே ஆச்ரித விச்லேஷம் பொறாமையென்பது இது. ஆசார்ய ஹ்ருதய த்ருதீய ப்ரகரணத்தில் "மஹாத்மாக்கள்விரஹம் ஸஹியாத மார்தவம்" என்ற ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்தேயம்.

ஸௌஹார்த—சோபநாசம்ஸி ஹ்ருதயசாலித்வம் ஸௌஹார்தமெனப்படும். அதாவது ஸர்வஜந ஹிதைஷித்வம். *அருள்புரிந்த சிந்தை அடியார்மேல்வைத்து* என்ற ஆழ்வாரருளிச்செயலில் காணும் குணமிது.

ஸாம்ய—கீதையில் *ஸமோஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரியः* என்று பணித்தபடியே அபிஜநவித்யாவ்ருத்தங்களில் வாசிபாராதே ஆச்ரயணீயத்வே ஸர்வஸமனாயிருக்கையாயிற்று இது.

ஆர்ஜவ—மநோவாக்காயங்களாகிற கரணத்ரயமும் ஒன்றிநில்லாத செவ்வைக்கேடரான ஸம்ஸாரிகளோடு கலந்து பரிமாறுமிடத்து அவர்களைப்போலே தானும் குடிலஹ்ருதயனாயிருக்கையன்றிக்கே செவ்வியனாயிருக்கையாகிற கரணத்ரய ஸாரூப்யம் இது.

தைர்ய—அநிஷ்டங்கள் மேன்மேலும் வந்து புகுந்தாலும் நெஞ்சில் விகாரலேசமுமின்றிக்கேயிருக்கை. "அத்யந்தாநிஷ்ட ப்ரஸங்கேபி அப்ரதிஹத சித்தவ்ருத்தித்வம் தைர்யம்" என்பர்கள்.

ஸ்தைர்ய—ஆச்ரிதர்களைக் கைவிடாமையிலே திண்ணிய ஊற்றங்கொண்டிருக்கை. *அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே ஸலக்ஷ்மணாம், ந ஹி ப்ரதிஜ்ஞாம் ஸம்ச்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விசேஷத:.* மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந *ஏதத் வ்ரதம் மம* என்று மித்யாதிகளிலே ப்ரஸித்தமான குணமிது.

ஸௌவீர்ய—அரியபெரிய போர்களைச் செய்யவேண்டி வந்தாலும் ஆயாஸமற்றிருக்கை வீர்யமாகிறது.

சௌர்ய—போர்க்களத்தில் புகும்போது துணைதேடாதே ஏகாகியாய்ச் சென்று புக வல்லமையாயிற்று சூரத்வம். *சதுர்தச ஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீமகர்மணாம், ஏகச்ச ராமோ தர்மாத்மா கதம் யுத்தம் பவிஷ்யதி* என்று வயிறுபிடித்த காலத்திலே *அஸஹாய சூர ! அநபாயஸாஹஸ !* என்று கொண்டாடும்படியானமை.

க்ருதிதா—க்ருதக்ருத்யத்வம். அடியார்களுக்குச் செய்யவேண்டுமவற்றைச் செய்து தலைக்கட்டுகை. *அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம், க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ* என்கிறபடியே க்ருதக்ருத்யனுகை.

காம்பீர்ய—திருவுள்ளத்தின் ஆழம் அளவிலிகளால் அறியவொண்ணாதிருக்கை. அடியார்களுக்குச் செய்யவேண்டுமவற்றைச் செய்து தலைக்கட்டினாலுங்கூட *உன்னடியார்க்கு என்செய்வனென்றே யிருத்தி நீ* (பெரிய திருவந்தாதி 53.) என்கிறபடியே இன்னமு மென்செய்வோமென்றே யிருக்குமவனாகையாலே அப்படிப்பட்ட திருவுள்ளத்தினாழம் அறியவொண்ணாதிருக்கை.

சாதுர்யக—பிறரால் நெஞ்சாலும் நினைக்கவொண்ணாத அரியபெரிய செயல்களை மிகவெளிதாகச் செய்து தலைக்கட்டவல்ல சதிர்.

ஸௌந்தர்ய—கண்ணையும் நெஞ்சையும் கவரவல்லதான வடிவழகு. *சூதனாய்க் கள்வனாகித் தூர்த்தரோடிசைந்த காலம் மாதரார்கயற்கணென்னும் வலையுள்பட்டழுந்துவேனைப் போதரேயென்று சொல்லிப் புந்தியிற்புகுந்து தன்பாலாதரம் பெருகவைத்த வழகு* என்கிறபடியே விமுகர்களுடையவும் வைமுக்ய்யத்தைமாற்றி யீடுபடுத்திக் கொள்ளவல்லவழகு.

ஸௌகுமார்ய—*ரங்கபர்த்துரபி லோசந சர்ச்சாம் ஸாஹஸாவளிஷு லேகயமாநம், புஷ்பஹாஸ இதி நாம துஹாநம் ஸௌகுமார்யம் அதிவாங்மநஸம் ந:* என்று பட்டர் அநுஸந்திக்கும்படியான மென்மை. [*பாதாருந்துதமேவ பங்கஜரஜ:*இத்யாதி.] *த்வதங்கமார்தவே த்ருஷ்டே கஸ்ய சித்தே நபாஸதே, மாலதீ சசப்ருல்லேகா கதலீநாம் கடோரதா* என்றான் ஒரு காமுககவி. மலையை மலரென்று பொய் சொன்ன படியிறே அது. *வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி* என்கிறபடியே பிராட்டிமாரும் பிடிக்கக் கூசும்படியான ஸௌகுமார்யமிறேயிது. "ஸௌந்தர்யாந்வித ஸௌகுமார்ய" என்றது—ஸௌந்தர்யமும் ஸௌகுமார்யமுமென்றபடி.

ஸமதா—கீழ் முதற்பாதத்தில் ஸாம்யமென்கிற குணம் சொல்லப்பட்டிருக்க, மீண்டுமிங்கே 'ஸமதா' என்கிறது திவ்யமங்கள விக்ரஹகுணமான ஸமத்வத்தைச் சொன்னபடி. ஸாமுத்ரிகத்திற் சொன்னபடியே ஸமபரிமாண சாலியான அவயவங்களுடைமை. *ஸமஸ் ஸமவிபக்தாங்க:* இத்யாதி.

லாவண்ய—ஒவ்வோரவயவமும் அழகிதாயிருக்கை ஸௌந்தர்யமெனப்படும்; ஸமுதாய சோபை லாவண்யமெனப்படும். ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலுள்ள *ஏகைகஸ்மிந் ப்ரமவயவே* என்கிறச்லோகம் இங்கே அநுஸந்தேயம்.

முக்ய்யைர் குணை:—ச்லோகம் தலைக்கட்டுகையாலே சந்தோபந்த நிர்ப்பந்தத்தினால் நிற்க வேண்டிற்றத்தனை. *அஸங்க்யேய கல்யாணகுணகண* என்னக் கடவதிறே. ஆக இப்படிப்பட்ட திருக்குணங்களோடேகூடி.

ஸு ந்தரோ தேவ: ஸ்ரீதருஷண்ட சைலநிலயஸ்ஸந் நித்யம் ஸ்தித:—அழகப்பிரானார் திருமாலிருஞ்சோலைமலையை இருப்பிடமாகக்கொண்டு அவதாரங்கள்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே என்ஞான்றுமுளன். "ஸ்ரீதருஷண்ட சைல நிலயே" என்று ஸப்தமியான பாடமும் காண்கிறது; அப்போது திருமாலிருஞ் சோலைமலைக் கோயிலிலே என்றபடி. ... ... ... (25)

येष्वेकस्य गुणस्य विप्रुडपि वै लोकोत्तरं स्वाश्रयं कुर्यात्तादृशवैभवैरगणितैर्निस्सीमभूमान्वितैः ।
नित्यैर्दिव्यगुणैस्ततोऽधिकशुभत्वैकास्पदात्माश्रयैरिद्धं सुन्दरबाहुमस्मि शरणं यातो वनाद्रीश्वरम् ॥ २६ ॥

யேஷ்வேகஸ்ய குணஸ்ய விப்ருடபி வை லோகோத்தரம் ஸ்வாச்ரயம்
குர்யாத், தாத்ருச வைபவைரகணிதைர் நிஸ்ஸீம பூமாந்விதை:,
நித்யைர் திவ்யகுணைஸ் ததோதிகசுபத்வைகாஸ்பதாத்மாச்ரயை:
இத்தம் ஸு ந்தரபாஹு மஸ்மி சரணம் யாதோ வநாத்ரீச்வரம். (26)

***—கீழ்ச்லோகத்தில் பிரியவநுஸந்தித்த திருக்குணங்களை ஒருசேர நெஞ்சிற்கொண்டு, அவற்றுள் ஒவ்வொன்றின் பெருமையும் நெஞ்சால் நினைப்பரிதாகையாலே ஓரொரு திருக்குணமே யீடுபடுத்த வல்லதாயிருக்க, இப்படி நிரதிசயங்களான எண்ணிறந்த திருக்குணங்கள் பொலிய எம்பெருமான் ஸேவை ஸாதிக்கும்படி என்னே! என்று உள்குழைந்து பேசுகிறாரிதில்.

யேஷு குணேஷு ஏகஸ்ய குணஸ்ய விப்ருடபி ஸ்வாச்ரயம் லோகோத்தரம் குர்யாத்—கீழ்ச் சொன்ன குணங்களிலும் மற்றுமுள்ள குணங்களிலும் ஓரொரு குணத்தையெடுத்துக் கொள்வது; அதுதான் பூர்த்தியாக இருக்கவேணுமென்பதில்லை; அதில் ஏகதேசத்தில் யத்கிஞ்சிதம்சம் இருந்தாலும் அவ்விடத்தின் உத்கர்ஷம் வாக்குக்கு நிலமன்றிக்கேயிருக்கும். விப்ருட்—பிந்து என்றபடி; அத்யல்ப பாகத்தைச் சொன்னபடி.

தாத்ருசவைபவை:—ஏகதேச ஸம்பந்தமாத்திரத்தாலே ஸ்வாச்ரயத்தை நிறம்பெறுவிக்கவல்ல பெருமை ஒவ்வொரு திருக்குணத்திற்குமுண்டென்க.

அகணிதை:—அங்ஙனேயான குணங்களுக்கு எண்ணிக்கையில்லையென்க. ஆற்றில் மணலை எண்ணினாலும் எண்ணப்போகாதவையிறே பகவத்குணங்கள்.

நிஸ்ஸீம பூமாந்விதை:—"தாத்ருசவைபவை:" என்று கீழே சொல்லியிருக்கச்செய்தேயும் அபர்யாப்தியாலே மீண்டும் "நிஸ்ஸீம பூமாந்விதை:" என்கிறது. "யத்ர நாந்யத் பச்யதி நாந்யத் ச்ருணோதி நாந்யத் விஜாநாதி ஸ பூமா" என்றிருக்கையாலே சிந்தை மற்றொன்றின் திறத்ததாகாதபடி துவக்கவல்ல பெருமையை இங்கு விவக்ஷிக்கிறபடி; அதுதோன்றவே பூம பதப்ரயோகம் செய்தது.

நித்யை:—இத் திருக்குணங்கள் தாம் ஆகமாபாயியன்றிக்கே ஸ்வரூபாநுபந்திகளென்க.

ததோதிக சுபத்வைகாஸ்பத ஆத்மாச்ரயை:—இந்தச்லோகத்தில் முதற்பாதத்தில் சொன்ன விஷயம் ஒருபுறமிருக்க, கீழே "குணஜம் குணிநோ ஹி மங்கலத்வம்" (22) என்கிறச்லோகத்திற் சொன்னபடியே தம்மிற்காட்டிலும் சீரிய ஸ்வாச்ரயத்தை [திவ்யாத்மஸ்வரூபத்தை] உடையவையென்க. இத்தால், இத்தலையைப்பற்றியே நிறம் பெற்றவையென்பது சொல்லிற்றாயிற்று. ஆக இப்படிப்பட்ட,

திவ்யகுணை:—திருக்கல்யாண குணங்களாலே, இத்தம் (इद्धम्) — इत्थम् என்று சிலர் மருள்கொள்வதுண்டு; புத்தகங்களிற் பாடமும் அங்ஙனே பதிப்பித்துள்ளார்கள்: அது பொருந்தாது; इद्धम् என்பதே இங்குப் பொருந்தும்; 'இந்தீ-தீப்தௌ' என்கிற தாதுவடியாகப்பிறந்த க்தப்ரத்யயாந்தமான சொல்வடிவமிது.

ஆக இப்படிப்பட்ட [வநாத்ரீச்வரம் ஸுந்தரபாஹும் சரணம் யாதோஸ்மி] திருமலை யழகரைச் சரணமடைந்தேனாகிறேனென்றாராயிற்று. ... ... (26)

सदा समस्तं जगदीक्षते हि यः प्रत्यक्षदृष्ट्या युगपद्भुवा स्वतः ।
स ईदृशज्ञाननिधिर्निधिस्तु नस्सिंहाद्रिकुञ्जेषु चकास्ति सुन्दरः ॥ ॥ २७ ॥

ஸதா ஸமஸ்தம் ஜகதீக்ஷதே ஹி யஃ
ப்ரத்யக்ஷத்ருஷ்ட்யா யுகபத்புவா ஸ்வதஃ,
ஸ ஈத்ருச ஜ்ஞாநநிதிர் நிதிஸ்து நஃ
ஸிம்ஹாத்ரி குஞ்ஜேஷு சகாஸ்தி ஸுந்தரஃ. (27)

***—கீழ்ச்சொன்ன திருக்குணங்களில் சிலவற்றையெடுத்துக்கொண்டநுபவிக்கப் புகுந்து, ஷாட்குண்யத்தில் தலையான ஜ்ஞானகுணத்தை யநுபவிக்கிறாரிதில்.

யஃ—யாவனொரு பகவான்,

ஸ்வதஃ யுகபத்புவா ப்ரத்யக்ஷத்ருஷ்ட்யா—ஒரு க்லேசமின்றிக்கே இயற்கையாகவே, பௌர்வாபர்யமின்றிக்கே ஏககாலத்திலேயுண்டான ப்ரத்யக்ஷத்ருஷ்டியாலே.

ஸமஸ்தம் ஜகத் ஸதா ஈக்ஷதே ஹி—ஸகல ப்ரபஞ்சங்களையும் என்றுமொக்க ஸாக்ஷாத்கரியாநின்றானே,

ஈத்ருசஜ்ஞாநநிதிஃ ஸஃ—இப்படிப்பட்ட *யுகபத் ஸர்வஸாக்ஷாத்கார க்ஷமமான ஜ்ஞானத்திற்கு நிதியான அந்த பகவான்,

நஃ நிதிஸ்ஸந்—*அந்தர்ஹிதோ நிதி ரஸி த்வமசேஷபும்ஸாம்* என்று ஸ்ரீவைகுண்டஸ்தவத்திலருளிச்செய்தபடியே நமக்கு அக்ஷய்ய நிதியாய்க்கொண்டு,

ஸுந்தரஃ ஸிம்ஹாத்ரி குஞ்ஜேஷு சகாஸ்தி—அழகப்பிரானாய்த் திருமாலிருஞ்சோலைமலையின் லதாக்ருஹங்களிலே ஸேவைஸாதியாநின்றானென்றாராயிற்று. திருமாலிருஞ்சோலையை வநாத்ரி, வ்ருஷாத்ரி என்பதுபோலே ஸிம்ஹாத்ரியென்பதுமுண்டு; "மடங்கல்நின்றதிரும் மாலிருஞ்சோலை" என்றபெரியதிருமொழியிலே நோக்கு. (27)

ऐश्वर्यतेजोबलवीर्यशक्तयः कीदृग्विधास्सुन्दरबाहुसंश्रयाः ।
योऽसौ जगज्जन्मलयस्थितिक्रियास्सङ्कल्पतोऽल्पादुपकल्पयत्यजः ॥ ॥ २८ ॥

ஐச்வர்ய தேஜோபல வீர்ய சக்தயஃ
கீத்ருக் விதாஸ் ஸுந்தரபாஹு ஸம்ச்ரயாஃ,
யோஸௌ ஜகஜ் ஜந்மலயஸ்திதிக்ரியாஸ்
ஸங்கல்பதோல்பா துபகல்பயத்யஜஃ. (28)

***—ஷாட்குண்யத்தில் ஜ்ஞாநகுணமொன்றை யநுபவித்தார் கீழ்ச்லோகத்தில்; மற்றையைந்து குணங்களையும் சேரவநுபவிக்கிறாரிதில். ஷாட்குண்யத்திற்கு ஜகத்

ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களிலே உபயோகமாகையாலே இவ்வாறு குணங்களையுங் கொண்டு அமைத்தளித்துத் துடைப்பதான காரியங்களை அவலீலையாகச் செய்து போருகின்ற எம்பெருமானது பெருமை என்னே! என்று வியந்து கூறுகிறபடி.

யோஸௌ அஜঃ—யாவரொரு அழகர்,

அல்பாத் ஸங்கல்பதঃ—மிகச்சிறியதொரு ஸங்கல்பங்கொண்டே,

ஜகஜ்ஜந்மலயஸ்திதிக்ரியாঃ ஸங்கல்பயதி—ஸகல ஜகத்துக்களினுடையவும் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்திக்கொண்டு போருகிறுரோ,

ஸுந்தரபாஹுஸம்ச்ரயாঃ—அப்படிப்பட்ட அழகரை அவலம்பித்திருக்கின்ற,

ஐச்வர்ய தேஜோ பல வீர்ய சக்தயঃ கீத்ருக்விதাঃ—ஐச்வர்யம், தேஜஸ்ஸு, பலம், வீர்யம் சக்தி ஆகிற இக்குணங்கள் அந்தோ! எப்படிப்பட்டவை!; அபரிச்சேத்யமான வைபவத்தையுடையவைகளன்றேவென்க. .... ... (28)

यत्कल्पायुतभोगतोऽपि कृशतां यायान्न तावत्फलं येष्वेकस्य तथाविधैस्सततजैरंहोभिरुत्सीमभिः ।
अस्तादाविह संसृतावुपचितैश्छन्नं सुसन्नं जनं संनत्या क्षमते क्षणाद्वनगिरिप्रस्थप्रियस्सुन्दरः ॥ ॥ २९ ॥

யத்கல்பாயுத போகதோபி க்ருசதாம் யாயாந் ந தாவத் பலம்
யேஷ்வேகஸ்ய ததாவிதைஸ் ஸததஜைரம்ஹோபி ருத்ஸீமபிঃ,
அஸ்தாதாவிஹ ஸம்ஸ்ருதாவுபசிதைச் சந்நம் ஸுஸந்நம் ஜநம்
ஸந்நத்யா க்ஷமதே க்ஷணாத் வநகிரிப்ரஸ்தப்ரியஸ் ஸுந்தரঃ. (29)

***—அழகருடைய க்ஷமாகுணத்தின் சீர்மையை அநுபவிக்கிறுரிதில். ஒரு பாபத்தின் பலனைப் பதினாயிரம் கல்பகாலம் அநுபவித்தாலும் அறுதென்னும்படியான பாபங்கள் அநவரதமும் எல்லைகடந்து செய்யப்படுகின்றனவாம் இவ்விருள்தருமா ஞாலத்தில்; அப்படிப்பட்ட மஹாபாபி ஜநத்தையும் ஒரு ப்ரணமமாத்ரமே கொண்டு க்ஷமித்தருளாநின்றுர் திருமலையழகர்—என்கிறுர்.

யத் (அம்ஹঃ) கல்பாயுதபோகதோபி க்ருசதாம் ந யாயாத்—யாதொரு பாபமானது பதினாயிரம் கல்பம் பலாநுபவம் செய்யப்பெற்றுலும் க்ஷயிக்கமாட்டாதோ,

தாவத் பலம் யேஷு ஏகஸ்ய—எந்த பாபங்களுள் ஒரு பாபத்திற்கு அவ்வளவு மிடுக்கு உள்ளதோ,

ததாவிதைঃ—அப்படிப்பட்டவைகளாய்,

ஸததஜைঃ—இடைவீடின்றிக்கே செய்யப்படுமவையாய்,

உத்ஸீமபிঃ—எல்லைகடந்தவையாய்,

அஸ்தாதௌ இஹ ஸம்ஸ்ருதௌ உபசிதைঃ—அநாதியான இந்த ஸம்ஸார மண்டலத்திலே வளர்ந்து செல்லுமவையான,

அம்ஹோபிঃ ச்சந்நம்—பாபங்களாலே திரோஹிதாத்மஸ்வரூபனுய்,

ஸுஸந்நம் ஜநம்—அதனுவ ஸுதராம் அவஸந்நனுனவொரு பிராணியை,

வநகிரிப்ரஸ்தப்ரியঃ ஸுந்தரঃ—திருமாலிருஞ்சோலை யடிவாரத்தில் திருவுள்ளமுகந்து வர்த்திக்குமழகர்,

ஸங்நத்யா க்ஷந்த் க்ஷமதே—*ப்ரணிபாத ப்ரதீகாரஸ் ஸம்ரம்போ ஹி மஹாத்மநாம்* என்று காளிதாஸனும் சொன்னபடியே ப்ரணிபாதமாத்ரமே பற்றாசாக நொடிப் பொழுதில் க்ஷமைக்கு இலக்காக்குகிறான். ஸ்ரீவைகுண்டஸ்தவத்திலுள்ள *யத் ப்ரஹ்ம கல்ப நியுதாநுபவேபி* என்னும் ச்லோகம் இங்கே அநுஸந்தேயம். (29)

यज्जातीयो यादृशो यत्स्वभावः पादच्छायां संश्रितो योऽपि कोऽपि ।

तज्जातीयस्तादृशस्तत्स्वभावः श्लिष्यत्येनं सुन्दरो वत्सलत्वात् ॥ ॥३०॥

யஜ்ஜாதீயோ யாத்ருசோ யத்ஸ்வபாவ:
பாதச்சாயாம் ஸம்ச்ரிதோ யோபிகோபி,
தஜ்ஜாதீயஸ் தாத்ருசஸ் தத்ஸ்வபாவ:
ச்லிஷ்யத்யேநம் ஸுந்தரோ வத்ஸலத்வாத். (30)

***—எம்பெருமான் அடியார்களோடு புரையறக் கலந்து பரிமாறும் குணவிசேஷத்தை இந்தச்லோகத்தாலும் மேல்ச்லோகத்தாலும் அநுபவிக்கிறார். "எக்குற்றவாளரெதுபிறப் பேதியல்வாக நின்றோர்" என்கிறபடியே எப்படிப்பட்டவர்களாயிருந்தாலும் "காதம் பலவும் திரிந்துழன்றேற்கு அங்கோர் நிழலில்லை நீரில்லை, உன்பாத நிழலல்லால் மற்றோருயிர்ப்பிடம் நானெங்குங் காண்கின்றிலேன்—திருமாலிருஞ்சோலையெந்தாய்" என்றநுஸந்தித்துத் திருவடி நிழலிலே யொதுங்குமளவில், வாத்ஸல்யமடியாகத் தானும் அவர்களோடொத்தவனாயிருந்து கலந்து பரிமாறுவானென்கிறாரிதில்.

யஜ்ஜாதீய:—தேவமனுஷ்யாதி ஜாதிகளில் ஏதேனுமாகவுமாம்;

யாத்ருச:—ஒழுக்கத்தில் ஏதேனுமாகவுமாம்; யத்ஸ்வபாவ:—இயல்பு ஏதேனுமாகவுமாம்;

யோபிகோபி—இன்னானினையானென்றில்லை; எவனாகவுமாம்.

பாதச்சாயாம் ஸம்ச்ரித:—திருவடி நிழலிலே யொதுங்கினானாகவமையும்.

ஏநம் ஜநம்—இப்படிப்பட்ட பிராணியோடே,

ஸுந்தர:—திருமாலிருஞ்சோலையழகர்,

வத்ஸலத்வாத்—தம்முடைய வாத்ஸல்யமே பற்றாசாக,

தஜ்ஜாதீயஸ்ஸந் தாத்ருசஸ்ஸந் தத்ஸ்வபாவஸ் ஸந் ச்லிஷ்யதி—ஜாத்யாசாரஸ்வபாவங்களில் சிறிதும் வேற்றுமையின்றிக்கே ஒக்கக்கலந்து பரிமாறுகிறாராயிற்று. எதிர்த்தலையிலுள்ள ஜாத்யாசாரஸ்வபாவங்களில் பலவகைப்பட்ட தோஷங்கள் கிடக்க ஒக்கக் கலந்து பரிமாறுகை அஸம்பாவிதமன்றோவென்கிற சங்கைக்கு இடமறும்படி வத்ஸலத்வாத் என்கிறார். தோஷங்களை அநாதரிக்கைக்கடியான ஸ்நேஹ விசேஷமிருக்கையாலே அஸம்பாவிதமொன்றுமில்லையென்க. கீழ்ச்லோகத்தில், அபராத ஸஹிஷ்ணுதாரூபமான க்ஷமாகுணத்தை யநுபவித்தார்; இந்தச்லோகத்தில், தோஷபோக்யதாரூபமான வாத்ஸல்யத்தையநுபவித்தாராயிற்று. ... ... (30)

निहीनो जात्या वा भृशमकुशलैर्वा स्वचरितैः पुमान्वै यः कश्चिद्बहुतृणमपि स्यादगुणतः ।

भजन्तं तं पश्येद्भुजगपतिना तुल्यमपि यो वनाद्रिप्रस्थस्थस्स मम शरणं सुन्दरभुजः ॥ ॥ ३१ ॥

நிஹீநோ ஜாத்யா வா ப்ருசமகுசலைர்வா ஸ்வசரிதை:
புமாந் வை ய: கச்சித் பஹுத்ருணமபி ஸ்யாதகுணத:,
பஜந்தம் தம் பச்யேத் புஜகபதிநா துல்யமபி ய:
வநாத்ரிப்ரஸ்தஸ்தஸ் ஸ மம சரணம் ஸுந்தரபுஜ:. (31)

***—இந்த ச்லோகத்தில் ஸமத்வமாகிற மஹாகுணத்தை யநுபவிக்கிறார். ஸமத்வமாகிறது—மந்தர்களையும் ஸர்வாத்மநா நிஹீநர்களையும் மஹான்களோடொக்கத்

திருவுள்ளம் பற்றுதல். இன்று ஆச்ரயித்த நித்யஸம்ஸாரிகளில் கடைகெட்டவொருவனையும் திருவடி திருவனந்தாழ்வான் முதலானரோடொக்கத் திருவுள்ளம் பற்றுகையாகிற மஹாகுணத்தைக் கொண்டாடுகிறார்.

யஃ கச்சித் புமாந்—பெயரிட்டுச் சொல்லவொண்ணாதானொருவன் எவனாகிலுமாகவுமாம்;

ஜாத்யா வா ப்ருசம் நிஹீநஃ—ஜாதியினால் தண்ணியனாகவுமாம்;

அகுசலைஃ ஸ்வசரிதைர் வா ப்ருசம் நிஹீநஃ—தீய நடத்தைகளினால் தண்ணியனாகவுமாம்.

அகுணதஃ பஹுத்ருணமபி ஸ்யாத்—ஒரு குணமுமில்லாமைபற்றி த்ருணப்ராயனாகவுமாம். ஆக இங்ஙனே ஸர்வாத்மநா தண்ணியனாயிருந்தானேலும்.

பஜந்தம் தம் புஜகபதிநா துல்யமபி யஃ பச்யேத்—பகவத் பஜநம் என்கிறவொரு குணம் அவனிடத்தில் வாய்க்குமாகில், அன்னவனை ஆதிசேஷனோடொக்கவும் கடாக்ஷித்தருளா நின்றான் யாவன்;

ஸஃ வநாத்ரி ப்ரஸ்தஸ்தஃ ஸுந்தரபுஜஃ மம சரணம்—திருமாலிருஞ்சோலை மலையடிவாரந் தன்னிலுறையும் அந்தச் சுந்தரத் தோளுடையான் எனக்குப் புகல்.

ஸ்ரீ விபீஷணாழ்வான் கடற்கரையிலே வந்து சரணம் புகுந்தபோது அவனை ஈரக்கையாலே குளிரத் தழுவி அங்கீகரித்தபோது பெருமாளருளிச்செய்த வார்த்தை— (கம்பர்) "குகனொடுமைவரானோம் முன்பு, பின்குன்று சூழ்வான் மகனொடுமறுவரானோம், எம்முழையன்பின்வந்த அகனமர்காதலைய! நின்னொடு மெழுவரானோம்" என்பது. இப்படி வேடனையும் குரங்கையும் அரக்கனையும் தம்பிமாராகக் கொள்ளுமியல்வினரான எம்பெருமானுக்கு இது அஸம்பாவிதமன்றிறே. [பஹுத்ருணம்— अल्पौपम्यार्थे बहुच्प्रत्ययः ।] .... .... .... (31)

एकैकमङ्गलगुणानुभवाभिनन्दमीदृक्त्वियानिति च सुन्दरदोष्णि कृष्णे ।
ते ये शतंत्विति नियन्तुमनाश्श्रुतिर्हि नैवैष वाङ्मनसगोचर इत्युदाह ॥ ॥३२॥

ஏகைகமங்கல குணாநுபவாபிநந்தம்
ஈத்ருக் த்வியாநிதி ச ஸுந்தரதோஷ்ணி க்ருஷ்ணே,
தேயே சதந்த்விதி நியந்துமநாஃ ச்ருதிர் ஹி
நைவைஷ வாங்மநஸ கோசர இத்யுதாஹ. (32)

***—கீழ் ஒவ்வொரு ச்லோகத்தாலும் ஒவ்வொரு திருக்குணத்தைப் பேசியநுபவித்து வந்தார். வேதபுருஷன் தானும் *யதோ வாசோ நிவர்த்தந்தே, அப்ராப்ய மநஸா ஸஹ* என்று மீண்டபடியை யெடுத்துக்காட்டுகிற முகத்தாலே தாமும் மீளவேண்டும்படியை மூதலிக்கிறார் இந்தச்லோகத்தில். ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் (51) *த்ரய்யுத்யதா தவ யுவத்வமுகைர் குணௌகைஃ* என்று தொடங்கியுள்ள ச்லோகமும் இந்த ச்லோகமும் பெரும்பாலும் பொருளொற்றுமை கொண்டிருக்கும். இரண்டுக்கும் "நைவைஷ வாங்மநஸ கோசர இத்யுதாஹ" என்பதே நான்காவது பாதமாக அமைந்திருக்கும்படி காணத்தக்கது.

ஸுந்தரதோஷ்ணி க்ருஷ்ணே—அஸங்க்யேய கல்யாண குணகண நிதியான சுந்தரத்தோளுடையான் பக்கலிலே,

ஏகைகமங்கள குணாநுபவ அபிநந்தம்—ஒவ்வொரு திருக்கல்யாண குணத்தையுமநுபவிப்பதனாலுண்டாகுமானந்தத்தை,

ஈத்ருக் இயாநிதி நியந்துமநாஃ ச்ருதிஸ்துஃ—இப்படிப்பட்டதென்றும் இவ்வளவிற்றென்றும் பரிச்சேதிக்கப் புகுந்த வேதமோவென்றால்

ஏஷஃ வாங்மநஸ கோசரோ நைவ இதி உதாஹ—இது வாக்குக்கும் மநஸ்ஸுக்கும் எட்டவே மாட்டாததென்று சொல்லித் தலைக்கட்டிற்று.

ஸ்தோத்ரரத்நத்தில்* உபர்யுபர்யப்ஜபுவோபி* என்கிற ச்லோகத்தின் வியாக்கியானத்திலும் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசகத்தில் *மர்த்யோத்தாயம் விரிஞ்சாவதிகம்* என்கிற ச்லோகத்தின் வியாக்கியானத்திலும் ஆனந்தவல்லியின் ப்ரக்ரியையை விரிய வுரைத்தோம், அங்கே கண்டுகொள்வது. .... ... (32)

अब्जपादमरविन्दलोचनं पद्मपाणितलमञ्जनप्रभम् ।
सुन्दरोरुभुजमिन्दिरापतिं वन्दिषीय वरदं वनाद्रिगम् ॥ ॥३३॥

அப்ஜபாதமரவிந்த லோசநம் பத்மபாணிதலமஞ்ஜநப்ரபம்,
ஸுந்தரோருபுஜ மிந்திராபதிம் வந்திஷீய வரதம் வநாத்ரிகம். (33)

***—திருக்கல்யாண குணாநுபவத்திலிருந்து திவ்யமங்கள விக்ரஹ ஸௌந்தர்ய லாவண்யாநுபவத்தில் தோள்மாற நினைத்து, அதற்கு அடியிடுவதாயிற்று இந்த ச்லோகம். இதில் அப்ஜமென்றும் அரவிந்தமென்றும் பத்மமென்றும் பதபேதமேயொழிய அர்த்தபேதமில்லை. திருநெடுந்தாண்டகத்தில் “கைவண்ணந் தாமரை, வாய்கமலம் போலும், கண்ணிணையு மரவிந்தம்” என்றருளிச்செய்த கட்டளையிலே இது அருளிச் செய்கிறபடி. “செந்தாமரைத் தடங்கண் செங்கனிவாய் செங்கமலம் செந்தாமரை யடிக்கள்” என்று ஒரு சொல்லையேயிட்டுச் சொல்லுவதுமுண்டு; தாமரை கமலம் அரவிந்தம் என்று வெவ்வேறு சொற்களையிட்டுச் சொல்லுவதுமுண்டு. அநுபவ ரஸிகர்களின் படி ஓரோவகையாயிருக்குமிறே. எங்ஙனே சொல்லிலும் “கட்டுரைக்கில் தாமரை நின்கண்பாதம் கையொவ்வா” என்று நம்மாழ்வாரருளிச்செய்தபடியே ஒவ்வாத படியன்றோ இருப்பது; இந்த ஸ்தவந்தன்னிலும் மேலே *அப்ஜம் நு கதம் நிதர்சநம்* என்றருளிச்செய்கிறாரே. அப்படியிருந்தும் உபமானங்களையிட்டு அநுபவிப்பது ஏனென்னில்; ஏதோ வொருவிதமாக வருணித்துப் போதைப்போக்கவேண்டுமே. வாளாவிருக்கமுடியாதே. ‘அத்தைப்போலிருக்கும் இத்தைப்போலிருக்கும் என்று சொல்லிக்கொண்டிருப்பதும் ஒருபோதுபோக்கா யிருக்குமிறே.

அப்ஜபாதம்—செந்தாமரைபோன்ற திருவடிகளையுடையவன்.

அரவிந்தலோசநம்—*அரவிந்தம்போன்று நீண்ட கண்ணன்.

பத்மபாணிதலம்—பற்பமென்னலாம்படியான திருக்கைத்தலமுடையவன். பத்மத்தைப் பாணிதலத்திலேயுடையவனென்னவுமாம்; அப்போது பத்மமென்றது பத்மரேகையைச் சொன்னபடி. பத்மத்தைக் கையிலே தரித்து ஸேவைஸாதிப்பதுமுண்டு; அதைச் சொல்லிற்றாகவுமாம். திருமங்கையாழ்வார் அட்டபுயகரப் பதிகத்தில் (2—8—3) *செம்பொனிலங்கு......ஒண்மலர்பற்றி* என்றருளிச்செய்தது காண்க.

அஞ்ஜநப்ரபம்—*மைப்படி மேனியிறே. *அஞ்சனவண்ணனை என்றும், *அஞ்சனம் புரையுந் திருவுருவனை* என்றும் ஆழ்வார்கள் வாய்வெருவும் திருமேனியிறே.

ஸுந்தர உரு புஜம்—அழகியவாய் நீண்டவையான திருத்தோள்களையுடையவன்.

இந்திராபதிம்—*திருமகளார் தனிக்கேள்வன்.

வநாத்ரிகம் வரதம் வந்திஷீய—ஹஸ்திகிரியிலே யெழுந்தருளி நிற்கிற வரதன் வநாத்ரியிலே ஸேவைஸாதித்தருளுகிறான்போலும். ஆழ்வார்கள் *நாவாயுளானை நறையூரில் கண்டேனே* என்றும், *தேன்கொண்ட சாரல் திருவேங்கடத்தானை நான் சென்று நாடி நறையூரில் கண்டேனே* என்றும் *நின்றவூர் நித்திலத்தைக் கண்டது நான் கடன்மல்லைத் தலசயனத்தே* என்றும் ஓரிடத்தெம்பெருமானை மற்றோரிடத்தே காணப்பெற்றதாக அருளிச்செய்வதுண்டே; அதுபோல. ஆக, ஸர்வாங்க ஸௌந்தரனான வரதனை வநாத்ரியிலே ஸேவிக்கக் கடவேனென்றாராயிற்று. .... (33)

कनकमरतकाञ्जनद्रवाणां मथनसमुत्थितसारमेलनोत्थम् ।
जयति किमपि रूपमस्य तेजो वनगिरिनन्दनसुन्दरोरुबाहोः ॥ ॥ ३४ ॥

கநகமரதகாஞ்ஜநத்ரவாணம்
மதநஸமுத்தித ஸாரமேலநோத்தம்,
ஜயதி கிமபி ரூபமஸ்ய தேஜ:
வநகிரிநந்தந ஸௌந்தரோருபாஹோ:. (34)

அழகருடைய திவ்யமங்கள விக்ரஹ லாவண்யத்தில் ஈடுபட்டுப் பேசுகிறார், [அஸ்ய வநகிரிநந்தநஸௌந்தரோருபாஹோ: கிமபி ரூபம் தேஜ:ஜயதி] திருமாலிருஞ்சோலைமலையிலே, உகந்துவர்த்திக்கிற இந்த சுந்தரத்தோளுடையானுடைய பரமவிலக்ஷணமான தேஜஸ்ஸௌ விளங்காநின்றது. (கிமபிரூபம்) என்பதை இரண்டு பதமாகக் கொள்ளுகையன்றிக்கே ஸமஸ்தமான ஒரே பதமாகக் கொள்ளத்தகும்; அநிர்வசநீயமான ரூபத்தையுடையவென்றபடி. அன்றிக்கே, வ்யஸ்தபதமாகவே கொண்டு 'தேஜ: கிமபி ரூபம் ஜயதி'—தேஜோமயமான ஒருருவம் திகழ்கின்றது என்று முரைக்கலாம். அது எப்படிப்பட்டதென்னில்: [கநக மரதகாஞ்ஜநத்ரவாணம் மதநஸமுத்திதஸார மேலநோத்தம்] கநகம், மரதகம், அஞ்ஜனம் ஆகிய இவற்றையுருக்கி, அந்த த்ரவத்தைத் தனித்தனியே மதனம்பண்ணி, அதை வடிக்கட்டி ஒன்றுசேர்த்தாற்போன்றுள்ளதாம் அழகருடைய திருவுருவம். முதல் பாதத்தின் முடிவிலுள்ள த்ரவபதம் கனகம் முதலிய மூன்றிலும் அந்வயிக்கக்கடவது. கநகத்ரவம், மரதகத்ரவம், அஜ்ஞநத்ரவம் ஆகிய இம்மூன்று த்ரவங்களையும் என்றபடி. இவற்றை மதனம்பண்ணுகையாவது—புடம்போடுகை; அநந்தரம் வெளிறு கழித்து ஸாரத்தைத் திரட்டும்படியாகும். அப்படி திரட்டின ஸாரங்களை ஒன்றுகூட்டியதனால் இந்த திவ்யமங்கள விக்ரஹலாவண்யமுண்டாயிற்றென்று சமத்காரமாக வருளிச்செய்தபடி. மூன்று தாழியிலே தயிரை நிறைத்துக் கடைந்தால் அவற்றின் ஸாரமாக வெண்ணெய் திரளுமாபோலே, கநகத்ரவ மரதகத்ரவ அஞ்ஜநத்ரவங்களை மூன்று பாத்திரங்களிலே நிறைத்துக் கடைந்தால் அவற்றில்நின்று ஸாராம்சங்கள் தோன்றுமே; அவற்றின் கூட்டரவே அழகர் திருமேனியாகக் கொள்ளத்தக்கது.

किंनु स्वयं स्वात्मविभूषणं भवन्नसावलङ्कार इतीरितो जनैः ।
वर्धिष्णुबालद्रुमषण्डमण्डितं वनाचलं वा परितः प्रसाधयन् ॥ ॥ ३५ ॥

கிம் நு ஸ்வயம் ஸ்வாத்மவிபூஷணம் பவந்
அஸாவலங்கார இதீரிதோ ஜநை:,
வர்த்திஷ்ணுபாலத்ருமஷண்டமண்டிதம்
வநாசலம் வா பரித: ப்ரஸாதயந். (35)

திருமாலிருஞ்சோலையழகர்க்கு அலங்காரனென்றொரு திருநாமமுண்டு; பெரியாழ்வார் திருமொழியில் *பலபல நாழஞ்சொல்லிப் பழித்த சிசுபாலன்றன்னை அலை

வலைமை தவிர்த்த அழகன் அலங்காரன் மலை—திருமாலிருஞ்சோலையதே* என்ற பாசுரத்தில் இத் திருநாமமருளிச்செய்யப்பட்டிரா நின்றது. இத் திருநாமம் இப்பெருமானுக்கு எங்ஙனே வந்ததென்று ஆராய்ச்சி செய்யப் புகுந்து இரண்டுவகையான உல்லேகங்களை வெளியிடுகிறார் இந்தச்லோகத்தில்

அஸௌ ஜநைஃ அலங்கார இதி ஈரிதஃ—இவ்வழகப்பிரானார் உலகத்தவர்களால் அலங்காரரென்று வழங்கப்படுகிறார்; இதற்குக் காரணமெதுவாயிருக்குமென்று பார்க்குமளவில்;

கிம் நு ஸ்வயம் ஸ்வாத்மவிபூஷணம் பவந்—ஆபரணாதிகளால் அழகுபெறவேண்டாதே தனக்குத்தானே அலங்காரமாயிருப்பது பற்றி - என்னலாமோ? அன்றிக்கே;

வர்த்திஷ்ணுபாலத்ருமஷண்டமண்டிதம் வநாசலம் பரிதஃ ப்ரஸாதயந் வா— * வளரிளம் பொழில்சூழ் மாலிருஞ்சோலையைச் சுற்றிலும் அலங்கரிப்பது பற்றி என்னலாமோ? வரதராஜஸ்தவத்தில் *கர்ணிகா தவ கரீச! கிமேஷா* என்னும் சுலோகத்திலுள்ள உல்லேகங்களை இங்கு ஒரு புடை இதற்குப் போலியாக நினைப்பது. ஸ்வயம் ஸ்வாத்ம விபூஷணமாயிருப்பதுபற்றியும் வநகிரி விபூஷணமாயிருப்பது பற்றியும் அலங்காரனென்று திருநாமமாயிற்றென்பது பரமதாற்பரியம்.

நம்மாழ்வார் *கிளரொளி யிளமையில் *வளரிளம் பொழில்சூழ்மாலிருஞ்சோலை* என்றருளிச் செய்ததை *வர்த்திஷ்ணுபாலத்ருமஷண்டமண்டிதம் வநாசலம்* என்று மொழி பெயர்த்தபடி. ... ... ... ... (35)

सुखस्पर्शैर्नित्यैः कुसुमसुकुमाराङ्गसुखदैः सुसौगन्ध्यैर्दिव्याभरणगणदिव्यायुधगणैः ।
अलङ्कार्यैस्सर्वैर्निगदितमलङ्कार इति यस्समाख्यानं धत्ते स वनगिरिनाथोऽस्तु शरणम् ॥ ॥ ३६ ॥

ஸுகஸ்பர்சைர் நித்யைஃ குஸுமஸுகுமாராங்க ஸுகதைஃ
ஸுஸௌகந்த்யைர் திவ்யாபரணகண திவ்யாயுத கணைஃ,
அலங்கார்யைஸ் ஸர்வைர் நிகதிதமலங்கார இதி யஃ
ஸமாக்யாநம் தத்தே ஸ வநகிரிநாதோஸ்து சரணம். (36)

அழகருக்கு அலங்காரனென்னும் திருநாமம் எதுபற்றி? என்று விதர்க்கமாய்ச் சென்றது கீழ் ச்லோகம்; நிஷ்கர்ஷமாய்ச் செல்லுகிறது இந்த ச்லோகம். கிரீட மகுட சூடாவதம்ஸாதி திவ்யாபரணங்களாலும் ஸுதர்சந பாஞ்சஜந்யாதி திவ்யாயுதங்களாலும் அலங்காரம் பெற்றிருப்பதனாலே அலங்காரனென்று ஓதப்படுகிறானாயிற்று; அன்னவனே நமக்குத் தஞ்சம்— என்கிறார். அந்த திவ்யாபரணங்களும் திவ்யாயுதங்களும் எப்படிப்பட்டவை யென்ன;

ஸுகஸ்பர்சைஃ— சரணாகதிகத்யத்தில் ஆபரண சூர்ணையிலே "நிரதிசய ஸுகஸ்பர்ச" இத்யாதியாக அருளிச் செய்தபடியே மெத்தென்றிருக்குமவை.

குஸுமஸுகுமாராங்கஸுகதைஃ— புஷ்பஹாஸ ஸுகுமாரங்களான பாதாதிகேசாந்த அவயவங்களுக்குக் கருமுகை மாலைபோலே இனிமையைத் தரும்படியானவை.

ஸுஸௌகந்த்யைஃ— லோக விலக்ஷணமான திவ்ய பரிமளம் பொருந்தியவை.

அலங்கார்யைஃ— திருமேனிக்கு சோபாவஹங்களாயிருக்குமவை. ஆக இப்படிப்பட்ட;

ஸர்வைஃ திவ்யாபரணகண திவ்யாயுதகணை:— ஸகல திவ்யாபரணகணங்களாலும் ஸகல திவ்யாயுதகணங்களாலும்,

நிகதிதம் அலங்காரஇதி ஸமாக்க்யாநம் — தெரிவிக்கப்பட்டதான அலங்காரரென்னும் திருநாமத்தை யঃ வநகிரிநாதঃ தத்தே — யாவரொரு திருமாலிருஞ்சோலை யழகர் தமக்குத் திருநாமமாகக்கொண்டிருக்கிறரோ,

ஸঃ சரணம் அஸ்து — அவர் (நமக்குத்) தஞ்சமாகக் கடவர். ஆக இந்த ச்லோகம் முன் ச்லோகத்திற்கு சேஷபூதமாகி அலங்காரநாம நிர்வசநம் செய்ததாயிற்று. 36

मकुटमकुटमालोत्तंसचूडाललामस्वलकतिलकमालाकुण्डलैस्सोर्ध्वपुण्ड्रैः ।
मणिवरवनमालाहारकेयूरकण्ठ्यैस्तुलसिकटककाञ्चीनूपुराद्यैश्च भूषैः ॥ ३७ ॥

மகுட மகுட மாலோத்தம்ஸ சூடாலலாம
ஸ்வலக திலகமாலா குண்டலைஸ் ஸோர்த்வ புண்ட்ரைঃ,
மணிவர வநமாலாஹார கேயூரகண்ட்யைঃ
துலஸி கடக காஞ்சீ நூபுராத்யைச்ச பூஷைঃ.

असिजलजरथाङ्गैश्शार्ङ्गकौमोदकीभ्यामगणितगुणजालैरायुधैरप्यथान्यैः ।
सततविततशोभं पद्मनाभं वनाद्रेरुपवनसुखलीलं सुन्दरं वन्दिषीय ॥ ३८ ॥

அஸிஜலஜ ரதாங்கைச் சார்ங்க கௌமோதகீப்யாம்
அகணித குண ஜாலைராயுதைரப்யதாந்யைঃ,
ஸதத விதத சோபம் பத்மநாபம் வநாத்ரேঃ
உபவந ஸுகலீலம் ஸுந்தரம் வந்திஷீய. 38

***—இவையிரண்டு ச்லோகங்களும் சேர்ந்து ஏகாந்வயமாகையாலே குளகமெனப்படும். கீழ்ச்லோகத்தில் * திவ்யாபரணகண திவ்யாயுத கணைঃ * என்று இரு வகுப்புகள் அருளிச் செய்தாரே; அவற்றுள் முக்கியமான சிலவற்றை யெடுத்துரைக்க விரும்பி ஒரு ச்லோகத்தில் திருவாபரணங்களையும் மற்றொரு ச்லோகத்தில் திவ்யாயுதங்களையும் அருளிச் செய்து இவை யெல்லாமுமே ஆபரண கோடியில் அமைந்திருக்கும் படியை யருளிச்செய்து தலைக்கட்டுகிறர்.

மகுட—திருவபிஷேகமென்ன, மகுடமாலா—அந்தத் திருவபிஷேகத்தைச் சுற்றி அலங்காரமாகச் சாத்தப்படுகிறதொரு மாலையென்ன, உத்தம்ஸ—திருவபிஷேகத்தின் முனையிலேயாம் ஆபரண விசேஷமென்ன, சூடாலலாம—தொப்பாரமென்ன, [ஸ்வலக திலக மாலா] மாலா சப்தத்தை இரண்டிடத்திலும் அந்வயித்து, ஸ்வலகமாலா - திலக மாலா என்றாக்குவது; திருக்குழற்கற்றைக்குச் சாத்துமாபரணமும் திரு நெற்றிக்குச் சாத்துமாபரணமுமென்ன,

... ..குண்டலைஸ் ஸோர்த்வபுண்ட்ரைঃ—மகர குண்டலமென்ன ஊர்த்வ புண்ட்ராலங்காரமென்ன, மணிவர—*குருமாமணிப்பூண்* என்னப்பட்ட ஸ்ரீ கௌஸ்துபமென்ன, வநமாலா—*ஆபாத சூடம் யா மாலா வநமாலேதி கத்யதே* எனப்பட்ட வநமாலையென்ன, ஹார—முத்து வடங்களென்ன, கேயூர—திருத்தோள்வளைகளென்ன, கண்ட்யை:—காறையென்னும் கண்டாபரணமென்ன, துலஸி—தண்ணந்துழாய் மாலையென்ன, கடக—ஹஸ்தாபரணமென்ன, காஞ்சீ—திருவரைநாணென்ன, நூபுராத்யைச்ச பூஷைঃ—திருவடிச் சதங்கையென்ன, ஆக, இவை முதலான திருவாபரணங்களாலும். [இதற்கு மேல் ச்லோகத்திலுள்ள *ஸதத விதத சோபம்* என்பதிலே அந்வயம்.] ஆக, இந்த ச்லோகத்தினால் திவ்ய பூஷணங்களை ஸங்க்ரஹித்தாராயிற்று. பூஷா சப்தம் ஸ்த்ரீலிங்கமாகையாலே பூஷாபிঃ என்னவேண்டியிருக்க பூஷைঃ என்றது எங்ஙனே பொருந்துமென்று சிலர் சங்கிப்பதுண்டு; ஸம்ஸ்க்ருத வ்யாக்

யாதா "வ்யாகரண நிபுணைர் விசாரணீயம்" என்றெழுதி வைத்தார். घञन्तत्वात् வரு மென்று கொள்ளக் கடவது. (37.) இனி அடுத்த ச்லோகத்தின் முதற்பாதத்தில் பஞ்சாயுதங்களை யருளிச்செய்கிறார்.

அஸி ஜலஜ ரதாங்கை:—நந்தகமென்றும் பாஞ்சஜந்யமென்றும் ஸுதர்சநமென்றும் பேர் பெற்ற வாள் சங்கு சக்கரங்களாலும்; சார்ங்க கௌமோதகீப்யாம்—சார்ங்கமென்றும் கௌமோதகியென்றும் பேர்பெற்ற வில்தண்டுகளாலும்;

அத அகணித குணஜாலை: அந்யைரபி ஆயுதை:—எண்ணித் தலைக்கட்ட வொண்ணாத குண கணங்களையுடைய மற்றுமுள்ள ஹலமுஸல பரசு ப்ரப்ருதிகளான ஆயுதங் களாலும்.

ஸததவிதத சோபம்:—நிரந்தரமாகப் பரம்பின ஸௌந்தர்யத்தையுடையவரான அழகரை வணங்கக்கடவேன். திவ்யாயுதங்களும் திவ்யாபரணம் போலவே திருமேனிக்கு சோபாவஹமாயிருக்கப்பெற்ற வைலக்ஷண்யத்தை அநுபவித்தாராயிற்று. 38

आजानजस्वगतबन्धुरगन्धलुब्धभ्राम्यद्द्विरेफमधुपालिसदेशकेशम् ।
विश्वाधिराज्यपरिबर्हकिरीटराजं है सुन्दरस्य बत ! सुन्दरमुत्तमाङ्गम् ॥३९॥

ஆஜாநஜஸ்வகத பந்துரகந்தலுப்த
ப்ராம்யத் விதக்த மதுபாலி ஸதேச கேசம்,
விச்வாதிராஜ்ய பரிபர்ஹ கிரீடராஜம்
ஹை ஸுந்தரஸ்ய பத! ஸுந்தரமுத்தமாங்கம். 39

* * * இந்த ச்லோகத்தினால் அழகருடைய திருமுடியை யநுபவிக்கிறார்.

ஸுந்தரஸ்ய உத்தமாங்கம் ஸுந்தரம்—அழகருடைய திருமுடியானது மிகவழகியது.

ஹை! பத! என்னுமிரண்டு அவ்யயங்களினால் இவ்வழகை உள்ளபடி வருணிக்க முடியாமல் தளருகின்றமை தோற்றுவிக்கப்படும். திருமுடி எப்படிப்பட்டதென்ன, இரண்டு விசேஷணங்களினால் அதன் சிறப்பைப் பேசுகிறார்; சிறந்த கூந்தலையும் உயர்ந்த மகுடத்தையுமுடையது என்கிறார்.

ஆஜாநஜ ஸ்வகத பந்துர கந்தலுப்த ப்ராம்யத்விதக்த மதுபாளி ஸதேச கேசம்—'ஸ்வகத' என்றவிடத்தில ஸ்வசப்தத்தாலே கேசம் க்ரஹிக்கத்தக்கது; 'ஆஜாநஜ' என்று தொடங்கி 'ஸதேச' என்றவளவும் கேசத்திற்கே விசேஷணமாகையாலே. இயற்கையான பரிமளத்தில் லோபத்தாலே சுழலமிடாநின்ற வண்டுகளின் திரள்படிந்த கூந்தலையுடையது திருமுடியென்கை. 'ஆஜாநஜ' என்றது—ஆரோபிதமன்றிக்கே ஜன்மஸித்தமானவென்றபடி. கூந்தலுக்கு இதர த்ரவ்யங்களைக் கொண்டு நறுமண மூட்டுவாருண்டே யுலகில்; அங்ஙனன்றிக்கே *ஸர்வகந்த:* என்று உபநிஷத் ப்ரஸித்தனானவனுடைய கூந்தலாகையாலே நறுமணம் இயற்கையாகப் பெற்றிருக்குமாயிற்று. பந்துர என்றது ஸம்ருத்தமானவென்றபடி. ஸ்வாபாவிகமாய்த் தன்னிடத்திலுள்ள ஸம்ருத்தமான நறுமணத்தில் லோபமுடையவையாய்க்கொண்டு மேலே சுழலமிடாநின்ற ரஸிக ப்ரமர பங்க்திகள் படியப்பெற்ற திருக்குழற்கற்றையையுடையது என்றதாயிற்று. ஸதேச என்றதற்கு இரண்டு வகையாகப் பொருள் கொள்ளலாம்; மதுபாவளிகளோடே ஸமாநாதிகரணமாயிருக்கின்ற என்றும், மதுபாவளிகளோடே ஸமானமாயிருக்கின்ற என்றும். முந்தின பொருளில் வண்டுகளும் கேசங்களும் உத்தமாங்கத்திலுள்ளதாகத் தெரிவிக்கப்படும். பிந்தின பொருளில், *களிவண்டெங்குங் கலந்தாற்போல் கமழ் பூங்குழல்கள் தடந்தோள் மேல் மிளிர நின்று* என்று நாச்சியாரருளிச் செய்தபடியே களிவண்டுகள் படிந்திருக்கின்றனவோ வென்று சங்கிக்கலாம் படியான கூந்தலையுடையது உத்தமாங்கம் என்றதாகும்.

**விச்வாதி** ராஜ்ய பரிபர்ஹ கிரீடராஜம்—ஸர்வேச்வரத்வ ஸூசகமாயிருக்கின்ற திருவபிஷேகத்தையுடைய தென்கை. * பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே ஆள்கின்ற உபயவிபூதி நிர்வாஹகன் இவனே யென்று கோட் சொல்லித் தருகின்றதாம் திருவபிஷேகம். பரிபர்ஹ மென்று ஸாமக்ரிக்குப் பெயர். ஸூசகமென்பது தாத்பர்யஸித்தம். ... ... 39

अन्धं तमस्तिमिरनिर्मितमेव यत्स्यात्तत्सारसाधितसुतन्त्वतिवृत्तवार्तम् ।
ईशस्य (केसरिगिरे) केशवहरेरलकालिजालं तत्तुल्यकुल्यमधुपाढ्यमहावनस्य ॥४०॥

*அந்தம் தமஸ் திமிர நிர்மித மேவ யத் ஸ்யாத்*
*தத்ஸாரஸாதித ஸுதந்த்வதிவ்ருத்த வார்த்தம்,*
*ஈசஸ்ய கேசவகிரே ரலகாலிஜாலம்*
*தத்துல்ய குல்ய மதுபாட்ய மஹாவநஸ்ய.* 40

* * * இந்த ச்லோகத்தினால் அழகருடைய திருக்குழற் கற்றையை வருணிக்கிறார். கீழ்ச்லோகத்தில் பூர்வார்த்தத்தாலே கேசபாச வர்ணநம் செய்திருந்தாலும் அது விசேஷணமாய் நின்றதத்தனை. அதுதன்னையே விசேஷ்யமாக்கியநுபவிப்பதும் ஆழ்வார் பாசுரமொன்றைக் கொண்டு அநுபவிப்பதும் இந்த ச்லோகத்திற்கு விசேஷாகாரம்.

திருவாய்மொழியில் * ஏழையராவியில் *கொள்கின்ற கோளிருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ்சுருளின் உட்கொண்ட நீல நன்னூல் தழைகொல்? அன்று மாயன் குழல் * என்ற இரண்டடிகளை மொழிபெயர்த்ததாயிருக்கிறது இந்த ச்லோகத்தில் பூர்வார்த்தம். நம்மாழ்வார், திருக்குழற் கற்றையினழகு வந்து தம்மை நலிகிறபடியைச் சொன்ன அப் பாசுரத்தில், திருக்குழலை ஒருவாறு உல்லேகம் பண்ணுவதும் அந்த உல்லேகமும் உரியதன்றென்று உதறித் தள்ளுவதுமானார். உல்லேகம் செய்தபடி எங்ஙனே யென்னில்; பிரளயகாலத்தில் ப்ரபஞ்சத்தையெல்லாம் வியாபிக்கக் கடவதான இருள் உண்டே, அதைப் பிடித்துக் கொணர்ந்து அதில் அஸாரமான அம்சத்தைக் கழித்துப் பரமஸாரமான பாகத்தை நூல் நூற்பதற்காகக் கொள்ளும் ஒரு பஞ்சுச் சுருளை போலே சுருளையாக்கி அதில் நின்றும் நூற்கப்பட்டதொரு நீல நூல் தழையோ இந்த கூந்தலென்பது—என்று சொல்லலாமென்று பார்த்தார்; இந்த அபூதோபமையையும் ஸஹியாதபடி யன்றோ திருக்குழலிருப்பது. ஆகவே உடனே 'அன்று' என்று தாமே மறுத்துவிட்டார். பின்னை என்னவென்று சொல்லலாமென்ன, 'மாயன் குழல்' என்றிவ்வளவே [உபமேயந் தன்னையே] சொல்லவேணுமென்று முடித்தார். அதே ரீதியில் அமைந்ததுதான் இந்த ச்லோகமும்.

**திமிரநிர்மிதமேவ அந்தம் தமஃ யத் ஸ்யாத் தத்ஸாரஸாதித ஸுதந்து அதிவ்ருத்த வார்த்தம்**—இருளையே உபாதாநமாகக் கொண்டு நிர்மிக்கப்பட்ட ஒரு காடாந்தகார மிருக்குமாகில் அதனுடைய ஸாரத்தைக் கொண்டு செய்யப்பட்ட நல்ல நூல்தொகுதிதான் அழகருடைய திருக்குழல் என்னப் பார்த்தால் [அதிவ்ருத்தவார்த்தம்] அதை அதிக்ரமித்த வார்த்தையையுடையது — அங்ஙனே சொல்லவொண்ணாததாயிருக்குமென்றபடி. அதுதான் எதுவென்னில்;

**அலகாளி ஜாலம்**—வண்டொத்திருண்ட குழல் கற்றை. அதுதான் யாருடையதென்னில்;

**தத்துல்ய குல்ய மதுபாட்ய மஹாவநஸ்ய கேசவ கிரே ரீசஸ்ய**—தச்சப்தமானது அலகஜாலத்தைப் பராமர்சிக்கக் கடவது; அந்த அலக ஜாலத்தோடே துல்யகுல்யமான [ஸமாநாகாரங்களான] வண்டுகள் நிறைந்த சோலைகளை யுடைத்தான திருமலைக்குத் தலைவ

ரான அழகருடையது. திருமாலிருஞ் சோலை யழகருடைய திருக்குழல் கற்றை யானது......ஸுதந்த்வதிவ்ருத்த வார்த்தம்—என்று முடிப்பது.

[கேசவகிரே:] திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் "தேசமெல்லாம் வணங்கும் திருமாலிருஞ்சோலை நின்ற கேசவ நம்பி" என்கையாலே கேசவன் வர்த்திக்கிற திருமலையைக் கேசவகிரி என்று ப்ரஸித்தமாக வழங்கிப் போருவர்கள். கேஸரி கிரே: என்றும் பாடமுள்ளது. ஸிம்ஹகிரி யென்று அடிக்கடி அருளிச்செய்து வருகிறாரே, அதற்குப் பொருந்தும்.

'அலகாளி ஜாலம்' என்றவிடத்து, 'அலக - அளி -' என்று கொள்வதிற் காட்டிலும் 'அலக - ஆளி' என்று கொள்வது மிகப் பொருந்தும்; நான்காம் பாதத்தோடு புநருக்தமாயிராது. ஆளியென்றது ஆவளி யென்றபடி. அதற்கு மேலும் ஜாலசப்த மிருப்பது மிக அடர்த்தியைக் காட்டும். ... ... 40

जुष्टाष्टमीकज्वलदिन्दुसंनिभं धृतोर्ध्वपुण्ड्रं विलसद्विशेषकम् ।
भूम्ना ललाटं विमलं विराजते वनाद्रिनाथस्य समुच्छ्रितश्रियः ॥४१॥

ஜுஷ்டாஷ்டமீக ஜ்வலதிந்து ஸந்நிபம்
த்ருதோர்த்வபுண்ட்ரம் விலஸத்விசேஷகம்,
பூம்நா லலாடம் விமலம் விராஜதே
வநாத்ரிநாதஸ்ய ஸமுச்ச்ரிதச்ரிய:. 41

* * * இந்த ச்லோகத்தினால் அழகருடைய திருநெற்றியை யநுபவிக்கிறார்.

ஸமுச்ச்ரித ச்ரிய: வநாத்ரிநாதஸ்ய லலாடம் பூம்நா விராஜதே—'ஏறு திருவுடையான்' என்னப்பட்ட திருமாலிருஞ்சோலை யழகருடைய திருநெற்றியானது அதிசயித்து விளங்கா நின்றது. அந்தத் திருநெற்றி எப்படிப்பட்டதென்னில்,

ஜுஷ்டாஷ்டமீக ஜ்வலதிந்து ஸந்நிபம்—அஷ்டமீ திதியன்று விளங்கா நின்ற சந்திரனை யொத்திரா நின்றது. பாதிச் சந்திரன் போன்றதென்கை. வரதராஜஸ்தவத்தில் (32) 'उभयोरपि पक्षयोस्तिथियां" என்ற ச்லோகம் இங்கே அநுஸந்தேயம். தூப்புற் பிள்ளை பணித்த பரமபத ஸோபாநத்தில் ஒன்பதாவதான பராப்தி பர்வத்தில் "திருக்குழல் சேர்த்தியாலே ஒரு பாகமிருளோடே சேர்ந்த அஷ்டமீ சந்த்ரனை யநுகரிக்கிற திருநெற்றியை யநுபவித்து" என்றுள்ளதுங் காண்க.

த்ருதோர்த்வபுண்ட்ரம்—ஊர்த்வ புண்ட்ரமணிந்துள்ளது.

விலஸத்விசேஷகம்—கஸ்தூரீ திலகமும் விளங்கப்பெற்றது. ஆக இப்படிப்பட்ட திருநெற்றி விமலமாக விளங்குகின்றதென்றாராயிற்று. விமலம், விபுலம் என்பன பாடபேதங்கள். ... ... ... 41

सुचारुचापद्वयविभ्रमं भ्रुवोर्युगं सुनेत्राह्वसहस्रपत्रयोः ।
उपान्तगं वा मधुपावलीयुगं विराजते सुन्दरबाहुसंश्रयम् ॥४२॥

ஸுசாருசாபத்வய விப்ரமம் ப்ருவோ:
யுகம் ஸுநேத்ராஹ்வ ஸஹஸ்ரபத்ரயோ:,
உபாந்தகம் வா மதுபாவலீயுகம்
விராஜதே ஸுந்தரபாஹுஸம்ச்ரயம். 42

* * * இந்த ச்லோகத்தினால் அழகருடைய திருப்புருவ வட்டங்களை வருணிக்கிறார். ஸௌந்தரபாஹு ஸம்ச்ரயம் ப்ருவோ: யுகம் விராஜதே—சுந்தரத் தோளுடையரான அழகருடைய திருப்புருவமிரண்டும் விளங்கா நின்றது; எங்ஙனே யென்னில்;

ஸுசாரு சாபத்வய விப்ரமம்—“தன் கைச் சார்ங்கமதுவேபோல் புருவவட்டமழகிய பொருத்தமிலி” என்கிற ஆண்டாள் ஸ்ரீஸூக்தியின்படியே பரம ஸௌந்தரமான இரண்டு விற்களின் விலாஸம் போன்ற விலாஸத்தையுடையதென்கிறார். இப்புருவ விணை எங்ஙனே உல்லேகிக்கும்படி யிராநின்றதென்ன,

ஸௌநேத்ராஹ்வ ஸஹஸ்ரபத்ரயோ: உபாந்தகம் மதுபாவலீயுகம் வா—திருக் கண்களாகிற இரண்டு தாமரை மலர்களின் ஸமீபத்திலே வந்து படிந்த வண்டுத் திரளோ இவை! என்னலாம்படி யிராநின்றதென்கிறார். வாசப்தம் இவார்த்தகம். ‘மதுபாவளீயுகமிவ விராஜதே’ என்றதாயிற்று. ... .... .... 42

अदीर्घमप्रेमदुघं क्षणोज्ज्वलं नचोरमन्तःकरणस्य पश्यताम् ।
अनुब्जमब्जं नु कथं निदर्शनं वनाद्रिनाथस्य विशालयोर्दृशोः ॥४३॥

அதீர்க்க மப்ரேமதுகம் க்ஷணோஜ்ஜ்வலம்
நசோரமந்தஃகரணஸ்ய பச்யதாம்,
அநுப்ஜமப்ஜம் நு கதம் நிதர்சநம்
வநாத்ரிநாதஸ்ய விசாலயோர் த்ருசோ:. 43

* * * இந்த ச்லோகத்தினால் அழகருடைய திருக் கண்களை யநுபவிக்கிறார். செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களென்று சொல்லலாமோ வென்று பார்த்தார்; அழகருடைய திருக்கண்களுக்கும் தாமரை மலர்க்கும் ஒரு படியாலும் ஒற்றுமை இல்லையாயிருக்க அதை எப்படி உவமை கூறலாமென்கிறார்.

அதீர்க்கம்—“நீண்டவப் பெரியவாய கண்கள்” என்று திருப்பாணாழ்வாரும், “இலங்கொளி சேரரவிந்தம் போன்று நீண்ட கண்ணனை” என்று திருமங்கை யாழ்வாரும் பேசும்படியாகத் திருக்கண்கள் நீண்டிருப்பதுபோலே தாமரை நீண்டிருக்கவில்லையே. நீட்சிக்குத் தாமரை ஒப்பாகமாட்டாதே.

அப்ரேமதுகம்—“நீண்டவப் பெரியவாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே” என்னும்படி பிச்சேற்றுந் திறம் திருக் கண்களுக்கல்லது தாமரை மலர்க்கு இல்லையே. ப்ரேம ப்ரகர்ஷத்தை விளைவிப்பதில் தாமரை ஒப்பாகமாட்டாதே.

க்ஷணோஜ்ஜ்வலம்—*எப்பொழுதும் நாள் திங்களாண்டூழி யூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே* என்னும்படி காண்தோறும் நவம் நவமாய் விளங்காநின்ற திருக் கண்களுக்கு அதிஸ்வல்பகாலமே விகாஸத்தோடு கூடி விளங்கக்கடவதான தாமரை ஒப்பாகமாட்டாதே.

பச்யதாம் அந்தஃகரணஸ்ய நசோரம்—*கண்டவர் தம் மனம் வழங்கும்* என்னுமாற் போலே கண்டாருடைய மனத்தைக் கொள்ளை கொள்ளக் கடவதாயிறே திருக்கண்களிருப்பது. இவற்றுக்கு இங்ஙனல்லாத தாமரை ஒப்பாகமாட்டாதே.

அநுப்ஜம்—“உப்ஜ - ஆர்ஜவே”. என்று தாது பாடம். ஆர்ஜவமற்றது என்றபடி. குடிலமாயிறே தாமரை மலர்தானிருப்பது. அது ஆர்ஜவமே வடிவெடுத்த திருக் கண்களுக்கு ஒப்பாகமாட்டாதே. ஆக, அதீர்க்கத்வாதி விசிஷ்டமான அப்ஜமானது,

வநாத்ரிநாதஸ்ய விசாலயோ: த்ருசோ: கதம் ந நிதர்சநம்—திருமாலிருஞ்சோலை யழகருடைய புடை பரந்து நீண்டவப் பெரியவாய திருக்கண்களுக்கு எங்ஙனே த்ருஷ்டாந்தமாகவற்று? ஒருகாலு மாகா தென்றபடி.

இங்ஙனே யருளிச் செய்யுமிவர் * அப்ஜபாதமரவிந்த லோசநம் பத்மபாணிதலம் * என்று தாமரைதன்னையே ஒவ்வோரவயவத்துக்கும் உவமையாக்கிக் கூறுவது எங்ஙனே பொருந்து மென்னில்; ஏதேனுமொன்றை த்ருஷ்டாந்தீகரித்துக் கூறியே போதைப் போக்கவேண்டுமே. நம்மாழ்வார் தாமும் * ஒட்டுரைத் திவ்வுலகுன்னைப் புகழ்வெல்லாம் பெரும்பாலும் பட்டுரையாய்ப் புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதீ * என்று நிற்கச் செய்தேயும் ஒட்டுரைத்துப் புகழாதொழியாரிறே. ... ... 43

प्रश्चोतत्प्रेमसारामृतरसचुलकप्रक्रमप्रक्रियाभ्यां
विक्षिप्तालोकितोर्मिप्रसरणमुषितस्वान्तकान्ताजनाभ्याम् ।
विश्वोत्पत्तिप्रवृत्तिस्थितिलयकरणैकान्तशान्तक्रियाभ्यां
देवोऽलङ्कारनामा वनगिरिनिलयो वीक्षतामीक्षणाभ्याम् ॥४४॥

ப்ரச்சோதத் ப்ரேமஸாராம்ருதரஸ சுளகப்ரக்ரம ப்ரக்ரியாப்யாம்
விக்ஷிப்தாலோகிதோர்மி ப்ரஸரணமுஷிதஸ்வாந்தகாந்தாஜநாப்யாம்,
விச்வோத்பத்தி ப்ரவ்ருத்திஸ்திதிலய கரணைகாந்தசாந்த க்ரியாப்யாம்
தேவோலங்காரநாமா வநகிரிநிலயோ வீக்ஷதாமீக்ஷணாப்யாம். 44

* * * கீழ்ச்லோகத்தில் திருக்கண் ப்ரஸ்துதமாயிற்றிறே; * அங்கணிரண்டுங்கொண்டு — எம்மேல் விழியாவோ * என்றும் * உன் தாமரைக் கண்களால் நோக்காய் * என்றும் ப்ரார்த்திக்கக் கடவதிறே. அந்த ப்ரார்த்தனை இந்த ச்லோகத்திலேயாய்ச் செல்லுகிறது.

வநகிரிநிலய: அலங்காரநாமா தேவ: ஈக்ஷணாப்யாம் வீக்ஷதாம்—திருமாலிருஞ்சோலை மலையுறையும் அழகனலங்காரன் தன்னுடைய திருக் கண்களாலே குளிர நோக்கியருளவேணும். அந்தத் திருக் கண்கள் எப்படிப்பட்டவை யென்னில்;

ப்ரச்சோதத் ப்ரேமஸாராம்ருதரஸ சுளகப்ரக்ரம ப்ரக்ரியாப்யாம்—பெருகுகின்ற அன்பு வெள்ளமாகிற அமுதப் பெருக்கையுடைய சிறுங்கையோ இவை! என்னலாம்படியுள்ளது. சுலகமாவது சிறுங்கை; கண்களின் வைசால்யத்திற்குச் சிறுங்கையை உவமை கூறுவதுண்டு; திருவிருத்தத்தில் (11) * ஓரோ குடங்கைப் பெரியன கெண்டைக் குலம் * என்றது காண்க. அழகருடைய திருக்கண்களாகிற சிறுங்கையில் ப்ரேமஸாரமாகிற அமுதவெள்ளம் பெருகுகின்ற தென்கையாலே அன்போடு கடாக்ஷித்தருளுகின்றமை சொல்லிற்றாகிறது. ப்ரக்ரமமாவது ப்ரகாரம்; ப்ரக்ரியை யென்றாலும் ப்ரகாரமே; சுளகத்தின் தன்மைபோன்ற தன்மையையுடையவை திருக்கண்கள் என்றபடி.

விக்ஷிப்தாலோகிதோர்மி ப்ரஸரண முஷிதஸ்வாந்த காந்தாஜநாப்யாம்—அலையெறிகின்ற கடாக்ஷதாரைகளாலே கோபீ ஜனங்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவை யென்கை. விக்ஷிப்தங்களான ஆலோகிதங்களாகிற அலைகளின் ப்ரஸரணத்தாலே கவரப்பட்ட காந்தாஜநஸ்வாந்தங்களையுடையவை திருக்கண்கள். [விக்ஷிப்த—விசேஷேண ப்ரேரித என்றபடி.] ஆலோகிதமாவது ஆலோகனம். * தூது செய் கண்கள் கொண்டொன்று பேசி * (திருவாய்மொழி) என்கிறபடியே திருக்கண்ணோக்கிலேயே உள்ளத்தைக் கொள்ளைகொள்ளுமவரிறே.

விச்வோத்பத்தி ப்ரவ்ருத்தி ஸ்திதிலய கரணைகாந்த சாந்தக்ரியாப்யாம்—ஸகல சராசரங்களினுடையவும் உத்பத்தி ப்ரவ்ருத்தி ஸம்ரக்ஷண ஸம்ஹாரங்களைச் செய்வதில் மிகவும் ஊக்கமுடையவை யென்கை. * நாவேக்ஷஸே யதி ததோ புவநாந்யமூநி நாலம் ப்ர

போ! பவிதுமேவ குத: ப்ரவ்ருத்தி:* [ஸ்தோத்ரரத்நே] என்று ஆளவந்தாரருளிச் செய்தபடியே அவேக்ஷணமாத்ரத்தாலேயன்றோ விச்வோத்பத்தி ப்ரவ்ருத்தி ஸ்திதி லயங்கள் நடைபெறுகின்றன. ஆக இப்படிப்பட்ட திருக்கண்களாலே அழகர் கடாக்ஷித்தருளவேணுமென்றதாயிற்று. ... ... 44

प्रेमामृतौघपरिवाहिमहाक्षिसिन्धुमध्ये प्रबद्धसमुदञ्चितसेतुकल्पा ।
ऋज्वी सुसुन्दरभुजस्य विभाति नासा कल्पद्रुमाङ्कुरनिभा वनशैलभर्तुः ॥४५॥

ப்ரேமாம்ருதௌகபரிவாஹி மஹாக்ஷிஸிந்து
மத்யே ப்ரபத்த ஸமுதஞ்சித ஸேதுகல்பா,
ருஜ்வீ ஸுஸுந்தரபுஜஸ்ய விபாதி நாஸா
கல்பத்ருமாங்குர நிபா வநசைலபர்த்து:. 45

*** இந்த ச்லோகத்தினால் அழகருடைய திருமூக்கினழகை யநுபவிக்கிறார்.
வநசைலபர்த்து: ஸுஸுந்தர புஜஸ்ய—திருமாலிருஞ்சோலைத் தலைவரான சுந்தரத்தோளுடைய பெருமானது,

ருஜ்வீ கல்பத்ருமாங்குரநிபா நாஸா—நேர்மை பொருந்தியதாய் கற்பகக் கொடியின பல்லவம் போன்றதான நாஸிகையானது,

ப்ரேமாம்ருதௌக பரிவாஹி மஹாக்ஷி ஸிந்துமத்யே ப்ரபத்தஸமுதஞ்சித ஸேதுகல்பா விபாதி—அழகருடைய திருக் கண்கள் ஆச்ரித வாத்ஸல்யாதிசயத்தாலே 'எப்போதும் அலைபாயாநின்றுகொண்டிருப்பதால் 'அலையெறிகின்ற பெருங்கடலோ இது!' என்னலாம்படியிருக்கும்; அத்திருக்கண்களினிடையே கோல நீள் கொடி மூக்கு அமைந்திருப்பதானது கடலிடையே கட்டினஅணைதானோ இது! என்னும்படி யிராநின்றதென்கிறார்.

திருக்கண்களைக் கடலாக ரூபணம் பண்ணினபடிக்கு அமைய "ப்ரேமாம்ருதௌக பரிவாஹி" என்கிற விசேஷணமிடப்பட்டதாயிற்று. கடலானது நீர் வெள்ளத்தைப் பெருக்கும்; இத் திருக்கண்ணாகிற கடலானது ப்ரேமமாகிற அம்ருதப்ரவாஹத்தைப் பெருக்கா நின்றதென்க. திருவாய்மொழியில் *"கட்டிய வெண்ணெயுண்டான் திரு மூக்கு - மாட்டுயர்கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோவறியேன்" என்றருளிச் செய்ததை அடியொற்றி கல்பத்ருமாங்குரநிபா என்றருளிச் செய்தபடி. ... 45

व्याभाषिताभ्यधिकनन्दनभन्दनर्द्धिमन्दस्मितामृतपरिस्रवसंस्तवाढ्यम् ।
आभाति विद्रुमसमाधरमास्यमस्य देवस्य सुन्दरभुजस्य वनाद्रिभर्तुः ॥४६॥

வ்யாபாஷிதாப்யதிகநந்தந பந்தநர்த்தி
மந்தஸ்மிதாம்ருத பரிஸ்ரவ ஸம்ஸ்தவாட்யம்,
ஆபாதி வித்ருமஸமாதர மாஸ்ய மஸ்ய
தேவஸ்ய ஸுந்தரபுஜஸ்ய வநாத்ரிபர்த்து:. 46

*** அழகருடைய திருப்பவள வாயை அநுபவிக்கிறாரிதில்.

வநாத்ரிபர்த்து: ஸுந்தரபுஜஸ்ய அஸ்ய தேவஸ்ய—திருமாலிருஞ்சோலை மலைத் தலைவரான சுந்தரத்தோளுடைய பெருமானின இவ்வழகருடைய, வித்ருமஸமாதரம் ஆஸ்யம் ஆபாதி — * பவளம்போல் கனிவாய் சிவப்ப * என்கிறபடியே சிவந்து கனிந்த திருப் பவளவாயானது விளங்கா நின்றது; இதுதான் எப்படிப்பட்டதென்னில்;

வ்யாபாஷிதாப்யதிகநந்தந பந்தநர்த்தி மந்தஸ்மிதாம்ருத பரிஸ்ரவ ஸம்ஸ்தவாட்யம்—வாய் திறந்து பேசுவதிற்காட்டிலும் இனிதான புன் முறுவல் பூத்திருக்கப்பெற்ற தென்ற வாறு. வ்யாபாஷிதமாவது வ்யாபாஷணம்; (அதாவது) வாய்திறந்தொன்று பணிக்கை; அதிற்காட்டிலும் [அப்யதிக நந்தந]—மிகவும் ஆனந்தகரமாயும், भन्दन— கல்யாணவஹமான, ऋद्धि—ஸம்ருத்தியையுடையதாயுமிருக்கிறது மந்தஸ்மிதம்—புன் னகை; அதுவாகிற அம்ருத பரிஸ்ரவத்தாலே [அம்ருதப் பெருக்கினாலே] ஆட்யம்—நிறைந்தது.

அபிமதஜநதர்சநாநந்த வேகத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி வெளிவிழுகின்ற அவ்யக்த மதுரமந்தஹாஸவிலாஸமானது வாய் திறந்து வார்த்தை சொல்லுமதிற்காட்டிலும் பரமானந்த ஸந்தோஷ ஸந்தாயகமாயிருக்குமாய்த்து. அந்த மந்த ஸ்மிதமானது அம்ருத ப்ரவாஹமென்றும் சொல்லலாம்படியிருக்குமாயிற்று. அது விஞ்சியிருக்கப்பெற்ற திருப்பவளச் செவ்வாய் அநுபவிக்கப்பட்டதாயிற்று. ... 46

यशोदाङ्गुल्यग्रोन्नमितचुबुकाघ्राणमुदितौ कपोलावद्यापि ह्यनुपरततद्धर्षगमकौ ।
विराजेते विष्वग्विततसहकारासवरसप्रमाद्यद्भृङ्गाढ्यद्रुमवनगिरेस्सुन्दरहरेः ॥४७॥

யசோதாங்குல்யக்ரோந்நமித சுபுகாக்ராணமுதிதௌ
கபோலாவத்யாபி ஹ்யநுபரத தத்தர்ஷகமகௌ,
விராஜேதே விஷ்வக்விதத ஸஹகாராஸவரஸ -
ப்ரமாத்யத் ப்ருங்காட்ய த்ருமவநகிரேஸ் ஸுந்தரஹரே:. 47

* * * அழகருடைய திவ்ய கபோலங்களை யநுபவிக்கிறாரிதில்.

விஷ்வக் விததஸஹகாராஸவரஸ ப்ரமாத்யத் ப்ருங்காட்ய த்ருமவநகிரேः ஸுந்தரஹரேः கபோலௌ விராஜேதே—எங்கும் பரந்த தேன்மாமரங்களின் மதுவைப் பருகிக் களித் திரிகின்ற வண்டுகள் நிரம்பிய சோலைகளையுடைய திருமலையை உறைவிடமாகவுடைய ரான அழகருடைய திருக்கபோலங்கள் மிக விளங்குகின்றன. இவை எங்ஙனே யிரா நின்றனவென்னில்;

யசோதாங்குல்யக்ரோந்நமித சுபுகாக்ராணமுதிதௌ அத்யாபி அநுபரத தத்தர்ஷகமகௌ—பண்டு க்ருஷ்ணாவதாரத்தில் யசோதைப் பிராட்டி தன்னுடைய விரல் நுனியாலே மோவாயைத் தூக்கி முத்தமிட்டதனாலே ரோமாஞ்சிதங்களாய் இன்னமும் அந்நிலை மாறாதேயிருப்பனவாம். முத்தமிடுவது கபோலததிலன்றாகிலும் ஹர்ஷம் தோற்று வது கபோலத்திலே யாகையாலே இங்ஙனே யருளிச்செய்யக் குறையில்லை. அழகரு டைய திவ்ய மங்கள விக்ரஹத்தில் ஸ்ரீ க்ருஷ்ண தாதாத்ம்ய பாவனை முற்றி அருளிச் செய்ததாமிது. * கோவலனாய் வெண்ணெயுண்டவாயன் அண்டர்கோனணியரங்கன்* என்றிறே திருப்பாணாழ்வார் தாமும் அநுபவித்துப் பேசினது. ... 47

व्यालम्बिकुण्डलमुदग्रसुवर्णपुष्पनिष्पन्नकल्पलतिकायुगलानुकारम् ।
यत्कर्णपाशयुगलं निगलं धियां नस्सोऽयं सुसुन्दरभुजो वनशैलभूषा ॥४८॥

வ்யாலம்பிகுண்டல முதக்ரஸுவர்ணபுஷ்ப
நிஷ்பந்ந கல்பலதிகாயுகளாநுகாரம்,
யத்கர்ணபாசயுகளம் நிகளம் தியாம் நः
ஸோயம் ஸுஸுந்தரபுஜோ வநசைலபூஷா. 48

* * * — அழகருடைய திருச்செவி மடல்களை யநுபவிக்கிறாரிதில்.

வ்யாலம்பி குண்டலம்—*மகரஞ்சேர் குழையிருபாடிலங்கியாட * என்கிறபடியே தள தளென்று தொங்குகின்ற கனமகரக் குழைகளையுடையதாய்,

உதக்ரஸுவர்ணபுஷ்ப நிஷ்பந்ந கல்பலதிகாயுகளாநுகாரம்—மிகச் சிறந்த ஸ்வர்ண புஷ்பங்களோடு விளங்கப் பெற்ற இரண்டு கல்பலதைகள் போன்றதாய்.

திருச்செவி மடல்களின் ஸ்தானத்தில் கல்பலதையும், கனமகரக் குழைகளின் ஸ்தானத்தில் ஸுவர்ணபுஷ்பமும் கொள்ளக் கடவது. ஆக இப்படிப்பட்டதான.

யத்கர்ணபாசயுகலம் நஃ தியாம் நிகலம்—யாவரொரு அழகருடைய திருச்செவி மடல்களிரண்டும் நம்முடைய புத்திக்கு விலங்குபோலாகின்றதோ. விலங்கிடப்பட்டவன் இடம் விட்டுப் பெயர்ந்து வேறோரிடம் செல்ல முடியாமல் திகைப்பதுபோல் தம்முடைய திருவுள்ளம் அழகருடைய கர்ணபாசத்தை விட்டு மற்றோரவயவத்திலே ஈடுபட முடியாமல் திகைத்திருக்கின்றதென்று காட்டியவாறு.

ஸோயம் ஸுஸுந்தரபுஜஃ வநசைலபூஷா—இத்தகைய கர்ணபாச ஸௌந்தர்யம் வாய்ந்த சுந்தரத்தோளுடையான் திருமலைக்கு திவ்யாலங்காரமாக விளங்குகின்றானென்கை. 48

सदंससंसञ्जितकुन्तलान्तिकावतीर्णकर्णाभरणाढ्यकन्धरः ।

सुबन्धुरस्कन्धनिबन्धनो युवा सुसुन्दरस्सुन्दरदोर्विजृम्भते ॥४९॥

ஸதம்ஸ ஸம்ஸஞ்ஜித குந்தலாந்திகா
வதீர்ண கர்ணாபரணாட்யகந்தரஃ,
ஸுபந்துரஸ்கந்த நிபந்தநோ யுவா
ஸுஸுந்தரஸ் ஸுந்தரதோர் விஜ்ரும்பதே. 49

* * * "களிவண்டெங்குங் கலந்தாற்போல் கமழ் பூங்குழல்கள் தடந்தோள் மேல் மிளிர நின்று விளையாட" என்றும் "மைவண்ண நறுங்குஞ்சிக் குழல் பின் தாழ மகரஞ்சேர் குழையிருபாடிலங்கியாட" என்றும் தனித்தனியே யநுபவித்த அழகுகளைச் சேரப்பிடித்து அநுபவிக்கிறதாய்ச் செல்லுகிறது இந்த ச்லோகம்.

ஸதம்ஸஸம்ஸஞ்ஜித குந்தலாந்திகாவதீர்ண கர்ணாபரணாட்யகந்தரஃ—அழகிய திருத்தோள்களிலே வந்து அலையா நின்ற திருக்குழல்களினருகே தொங்குகின்ற கனமகரக் குழைகளாலே விளங்கா நின்ற திருக்கழுத்தை யுடையவராய்;

ஸுபந்துரஸ்கந்தநிபந்தநஃ—ஸ்கந்த நிபந்தநமாவது திருத்தோள் பட்டைகளின் அமைப்பு; திருக்கழுத்துப் பின்புறத்தின் ஸந்திபந்தம். அது ஸுபந்துரம்—மிகவழகியதாயிருக்கின்றது. இங்ஙனேயிருக்கப் பெற்றவராய்;

யுவா ஸுஸுந்தரஃ—இளகிப்பதித்த திருமேனியையுடையராகையாலே நித்ய யௌவநசாலியாய் அழகரென்று திருநாம முடையரான,

ஸுந்தரதோஃ விஜ்ரும்பதே—சுந்தரத்தோளுடைய பெருமாள் ஓங்கி விளங்குகின்றார். 49

व्यूढगूढभुजजत्रुमुल्लसत्कम्बुकन्धरधरं धराधरम् ।

वृक्षषण्डमयभूभृतस्तटे सुन्दरायतभुजं भजामहे ॥५०॥

வ்யூடகூட புஜஜத்ருமுல்லஸத் கம்புகந்தரதரம் தராதரம்,
வ்ருக்ஷஷண்டமயபூப்ருதஸ் தடே ஸுந்தராயதபுஜம் பஜாமஹே. 50

* * * அழகருடைய திருத்தோள்பட்டையினழகையும் திருக்கழுத்தினழகையும் அநுபவித்துப் பேசுகிறாரிதில்.

வ்ருக்ஷஷண்டமயபூப்ருதஸ் தடே—திருமாலிருஞ்சோலை மலைத் தாழ்வரையினடியிலே,

ஸௌந்தராயத புஜம் பஜாமஹே—சுந்தரத் தடந்தோளுடைய பெருமாளை பஜிக்கிறோம்; அவர் தாம் எப்படிப்பட்டவரென்னில்;

வ்யூடகூட புஜஜத்ரும்—ஸ்கந்தத்திற்கும் கக்ஷத்திற்கும் ஸந்தியானவிடம் ஜத்ருவெனப்படும்; அதன் மேல்பாகமானது புஜஜத்ருவெனப்படும். அது பருத்தும் அவ்யக்தமாயுமிருக்கிறதாயிற்று. மாம்ஸலத்வாதிசயத்தாலே அவ்யக்தமாயிருக்கிறபடி. இப்படிப்பட்ட புஜஜத்ருவையுடையராய்;

கம்புகந்தரதரம்—சங்குபோன்றழகிய திருக்கழுத்தையுடையரான அழகரை. ரேகாத்ரயவிபக்தாங்கமான திருக்கழுத்துக்கு சங்கை உவமை கூறுதல் கவிமரபு. பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே * க்ரமுகதருணக்ரீவா கம்புப்ரலம்பமலிம்லுசஃ கண்டஃ* என்றருளிச் செய்தது காண்க. கந்தராசப்தம் [கழுத்துக்கு வாசகமானது] ஸ்த்ரீலிங்கமாகையாலே 'கந்தராதரம்' என்றேயிருக்கத்தக்கது; இங்கு 'கந்தரதரம்' என்றிருக்கையாலே பஹுவ்ரீஹியை விவக்ஷித்து விசேஷணோபயபத கர்மதாரயமாகக் கொள்ளலாம்.

उल्लसन्ती कम्बुकन्धरा यस्य सः—उल्लसत्कम्बुकन्धरः ; उल्लसत्कम्बुकन्धरश्चासौ धरश्चेति । धरः (தரः)

என்றது நிர்வாஹகனென்றபடி. கந்தரா சப்தம்போலே கந்தர சப்தமும் பும்லிங்கமாகவுண்டென்று ஆழ்வான் திருவுள்ளம்பற்றியே இங்ஙனம் ப்ரயோகித்தருளினராதலால் இங்ஙனே ச்ரமப்படவேண்டாவென்பாருமுளர். திருக்கழுத்தைத் தரிப்பவர் என்றே பொருள் கொள்ளலாம். .... ... ... 50

मन्दरभ्रमणविभ्रमोद्भटास्सुन्दरस्य विलसन्ति बाहवः ।
इन्दिरासमभिनन्दभन्दनाश्चन्दनागरुविलेपभूषिताः ॥५१॥

மந்தரப்ரமண விப்ரமோத்படாஸ் ஸௌந்தரஸ்ய விலஸந்தி பாஹவ:,
இந்திராஸமபிநந்தபந்தநாச் சந்தநாகருவிலேப பூஷிதா:. 51

* * * அழகர்க்கு ஸௌந்தரபாஹுவென்றும் சுந்தரத்தோளுடையானென்றும் திருநாமமாகையாலே அந்த திருத்தோள்களை நான்கு ச்லோகங்களாலே வருணித்தருளிச் செய்கிறார் இது முதலாக. நான்கு திருத்தோள்களுக்கும் நான்கு ச்லோகம் போலும்.

ஸௌந்தரஸ்ய பாஹவ: விலஸந்தி—அழகருடைய பாஹுக்கள் அழகு பொலிந்து விளங்குகின்றன; அவை எப்படிப்பட்டவையென்னில்;

மந்தரப்ரமண விப்ரமோத்படா:—* மந்தரம் நாட்டியன்று மதுரக் கொழுஞ்சாறு கொண்ட சுந்தரத் தோளுடையான் * என்ற நாச்சியார் திருமொழிப் பாசுரத்தைத் திருவுள்ளத்திலே கொண்டு அருளிச் செய்கிற விசேஷணமிது. கடல் கடைந்தருளுகிற காலத்திலே மந்தர மலையை மத்தாக நாட்டி அதனைச் சுழற்றுவதாகிற விலாஸ காரியத்தில் உத்ஸாஹம் பொருந்தியவை அழகருடைய பாஹுக்கள். அநாயாஸமாக மந்தர மலையைச் சுழற்றியவை என்றபடி. இன்னமும் எப்படிப்பட்டவை யென்னில்;

இந்திராஸமபிநந்தபந்தநா:—ஸ்ரீமஹாலக்ஷ்மியை ஸந்தோஷப்படுத்தி அதனாலே உகப்புப் பெற்றவை. * விண்ணவரமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமானாகையாலே * சீதக் கடலுள்ளமுதாக அவதரித்த ஸ்ரீ மஹாலக்ஷ்மியை ஆரத் தழுவி அவளையும் மகிழ்வித்துத் தாமும் மகிழ்ந்தவை யென்க. இன்னமும் எப்படிப்பட்டவை யென்னில்;

சந்தநாகருவிலேபபூஷிதா :—* ஏவிற்றுச் செய்வான் ஏன்றெதிர்ந்து வந்த மல்லரைச் சாவத்தகர்த்த சாந்தணிதோள் சதுரன் * [343] என்று பெரியாழ்வாரருளிச் செய்ததைத் திருவுள்ளம் பற்றிப் பணித்தபடி. வட மதுரையில் கூனி பூசின சாந்து சூறியழியாமே மல்லரோடே பொருது வெற்றி பெற்ற திருத்தோள்களே இவையென்று காட்டினபடி. ஸுகந்தி சந்தனமணிந்து விளங்குபவை. ... ... 51

ज्याकिणाङ्कपरिकर्मधर्मिणो भान्ति सुन्दरभुजस्य बाहवः ।
पारिजातविटपायितर्द्धयः प्रार्थितार्थपरिदानदीक्षिताः ॥ ५२ ॥

ஜ்யாகிணாங்க பரிகர்ம தர்மிணோ
பாந்தி ஸுந்தரபுஜஸ்ய பாஹவ:,
பாரிஜாதவிடபாயிதர்த்தய:
ப்ரார்த்திதார்த்த பரிதாநதீக்ஷிதா:. 52

* * * இந்தச்லோகமும் ஸுந்தரபாஹுவின் பாஹுவர்ணநம். ஸுந்தரபுஜஸ்ய பாஹவ: பாந்தி—ஸுந்தரபாஹு பகவானுடைய பாஹுக்கள் விளங்குகின்றன. அவைதாம் எப்படிப்பட்டவை யென்னில்; ஜ்யாகிணாங்க பரிகர்ம தர்மிண:— மஹாவீரனுடைய பாஹுக்களென்று கண்டவாற்றால் தெரிகிறபடி. * தழும்பிருந்த சார்ங்க நாண் தோய்ந்தவாமங்கை * என்ற பொய்கையாழ்வார் பாசுரத்தைத் திருவுள்ளம் பற்றிப் பேசுகிறார். ஸ்ரீ சார்ங்க வில்லின் நாணித்தழும்பாலே அலங்கரிக்கப்பட்டவை யென்கை. விபவாவதாரங்களில் ஆச்ரித விரோதிகளைத் தொலைக்கும் பொருட்டுப் பல பல போர்களைச்செய்து அந்த யுத்தங்களில் நேர்ந்த வில்நாணியின் வடுக்கள் அவ்வவதார தசையில் ஸ்ரீராமக்ருஷ்ணாதி மூர்த்திகளின் திருக்கைகளை அலங்கரித்திருந்தன. அவையே அர்ச்சையிலும் இவர்களுடைய ப்ரத்யக்ஷத்ருஷ்டிக்கு கோசரமாகிறபடி. ஆள வந்தார் * சகாஸதம் ஜ்யாகிண கர்க்கசைச் சுபைச் சதுர்ப்பிராஜாநு விலம்பிபிர் புஜை:* என்று பரதசையில் அநுஸந்தித்தால் அர்ச்சையிலநுஸந்திக்கக் கேட்கவேணுமோ?

இன்னமும் எப்படிப்பட்டவையென்னில்;

பாரிஜாதவிடபாயிதர்த்தய:— கற்பகத்தருவின் கிளைகளோ! என்னலாம்படியமைந்த ஸம்ருத்தியையுடையன. இன்னமும் எப்படிப்பட்டவையென்னில்;
ப்ரார்த்திதார்த்தபரிதாநதீக்ஷிதா:— கேட்டார் கேட்டதெல்லாம் வழங்குவதில் தீக்ஷை கொண்டவை. * அலம்புரிந்த நெடுந்தடக்கை யமரர் வேந்தனிறே. ... 52

सागराम्बरतमालकाननश्यामलर्द्धय उदारपीवराः ।
शेषभोगपरिभोगभागिनस्तन्निभा वनगिरीशितुर्भुजाः ॥ ५३ ॥

ஸாகராம்பரதமால காநநச்யாமலர்த்தய உதார பீவரா:,
சேஷபோகபரிபோகபாகிநஸ் தந்நிபா வநகிரீசிதுர் புஜா:. 53

* * * இதுவும் அழகருடைய திருத்தோள்களை வருணிப்பது.

ஸாகர் அம்பர தமாலகாநந ச்யாமல ருத்தய:— கடல்போலவும் ஆகாசம் போலவும் பச்சிலைப் பொழில் போலவும் பேசலாம்படியான பசுமை வாய்ந்தவை. இவை, வெறும் நிறத்திற்குமாத்திரமன்றிக்கே வைசால்யத்திற்கும் உவமையாம். ஸாகராம்பரதமால கானனங்களின் சாமநிறத்தின் ஸம்ருத்தியையுடையவை.

உதாரபீவரா:—* उदारो दातृमहतोः * என்று கோசமாகையாலே இங்கு உதார பதத்தினால் தாத்ருத்வமும் மஹத்த்வமும் விவக்ஷிதமாகலாம். நீண்டு பருத்தவையென்க. இன்னமும் எப்படிப்பட்டவையென்னில்;

சேஷபோக பரிபோகபாகிந:— திருவனந்தாழ்வானுடைய திருமேனியின்மீது கிடந்து ஆனந்தாநுபவம் செய்யுமவையென்கை. * வெள்ளை வெள்ளத்தின்மேலொருபாம்பை மெத்தையாக விரித்து அதன்மேலே கள்ள நித்திரை செய்யும்போது *- தன்தாளுந் தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பித் திருக்கண் வளர்ந்தருளுகிறபடியை நினைத்து அருளிச் செய்ததாமிது. * ஆயிரந்தோள் பரப்பி முடியாயிரம் மின்னிலக ஆயிரம் பைந்தலைய அனந்த சயனனுளும் மலை—மாலிருஞ் சோலையதே * என்ற பெரியாழ்வாரருளிச் செயல் இங்கே அநுஸந்தேயம்.

தந்நிபா:— * போகிபோக சயநீயசாயிகளென்று கீழே சொல்லிற்று ; அவ்வளவேயன் றிக்கே அந்தத் திருவனந்தாழ்வானுடைய திருமேனியோடே ஸாம்யமுமுடையவை யென்கிறது இத்தால். ஆக இப்படிப்பட்டவை வநகிரீசிது: புஜா:. ... 53

अहमहमिकाभाजो गोवर्धनोद्धृतिनर्मणि प्रमथनविधावब्धेर्लब्धप्रबन्धसमक्रियाः ।
अभिमतबहूभावाः कान्ताभिरम्भणसंभ्रमे वनगिरिपतेर्बाहाश्शुम्भन्ति सुन्दरदोर्हरेः ॥ ५४ ॥

அஹமஹமிகாபாஜோ கோவர்த்த நோத்த்ருதி நர்மணி
ப்ரமதநவிதாவப்தேர் லப்தப்ரபந்த ஸமக்ரியா:,
அபிமதபஹூபாவா: காந்தாபிரம்பணஸம்ப்ரமே
வநகிரிபதேர் பாஹாச் சும்பந்தி ஸுந்தரதோர்ஹரே:. 54

* * * இந்தச்லோகத்தோடே பாஹு வர்ணனம் தலைக்கட்டுகிறதாயிற்று.

வநகிரிபதே: ஸுந்தரதோர்ஹரே: பாஹா: சும்பந்தி—திருமாலிருஞ் சோலைமலைக்குத் தலைவரான ஸுந்தரபாஹு பகவானுடைய திருத்தோள்கள் சால விளங்குகின்றன. அவைதாம் எப்படிப்பட்டவை யென்னில் ;

கோவர்த்தந உத்த்ருதிநர்மணி அஹமஹமிகாபாஜ:— கோவர்த்தனமென்னும் மலையைக் கொற்றக்குடையாக ஏந்திநிற்கும் லீலா விசேஷத்திலே நான்முன்னே நான் முன்னே யென்று முற்கோலி நிற்குமவை. अहं पूर्वम् अहं पूर्वमिति या प्रवृत्तिः सा अहमहमिका । இதனால் உத்ஸாஹாதிசயம் சொன்னபடி. உத்ஸாஹத்தோடு கோவர்த்தனகிரியைக் குடை யாகவேந்திநின்றவை யென்றபடி. இன்னமும் எப்படிப்பட்டவை யென்னில் ;

அப்தே: ப்ரமதநவிதௌ லப்தப்ரபந்தஸமக்ரியா:— கடல்கடைவதாகிற வியாபாரத்தில் முயன்று நின்ற தேவாசுரர்களோடொக்கத் தொழில் செய்தவையென்கை. ப்ரபந்த மாவது முயற்சி. லப்தப்ரபந்தா:—முயன்று நின்றவர்கள் ; அவர்களாகிறார் சுரர்களும் அசுரர்களும். அவர்கள் இளைத்துநின்ற காலத்திலே அந்த க்ரியையை இவைதாம் செய்தனவாயிற்று. * அரங்கனே ! தரங்கநீர் கலங்கவன்று குன்று சூழ்மரங்கள்தேய மாநிலங் குலுங்க மாசுணம் சுலாய், நெருங்கநீ கடைந்தபோது நின்றசூரர் என் செய்தார் ? * என்ற திருச்சந்த விருத்தப்பாசுரம் காண்க. இன்னமும் எப்படிப் பட்டவையென்னில் ;

காந்தா அபிரம்பண ஸம்ப்ரமே அபிமதபஹூபாவா:— கடைந்த கடலினின்று பிராட்டி தோன்ற அவளை ஆரத்தழுவுகிற ஸம்ப்ரமத்தில் விச்வரூபமெடுக்கக் கோலினவை யன்கை. இரண்டாயும் நான்காயுமிருந்து தழுவுகையில் பர்யாப்தி பிறவாமையாலே பஹுபவநஸங்கல்பம் கொண்டபடி. ஆக இப்படிப்பட்டவையாம் அழகருடைய திருத்தோள்கள். ... ... ... 54

श्रीमद्वनाद्रिपतिपाणितलाब्जयुग्ममारूढयोर्विमलशङ्खरथाङ्गयोस्तु ।
एकोऽब्जमाश्रित इवोत्तमराजहंसः पद्मप्रियोऽर्क इव तत्समितो द्वितीयः ॥ ५५

ஸ்ரீமத்வநாத்ரிபதி பாணிதலாப்ஜயுக்மம்
ஆரூடயோர் விமலசங்கரதாங்கயோஸ்து,
ஏகோப்ஜமாச்ரித இவோத்தமராஜ ஹம்ஸஃ
பத்மப்ரியோர்க்க இவ தத்ஸமிதோ த்விதியஃ. 55

* * * திருமாலிருஞ் சோலையழகருடைய திருக்கைத்தலங்களில் விளங்கும் திருவாழி திருச்சங்குகளை யநுபவிக்கிறார்.

ஸ்ரீமத்வநாத்ரிபதிபாணிதலாப்ஜயுக்மம் ஆரூடயோஃ— அழகருடைய இரண்டு திருக்கைகளிலும் ஏறியிருக்கிற. * ஊழியான் கைத்தலத்திடரில் குடியேறி * என்றும், * வடமதுரையார் மன்னன் வாசுதேவன் கையில் குடியேறி வீற்றிருந்தாய் கோலப் பெருஞ் சங்கே * என்றும் ஆண்டாளருளிச் செய்ததை யடியொற்றி ஆரூட பதப்ரயோகம் செய்தருளினபடி.

விமல சங்கரதாங்கயோஃ—*வெள்ளைவிளிசங்கும் திருவாழியாழ்வானுமாகிற இருவர்க்குள்.

ஏகஃ அப்ஜமாச்ரிதஃ உத்தமராஜஹம்ஸ இவ—ஒருவரான ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வான் தாமரைமலரிலே துயில்கொள்ளும் ராஜஹம்ஸம்போலே விளங்காநின்றார். நாச்சியார் திருமொழியில் * செங்கமல நாண் மலர்மேல் தேனுகரு மன்னம்போல், செங்கட் கருமேனி வாசுதேவனுடைய, அங்கைத் தலமேறி அன்னவசஞ் செய்யும் சங்கரையா! உன் செல்வம் சாலவழகியதே * என்ற பாசுரத்தைத் தழுவி இது அருளிச் செய்தபடி.

த்விதீயஸ்து தத்ஸமிதஃ பத்மப்ரியஃ அர்க்க இவ—மற்றொருவரான திருவாழியாழ்வானோ வென்னில்; தாமரை மலரிலே வந்து வீற்றிருக்கின்ற ஸூர்யன்போலே விளங்காநின்றார். ஸூர்யன் தாமரை மலரிலே வந்து வீற்றிருப்பதற்கு ப்ரஸக்தியேதென்ன, [பத்மப்ரியஃ] இது ஹேது கர்ப்ப விசேஷணம்; கமலபாந்தவனாகையாலே கமலத்திலே வந்து கிடக்கலாமிறே. ஆக, அழகருடைய இரண்டு திருக்கைகளும் இரண்டு தாமரையாகையாலே ஒரு தாமரையிலே அன்னம் வந்துபடிந்து சங்காக விளங்குகின்றது; மற்றொரு தாமரையிலே ஸூர்யன் வந்துபடிந்து ஸுதர்சநமாக விளங்குகின்றான் என்றாராயிற்று. [ஸமிதஃ—ஸம்யக் இதஃ— ப்ராப்தஃ; ‘இண்—கதௌ’ என்கிற தாதுவிலே கர்த்தரி க்தப்ரத்யயாந்தமிது.] ... ... 55

लक्ष्म्याः पदं कौस्तुभसंस्कृतं च श्रीवत्सभूमिर्विमलं विशालम् ।
विभाति वक्षो वनमालयाऽऽढ्यं वनाद्रिनाथस्य सुसुन्दरस्य ॥ ५६ ॥

லக்ஷ்ம்யா: பதம் கௌஸ்துபஸம்ஸ்க்ருதஞ்ச
ஸ்ரீவத்ஸபூமிர் விமலம் விசாலம்,
விபாதி வக்ஷோ வநமாலயாட்யம்
வநாத்ரிநாதஸ்ய ஸுஸுந்தரஸ்ய. 56

* * * அழகருடைய திருமார்பையநுபவிக்கிறாரிதில்.

வநாத்ரிநாதஸ்ய ஸுஸுந்தரஸ்ய வக்ஷோ விபாதி—திருமாலிருஞ்சோலை மலைக்குத் தலைவரான அழகருடைய திருமார்பு விளங்காநின்றது. அது எங்ஙனே யிராநின்றதென்னில்;

லக்ஷ்ம்யாः பதம்— * அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பா * என்றும் * பூவார் திருமாமகள் புல்கியமார்பா * என்றும் சொல்லுகிறபடியே பெரிய பிராட்டியாருக்கு நித்ய நிகேதநமாயிரா நின்றது.

கௌஸ்துப ஸம்ஸ்க்ருதஞ்ச— * குருமாமணிப்பூண் குலாவித் திகழும் திருமார்வு * என்கிறபடியே கௌஸ்துபாலங்க்ருதமாயிரா நின்றது.

ஸ்ரீவத்ஸ பூமி:— * திருமறு மார்பனுகையாலே ஸ்ரீவத்ஸமென்னும் மயிர்ச்சுழிக்கு இருப்பிடமானது.

விமலம் விசாலம்— பளபளென்றகன்று காடவ்யூடமாய் விளங்காநின்றது.

வநமாலயா ஆட்யம்— * ஆபாதசூடம் யா மாலா வநமாலேதி கத்யதே * என்கிறபடியே திருமுடி தொடங்கித் திருவடியளவாக விளங்காநின்ற வநமாலையாலே சோபிதமானது. ஆக இப்படிப்பட்ட திருமார்பு திகழா நின்றதென்றாராயிற்று. 56

सौन्दर्यामृतसारपूरपरिवाहावर्तगर्तायितं यातः किञ्च विरिञ्चिसंभवनभूम्यम्भोजसंभूतिभूः ।
नाभिश्शुम्भति कुम्भिकुम्भनिभनिर्भातस्तनस्वर्वधूसंभुक्तद्रुमषण्डशैलवसतेरारूढलक्ष्म्या हरेः ॥

ஸௌந்தர்யாம்ருத ஸாரபூரபரிவாஹாவர்த்த கர்த்தாயிதம்
யாதः கிஞ்ச விரிஞ்ச ஸம்பவநபூம்யம்போஜஸம்பூதிபூः,
நாபிச் சும்பதி கும்பிகும்பநிபநிர்ப்பாத ஸ்தநஸ்வர்வதூ
ஸம்புக்தத்ருமஷண்ட சைலவஸதே ராரூட லக்ஷ்ம்யா ஹரேः. 57

* * *— அழகருடைய திருக்கொப்பூழ்தன்னை யநுபவிக்கிறாரிதில். * கொப்பூழில் எழுகமலப்பூவழகர் * என்று ஆண்டாளநுபவித்த முறையிலே அநுபவிக்கிறாராயிற்று. கும்பிகும்பநிப நிர்ப்பாத ஸ்தநஸ்வர்வதூ ஸம்புக்தத்ருமஷண்ட சைலவஸதேः ஆரூட லக்ஷ்ம்யாः ஹரேः நாபிः சும்பதி—யானையினுடைய கும்பஸ்தலம் போன்று விளங்குகின்ற கொங்கைத் தலங்களையுடைய தேவமாதர்கள் [ஊர்வசீ மேநகா ரம்பா திலோத்தமாதிகள்] வந்து இறைஞ்சியேத்தியநுபவிக்குமிடமான திருமாலிருஞ் சோலைமலையை உறைவிடமாகவுடையவரும், 'ஏறு திருவுடையான்' என்னப்பெற்றவருமான அழகருடைய திருநாபியானது விளங்காநின்றது. அது எப்படிப்பட்டதென்ன, இரண்டு விசேஷணங்களாலே அதன் பெருமையை யருளிச்செய்கிறார் ;—

ஸௌந்தர்யாம்ருத ஸாரபூரபரிவாஹாவர்த்த கர்த்தாயிதம் யாத:— ஸௌந்தர்யமாகிற அமுதவாறு பெருகப்புக, அதிலே தோன்றின சுழியோ இது! என்னலாம்படியிரா நின்றது. மஹாப்ரவாஹமுள்ள விடங்களிலே சுழியுண்டாவது காணாநின்றோம். அழகருடைய திருமேனியடங்கலும் பெருவெள்ளங்கோத்துப் பெருகாநின்ற ஸௌந்தர்ய ப்ரவாஹத்தின் வேகத்தினாலே யுண்டான சுழிதான் திருநாபியென்று வ்யபதேசிக்கப்படுகின்றதென்றதாயிற்று. "பவதநுபவரஸவிவசருடைய அபிநிவேச பாசபரி ப்ராமித மதிமந்தாநமத்யமாநமான ஸௌந்தர்ய துக்தஸிந்துவானது சுற்றோரம் திரைந்தெழுந்து நடுக்குழித்திட்ட சுழிபோல் சுந்தரமாமுந்திமலரும்" என்ற * டுபாடு காண்க. सौन्दर्यामृतसारपूरपरिवाहे आवर्तगर्तत्वं प्राप्तः என்றவாறு. கிஞ்ச—மேலும்;

விரிஞ்சஸம்பவநபூமி அம்போஜஸம்பூதிபூ:— * உய்யவுலகு படைக்கவேண்டி உந்தியில் தோற்றினாய் நான்முகனை * என்றும், * தன்னுடிவலயத்துப் பேரொளிசேர் மன்னிய தாமரை மாமலர்பூத்து, அம்மலர்மேல் முன்னம் திசைமுகனைத் தான் படைக்க * என்றும் சொல்லுகிறபடியே நான்முகனுக்குப் பிறப்பிடமாகவுள்ளது. ஆக இப்படிப்பட்ட திருநாபி திகழ்கின்றது. ... ... 57

सुन्दरस्य किल सुन्दरबाहोः श्रीमहातरुवनाचलभर्तुः ।
हन्त ! यत्र निवसन्ति जगन्ति प्रापितकृशिम तत्तनु मध्यम् ॥ ५८ ॥

ஸுந்தரஸ்ய கில ஸுந்தரபாஹோ: ஸ்ரீமஹாதருவநாசலபர்த்து:,
ஹந்த யத்ர நிவஸந்தி ஜகந்தி ப்ராபிதக்ருசிம தத் தநு மத்யம். 58

* * * அழகருடைய இடையழகைய நுபவிக்கிறாரிதில்.

ஸ்ரீமஹாதருவநாசலபர்த்து: ஸுந்தரஸ்ய ஸுந்தரபாஹோ: யத்ர மத்யே ஜகந்தி நிவஸந்தி, தத் தநுமத்யம் ப்ராபிதக்ருசிம ஹந்த—திருமாலிருஞ் சோலைமலையுறையும் சுந்தரத்தோளுடைய அழகப்பிரானுடைய எந்த மத்யத்திலே பிரளய காலத்தில் உலகங்களெல்லாம் உறைகின்றனவோ அது எவ்வளவோ பருத்திருக்கவேணுமே ; அப்படியன்றிக்கே க்ருசமாயிராநின்றது அந்தோ! என்று விஸ்மயந்தோற்ற அருளிச்செய்கிறபடி. * அண்டரண்ட பகிரண்டத் தொருமாநில மெழுமால்வரை முற்றுமுண்ட * என்றும், * மஞ்சாடுவரையேழுங் கடல்களேழும் வானகமும் மண்ணகமும் மற்றுமெல்லாம் எஞ்சாமல் வயிற்றடக்கி * என்றும் சொல்லுகிறபடியே ஸகல சராசரங்களையும் உள்ளே கொண்டிருக்கக்கடவதான திருவுதரம் பெருத்தன்றோ விளங்க வேணும்; உண்டதுருக்காட்டாதே சிறுத்துக்கிடக்கிறபடி என்னே ! என்கிறார். உத்தம புருஷர்களின் உதரம் ப்ரக்ருத்யா க்ருச மென்றதாயிற்று.

ப்ராபிதக்ருசிம—அடைவிக்கப்பட்ட க்ருசத்வத்தையுடையது. க்ருசமாயிருக்குந் தன்மையைப் பெற்றிருக்கிறதென்றபடி.

தநுமத்யம்—இதனை ஸமஸ்தபதமாகவும் கொள்ளலாம், வ்யஸ்தபதமாகவுங் கொள்ளலாம். ஸமஸ்தமாகக் கொண்டால், தநுவென்று திருமேனியைச் சொல்லிற்றாய் திவ்யமங்கள விக்ரஹத்திலுள்ள மத்ய ப்ரதேசமென்றபடி. வ்யஸ்தமாகக் கொண்டால், தநு—ஸூக்ஷ்மமான என்றபடி. ... .... 58

पिष्टदुष्टमधुकैटभकीटौ हस्तिहस्तयुगलाभसुवृत्तौ ।
राजतः क्रमकृशौ च सदूरू सुन्दरस्य वनभूधरभर्तुः ॥ ५९ ॥

பிஷ்ட துஷ்டமதுகைடபகீடௌ
ஹஸ்திஹஸ்த யுகளாபஸுவ்ருத்தௌ,
ராஜத: க்ரமக்ருசௌ ச ஸதூரு
ஸுந்தரஸ்ய வநபூதரபர்த்து:. 59

* * * இந்தச்லோகத்தினால் அழகருடைய திருத்துடைகளை அநுபவிக்கிறார்.

வநபூதரபர்த்து: ஸுந்தரஸ்ய ஸதூரு ராஜத:— திருமாலிருஞ்சோலைமலைக்குத் தலைவரான அழகருடைய அழகிய திருத்துடைகள் விளங்காநின்றன ; அவைதாம் எப்படிப்பட்டவையென்னில் ;

பிஷ்டதுஷ்ட மதுகைடபகீடௌ—ஆதிஸ்ருஷ்டி காலத்தில் தோன்றினவர்களாய் மஹாபலிஷ்டர்களான மது கைடபர்களென்னு மஸுரர்களிருவரும் முன்னொரு காலத்திலே நான்முகனிடத்திலிருந்து வேதங்களைக் கொள்ளைகொண்டு கடலில் மூழ்கி மறைந்துவிட, ஞானவொளியைத்தரும் பெருவிளக்கான வேதங்களொழிந்தமைபற்றி உலகமெங்கும் பேரிருள் மூடி நலியாநிற்க, பிரமன் முதலியோரனைவரும் கண்கெட்டவர் போல யாதொன்றும் செய்யவறியாமல் திகைத்து வருந்துவது கண்டு எம்பெருமான்

திருவுள்ளமிரங்கிக் கடலினுள் புகுந்து அவ்வஸுரர்களைத் தேடிக் கண்டுபிடிக்க, அவர்களும் செருக்கி எம்பெருமானை யெதிர்த்துப் பெரும் போர்புரிய, எம்பெருமான் இவர்களைத் துடையிலிறுக்கி முடித்ததாக இதிஹாஸம். பண்டொரு ஸமய விசேஷத்திலே இவ்வஸுரர்கள் பெற்றிருந்த வரம் பழுதாகாமைக்காகவாயிற்று துடையிடையிலிறுக்கிக் கொன்றது. பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் அழகிய மணவாளனுடைய திருத்துடைகளை வருணிக்குமிடத்து * மதமிவ மதுகைடபஸ்ய * என்றருளிச் செய்திருப்பது காண்க. ஆக, மதுகைடபர்களைப் பேஷணம் பண்ணின பெருமையையுடையவை அழகருடைய திருத்துடைகள் என்றதாயிற்று. இன்னமும் எப்படிப்பட்டவையென்னில் ;

ஹஸ்தி ஹஸ்தயுகளாப ஸுவ்ருத்தௌ—யானையின் துதிக்கையையும் துடைகளுக்கு உவமை கூறுவது கவிமரபு. * ரம்பாஸ்தம்பாः கரிவரகராः * என்றருளிச்செய்கிறார் வரதராஜ ஸ்தவத்திலும். யானையினுடைய இரண்டு துதிக்கைகளோடொத்தவையும் உருண்டிருப்பனவுமாய் விளங்கா நின்றன வென்கை.

हस्तिहस्तयुगलाभौ च तौ सुवृत्तौ चेति विशेषणोभयपदकर्मधारयः ॥

க்ரமக்ருசௌ ச—அடிபருத்து நுனி சிறுத்திருப்பவை யென்றபடி. ... 59

यौवनवृषककुदोद्भेदनिभं नितरां भाति विभोरुभयं जानु शुभाकृतिकम् ।
सुन्दरभुजनाम्नो मन्दरमथिताब्धेश्चन्दनवनविलसत्कन्दरवृषभपतेः ॥ ६० ॥

யௌவநவ்ருஷ ககுதோத்பேதநிபம் நிதராம்
பாதி விபோருபயம் ஜாநு சுபாக்ருதிகம்,
ஸுந்தரபுஜநாம்நோ மந்தரமதிதாப்தேः
சந்தநவநவிலஸத் கந்தரவ்ருஷபபதேः. 60

* * *—அழகருடைய திரு முழந்தாள்களை யநுபவிக்கிறாரிதில்.

மந்தரமதிதாப்தேः சந்தநவந விலஸத்கந்தர வ்ருஷபபதேः ஸுந்தரபுஜநாம்நः விபோः சுபாக்ருதிகம் உபயம் ஜாநு நிதராம் பாதி—

* மந்தரம் நாட்டியன்று மதுரக்கொழுஞ்சாறு கொண்ட சுந்தரத் தோளுடையான் * (நாச்சியார் திருமொழி - 9 - 1-) என்கிறபடியே மந்தரமலையை மத்தாக நாட்டிக் கடல் கடைந்தவரும், * சந்தனப் பொழிலின் தாழ் சினை நீழல்...... மாலிருஞ்சோலை வணங்குதும் வா மட நெஞ்சே * (பெரிய திருமொழி 9-8-1.) என்கிறபடியே சந்தனப் பொழில்கள் விளங்கப்பெற்ற திருமாலிருஞ்சோலை மலைக்குத் தலைவருர், சுந்தரத்தோளுடையானென்று திருநாமமுடையவருமான பெருமானுடைய மிகவழகிய உருவமமைந்த முழந்தாளிணையானது மிகவும் விளங்காநின்றது. அதுதான் எங்ஙனே உத்ப்ரேக்ஷிக்கலாம்படி யிராநின்றதென்னில் ;

யௌவநவ்ருஷககுதோத்பேதநிபம்—யௌவனமாகிற வ்ருஷப ராஜத்தின் முசுப்புக்கள் தான் முழந்தாள்களாக மிளிர்கின்றன வென்னலாம்படி யிராநின்றது. வ்ருஷபத்திற்கு முசுப்பானது அஸாதாரண நிரூபகமாவது போல திருமுழந்தாள்கள் எம்பெருமானுடைய நித்ய யௌவனத்திற்கு அஸாதாரண நிரூபகமாயிராநின்றதென்றபடி.

* स्यादुक्ष्णोर्वा ककुदयुगलं यौवनैश्वर्यनाम्नोः—ஸ்யாதுக்ஷ்ணோர் வா ககுதயுகலம் யௌவனைச்வர்யநாம்நோः * என்ற வரதராஜஸ்தவ ஸூக்தியும் இங்கே அநுஸந்தேயம். ருக்வேதத்தில் "யுவாகுமாரः" என்று ஓதிற்று. அங்கு - யுவா, அகுமாரः என்று பதபாடம். அகுமாரः என்ற விடத்து ஈஷதர்த்தே நஞ். கௌமாரம் கழியும் தசையாயும்

யெளவநம் வந்து தலைகாட்டும் தசையாயுமிருக்கப்பெற்ற நிலைமையே எம்பெருமானுடைய பருவமென்றுணர்க. அதுதான் யெளவனமெனப்படுகிறது. ... 60

अधोमुख न्यस्तपदारविन्दयोरुदञ्चितोदात्तसुनालसंनिभे ।
विलङ्घ्य जङ्घे क नु रंहतो दृशौ वनाद्रिनाथस्य सुसुन्दरस्य मे ॥ ६१ ॥

அதோமுகந்யஸ்தபதாரவிந்தயோ:
உதஞ்சிதோதாத்தஸுநாலஸந்நிபே,
விலங்க்ய ஜங்கே க்வ நு ரம்ஹதோ த்ருசௌ
வநாத்ரிநாதஸ்ய ஸுஸுந்தரஸ்ய மே. 61

* * * அழகருடைய திருக்கணைக்கால்களை யநுபவிக்கிறார் இதில். அழகருடைய திருவடிகளானவை கீழ்முகமாக வைக்கப்பட்ட தாமரைமலர்கள் போன்றிருப்பனவாகவும், திருக்கணைக்கால்களானவை அத்தாமரைகளின் நாளதண்டங்களோ வென்னலாம்படி யிருப்பனவாகவும் அருளிச் செய்கிறாராயிற்று.

வநாத்ரிநாதஸ்ய ஸுஸுந்தரஸ்ய—திருமாலிருஞ்சோலை மலைத் தலைவரான அழகருடைய,

அதோமுகந்யஸ்தபதாரவிந்தயோ: உதஞ்சிதோதாத்த ஸுநாலஸந்நிபே ஜங்கே விலங்க்ய—அதோமுகமாக வைக்கப்பட்ட திருவடித் தாமரைகளினுடைய வ்ருத்தாகாரமாய் ஆயதமாயிருக்கின்ற அழகிய நாளதண்டங்களை யொத்த திருக்கணைக்கால்களைத் தவிர்த்து,

மே த்ருசௌ க்வ நு ரம்ஹத:—என்னுடைய கண்களானவை வேறெங்குச் செல்லும்! எங்கும் செல்லாது. இத் திருக்கணைக்கால்களையே அநுபவித்து நிற்குமத்தனை என்றதாயிற்று.

[அதோ முகந்யஸ்தபதாரவிந்தயோரித்யாதி.] திருவடித்தாமரைகளை அதோ முகமாக வைக்க வேண்டிய காரணம் இங்கு அருளிச் செய்யப்படவில்லையாயினும், வரதராஜஸ் தவத்தில், " प्रेम्णाघ्रातुं करिगिरिशिरोघोमुखीभावभाजोः अंघ्रिद्वंद्वाह्वयकमलयोर्दण्डकाण्डायमाने — ப்ரேம்ணாக்ராதும் கரிகிரிசிரோதோமுகீபாவபாஜோ: அங்க்ரி த்வந்த்வாஹ்வய கமலயோர் தண்ட காண்டாயமாநே." என்று அருளிச் செய்யப்பட்டது இங்கே அநுஸந்திக்கத்தகும். திருமலையின் போக்யதாதிசய ப்ரயுக்தமான ப்ரீதிவிசேஷத்தாலே அதனை உச்சிமோந்து மகிழவேணுமென நினைத்துத் திருவடித்தாமரைகள் கீழ்முகமாக்கப்பட்டன வென்க. ... ... .... 61

सुसुन्दरस्यास्य पदारविन्दे पदारविन्दाधिकसौकुमार्ये ।
अतोऽन्यथा ते बिभृयात्कथं नु तदासनं नाम सहस्रपत्रम् ॥ ६२ ॥

ஸுஸுந்தரஸ்யாஸ்ய பதாரவிந்தே பதாரவிந்தாதிக ஸௌகுமார்யே,
அதோந்யதா தே பிப்ர்யாத் கதம் நு ததாஸநம் நாம ஸஹஸ்ரபத்ரம். 62

* * * இந்த ச்லோகத்தாலும் அடுத்த ச்லோகத்தாலும் அழகருடைய திருவடியிணைகளும் ஆஸன பத்மமுமான சேர்த்தி யழகை ஒரு விலக்ஷணமான உத்ப்ரேக்ஷையோடுங்கூட அநுபவிக்கிறார். நம்மாழ்வார் திருவாய்மொழியில் (4-5-8) *தண்டாமரை சுமக்கும் பாதப் பெருமானை* என்றருளிச் செய்தார்; குளிர்ந்த ஆஸந பத்மத்தாலே தரிக்கப்பட்ட திருவடிகளையுடையவனென்கை. எம்பெருமானுடைய திருவடிகளின் கீழே பத்மாஸநமொன்று உண்டே; அதன் மேலன்றோ திருவடிகள் விளங்குகின்றன; *அடிச்சோதி நீ நின்ற தாமரையாயலர்ந்ததுவோ* என்ற பாசுரமும் இங்கே அநுஸந்தேயம். "தண்டாமரையின்மீது விளங்குகின்ற பாதங்களையுடைய

வன்” என்ன வேண்டுமிடத்து ‘தண்டாமரை சுமக்கும் பாதன்’ என்றது ஒரு உத்ப்ரேக்ஷையில் நோக்காக; அதாவது குளிர்த்தியிலும் பரிமளத்திலும் செவ்வியிலும் தாமரைப் பூவானது திருவடிக்குத் தோற்றுப் போயிற்றும்; தோற்றவர்கள் வென்றவர்களைச் சுமப்பதென்கிற ஒரு வ்யவஸ்தை உலகிற் காண்பதாதலால் தோல்வி யடைந்த தாமரைப் பூ வெற்றிபெற்ற திருவடியைச் சுமக்க வேண்டியதாயிற்றுப் போலுமென்கை. இவ்விஷயத்தை அடுத்த மேல் ச்லோகத்தில் வ்யக்தமாக அருளிச் செய்கிறார். இந்த ச்லோகத்தில் அதனை ஸாமாந்யமாக ப்ரஸ்தாவிக்கிறார்.

அஸ்ய ஸுஸுந்தரஸ்ய பதாரவிந்தே—இவ்வழகருடைய திருவடித் தாமரைகளானவை.

பதாரவிந்தாதிக ஸௌகுமார்யே—ஆஸன பத்மத்திற் காட்டிலும் அதிசயித்த ஸௌகுமார்ய முடையன. இஃது எங்ஙனே தெரிகிறதென்னில்;

அதோந்யதா—கீழே சொன்னபடியல்லவாகில்.

ஆஸநம் நாம தத் ஸஹஸ்ரபத்ரம் தே கதம் ந பிப்ருயாத்?—ஆஸன பத்மமென்று ப்ரஸித்தமான அந்தத் தாமரையானது திருவடித் தாமரைகளை ஏன் சுமக்கும்? தோற்றதனாலன்றோ சுமக்கின்றதென்று திருவுள்ளம். இது மேல் ச்லோகத்திலே விசதமாகும். ... ... ... 62

सौन्दर्यमार्दवसुगन्धरसप्रवाहैरेते हि सुन्दरभुजस्य पदारविन्दे ।
अम्भोजडम्भपरिरम्भणमभ्यजैष्टां तद्वै पराजितमिमे शिरसा बिभर्ति ॥६३॥

ஸௌந்தர்ய மார்தவஸுகந்தரஸ ப்ரவாஹைः
ஏதே ஹி ஸுந்தரபுஜஸ்ய பதாரவிந்தே,
அம்போஜடம்பபரிரம்பணமப்யஜைஷ்டாம்
தத் வை பராஜிதமிமே சிரஸா பிபர்த்தி. 63

*** கீழ் ச்லோகத்தி லருளிச் செய்த விஷயம் இதில் உபபத்தியுடன் விவரிக்கப்படுகிறது. அழகு, ஸௌகுமார்யம், நறுமணம், மகரந்தரஸ ப்ரவாஹம் ஆகிய இவற்றாலே அழகருடைய திருவடிகளானவை தாமரையை வென்றிட்டபடியினால் தோல்வி யடைந்த அந்தத் தாமரைப் பூ இந்தத் திருவடிகளைச் சுமக்கின்றது என்கிறார்.

ஸுந்தரபுஜஸ்ய ஏதே பதாரவிந்தே—சுந்தரத் தோளுடையானது இந்தத் திருவடித் தாமரைகளானவை,

ஸௌந்தர்ய மார்தவ ஸுகந்த ரஸப்ரவாஹை:—அழகு, மென்மை, நறுமணம், மகரந்தரஸ ப்ரவாஹம் ஆகிய இவற்றாலே,

அம்போஜடம்பபரிரம்பணம் அப்யஜைஷ்டாம்—தாமரை மலரின் செருக்குக் கிளர்ச்சியை வென்றொழித்தன;

தத் வை பராஜிதம் (ஸத்) இமே சிரஸா பிபர்த்தி—அந்தத் தாமரையானது பராஜிதமாகி இத் திருவடிகளை ஆஸநபத்மமாய்க் கொண்டு சுமந்திராநின்றது. .... 63

एते ते बत ! सुन्दराह्वयजुषः पादारविन्दे शुभे यन्निर्णेजसमुत्थितत्रिपथगास्रोतस्सु किञ्चित्किल ।
यत्तेऽसौ शिरसा ध्रुवस्तदपरं स्रोतो भवानीपतिर्यस्यास्यालकनन्दिकेति निजगुर्नामैवमन्वर्थकम् ॥६४॥

ஏதே தே பத ஸுந்தராஹ்வயஜுஷः பாதாரவிந்தே சுபே
யந்நிர்ணேஜஸமுத்தித த்ரிபதகா ஸ்ரோதஸ்ஸு கிஞ்சித் கில,
தத்தேஸௌ சிரஸா த்ருவஸ் ததபரம் ஸ்ரோதோ பவாநீபதிः
யஸ்யாஸ்யாலக நந்திகேதி நிஜகுர் நாமைவமந்வர்த்தகம். 64

* * * அழகருடைய திருவடித் தாமரைகளில் கங்கை பெருகின வரலாற்றை யநுபவித்துப் பேசுகிறாரிதில்.

யந்நிர்ணேஜ ஸமுத்தித த்ரிபதகா ஸ்ரோதஸ்ஸு—பண்டொருகால் த்ரிவிக்ரமாவதாரம் செய்தருளின காலத்திலே * குறைகொண்டு நான்முகன் குண்டிகைநீர்ப்பெய்து மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்திக் கறைகொண்ட கண்டத்தான் சென்னி மேலேறக் கழுவினான் அண்டத்தான் சேவடியை யாங்கு * [நான்முகன் திருவந்தாதி—9.] என்றருளிச் செய்தபடி திருவடி விளக்கின தீர்த்தம் பல முகமாகப் பெருகிற்றே ; அவற்றுள் ;

கிஞ்சித் கில அஸௌ த்ருவ: சிரஸா தத்தே—ஒரு பெருக்கை, உத்தாநபாதனென்னும் சக்ரவர்த்தியினுடைய புதல்வனான த்ருவன் தன் தலையாலே தாங்கி நிற்கிறான்.

தத் அபரம் ஸ்ரோதோ பவாநீபதி:—மற்றொரு பெருக்கைப் பார்வதீபதியான பரமசிவன் தன்தலையாலே தாங்கி நிற்கின்றான்.

யஸ்யாஸ்ய அலகநந்திகேதி ஏவம் நாம அந்வர்த்தகம் நிஜகு:—யாதொரு பெருக்குக்கு 'அலக நந்தா' என்றிங்ஙனே வழங்கிவரும் பெயரை அந்வர்த்தமாகச் சொல்லுகிறார்களோ அதனைப் பரமசிவன் தாங்குகின்றானென்கை. * சதுமுகன் கையில் சதுப்புயன் தாளில் சங்கரன் சடையினில் தங்கிக் கதிர்முகமணி கொண்டிழி புனற்கங்கை * என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடியே சங்கரனுடைய அலகஸம்பந்தம் பெற்றது காரணமாகவே 'அலகநந்தா' என்று பெயர்பெற்றதாயிற்று.

ஸௌந்தராஹ்வயஜுஷ: தே ஏதே பாதாரவிந்தே சுபே—அழகருடைய இந்தத் திருவடித் தாமரைகளானவை பரம போக்யங்கள். த்ருவனும் சிவனும் சிரஸா வஹிக்கும்படியான பெருக்குகளையுடைய கங்கைக்கு உத்பத்தி பூமியான அழகர் திருவடிகள் பரம போக்யங்களென்றதாயிற்று. ... ... 64

आम्नायकल्पलतिकोत्थसुगन्धिपुष्पं योगीन्द्रहार्दसरसीरुहराजहंसम् ।
उत्पक्वधर्मसहकारफलप्रकाण्डं वन्देय सुन्दरभुजस्य पदारविन्दम् ॥६५॥

ஆம்நாயகல்பலதிகோத்த ஸுகந்தி புஷ்பம்
யோகீந்த்ர ஹார்த ஸரஸீருஹராஜஹம்ஸம்,
உத்பக்வதர்மஸஹகார பலப்ரகாண்டம்
வந்தேய ஸௌந்தரபுஜஸ்ய பதாரவிந்தம். 65

* * * அழகர் திருவடிகளை மிக அற்புதமாக உல்லேகிக்கிறார் இதில்.

ஆம்நாயகல்பலதிகோத்த ஸுகந்திபுஷ்பம்—வேதங்களாகிற கற்பகக் கொடியில் நின்றுமுண்டான நறுமணம் மிக்க மலர்களோ இவை! என்னலாயிருந்தது. வேதங்களிலே பரிமளிக்கும் இத் திருவடிகள்—வேத ப்ரதிபாத்யங்கள் என்று கருத்து.

யோகீந்த்ர ஹார்த ஸரஸீருஹராஜஹம்ஸம்—யோகிச்ரேஷ்டர்களின் ஹ்ருதயகமலங்களிலே விளங்கும் ராஜஹம்ஸங்களோ இவை! என்னலாயிருந்தது. யோகித்யேயங்களென்றபடி.

உத்பக்வதர்மஸஹகாரபலப்ரகாண்டம்—பரிபக்வமான தர்மமாகிற தேன்மாம்பழங்களோ இவை! என்னலாயிருந்தது. த்யாக பலமும் இவையேயாய் பரமபுருஷார்த்தமாயிருப்பவை யென்றவாறு. ப்ரகாண்ட சப்தம்—ச்ரேஷ்ட வாசகம். ஆக இப்படிப்பட்ட ;

ஸௌந்தர புஜஸ்ய பதாரவிந்தம் வந்தேய—சுந்தரத்தோளுடையானுடைய திருவடித் தாமரையை வணங்கக் கடவேன். ... ... ... ... 65

सुसुन्दरस्यास्य तु वामनाकृतेः क्रमत्रयप्रार्थिनि मानसे किल ।
इमे पदे तावदिहासहिष्णुनी विचक्रमाते त्रिजगत्पदद्वये ॥६६॥

ஸுஸுந்தரஸ்யாஸ்ய து வாமநாக்ருதே:
க்ரமத்ரய ப்ரார்த்திநி மாநஸே கில,
இமே பதே தாவ திஹாஸஹிஷ்ணு நீ
விசக்ரமாதே த்ரிஜகத் பதத்வயே. 66

* * * பண்டு திருவடிகளைக் கொண்டு உலகளந்தருளின காலத்திலே வாமன மூர்த்தி மஹாபலிஸகாசத்திலே "என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடி மண் மன்னா! தருகென்று வாய்திறப்ப" என்கிறபடியே மூவடிவைப்புக்கு விஷய மிருப்ப தாகக்கருதி மூவடிமண் வேண்டினனுங்கூட, திருவடிகளானவை இரண்டுவைப்பிலேயே மூவுலகையும் அளாவிவிட்டன வென்கிறார். இதனால் திருவடிகளுக்குண்டான ஆச்ரித ஸம்ரக்ஷண த்வராதிசயம் சொல்லிற்றாகிறது.

வாமநாக்ருதே: அஸ்ய ஸுஸுந்தரஸ்ய—பண்டு வாமன மூர்த்தியாகக் கோலங்கொண்ட இவ்வழகருடைய, மாநஸே—திருவுள்ளமானது,

க்ரமத்ரயப்ரார்த்திநி ஸதி—மஹாபலி பக்கலில் மூவடிவைப்புக்கு உரித்தாக மூவடி நிலம் வேண்டியிருக்கையில்.

இமே பதே தாவத் இஹ அஸஹிஷ்ணுநீ—இத்திருவடிகளோ வென்னில், இந்நிலத்திலே மூவடிவைப்பை ஸஹிக்கமாட்டாதவைகளாய்.

த்ரிஜகத் பதத்வயே விசக்ரமாதே—மூவுலகங்களையும் இரண்டே வைப்பில் கொள்ளை கொண்டனவாயின. எம்பெருமானுடைய திருவுள்ளத்தைக் காட்டிலும் திருவடி களின் செயல் த்வராதிசயத்தில் வியக்கத்தக்கதென்று கருத்து. ... 66

सौन्दर्यसारामृतसिन्धुवीचिश्रेणीषु पादाङ्गुलिनामिकासु ।
न्यक्कृत्य चन्द्रश्रियमात्मकान्त्या नखावली शुम्भति सुन्दरस्य ॥६७॥

ஸௌந்தர்யஸாராம்ருத ஸிந்துவீசி
ச்ரேணீஷு பாதாங்குலி நாமிகாஸு,
ந்யக்க்ருத்ய சந்த்ரச்ரியமாத்மகாந்த்யா
நகாவலீ சும்பதி ஸுந்தரஸ்ய. 67

* * * திருவடிகளிலுள்ள திருநகங்களை வர்ணிக்கிறாரிதில். திருவிரல்களின் வர்ணநமும் அர்த்தாத் ஸித்திக்கிறது. அழகருடைய திருமேனியிலே அழகென்னும் அமுதக்கடலொன்று உண்டாயிற்று. கடலாகில் அலைகளு முண்டாகவேணுமிறே. அவ் வலைகள் தானோ வென்னலாம்படியிராநின்றன திருவிரல்கள், அத்திருவிரல்களிலே திருநகங்கள் சந்திரனுடைய ஒளியையும் திரஸ்கரித்து மிகவழகியவாக விளங்குகின்றன வென்கிறார்.

ஸுந்தரஸ்ய—திருமாலிருஞ்சோலையழகருடைய. பாதாங்குலிநாமிகாஸு ஸௌந்தர்ய ஸாரா ம்ருத ஸிந்துவீசிச்ரேணீஷு—திருவடி விரல்களாகிற ஸௌந்தர்யாம்ருத ஸாகர தரங்க பரம்பரைகளிலே.

நகாவலீ ஆத்மகாந்த்யா சந்த்ரச்ரியம் ந்யக்க்ருத்ய சும்பதி—திருநகங்களின் வரிசையானது தன்னொளியினாலே சந்திரனொளியையும் கீழ்ப்படுத்தி விளங்காநின்றது. ... 67

यो जातकशिमा मली च शिरसा संभावितश्शम्भुना सोऽयं यच्चरणाश्रयी शशधरो नूनं नखव्याजतः ।
पूर्णत्वं विमलत्वमुज्ज्वलतया सार्धं बहुत्वं तथा यातस्तं तरुषण्डशैलनिलयं वन्दामहे सुन्दरम् ॥६८॥

யோ ஜாதக்ரசிமா மலீ ச சிரஸா ஸம்பாவிதச் சம்புநா
ஸோயம் யச்சரணாச்ரயீ சசதரோ நூநம் நகவ்யாஜதः,
பூர்ணத்வம் விமலத்வமுஜ்ஜ்வலதயா ஸார்த்தம் பஹுத்வம் ததா
யாதஸ் தம் தருஷண்டசைலநிலயம் வந்தாமஹே ஸுந்தரம். 68

* * * கீழ்ச்லோகத்தில் திருவடி நகங்களைச் சந்த்ர ஸத்ருசங்களாகப் பேசினர். வாஸ்தவமாகவே சந்திரன் தேவதாந்தர ஸமாச்ரயணத்தினால் தனக்குண்டாயிருந்த குறைகள் தீரவேண்டி நகவ்யாஜத்தாலே அழகர் திருவடிகளை யாச்ரயித்துக் குறைகள் தீர்ந்து பரிபூர்த்தியையும் பெற்றானென்று இதில் அருளிச் செய்கிறார்.

யः சசதரः சம்புநா சிரஸா ஸம்பாவிதஸ்ஸந் ஜாதக்ரசிமா மலீச (அபூத்)—யாவனொரு சந்திரன் சிவன் சிரஸ்ஸாலே தரிக்கப்பட்டவனாகி க்ஷயிஷ்ணுவும் களங்கியுமானானோ; ஸோயம் நகவ்யாஜதः யச்சரணாச்ரயீஸந் பூர்ணத்வம் விமலத்வம் உஜ்ஜ்வலதயா ஸார்த்தம் ததா பஹுத்வம் யாதः—எப்போதும் பூர்ணனாயிருக்கை நிஷ்களங்கனாயிருக்கை, ஒளிமிக்கிருக்கை, பலவடிவு பெற்றிருக்கை ஆகிய இத்தன்மைகளையடைந்தானோ, தம் தருஷண்டசைலநிலயம் ஸுந்தரம் வந்தாமஹே—அந்தத் திருமாலிருஞ் சோலையழகரை வணங்குகிறோம்.

இங்ஙனே யருளிச்செய்தவிது உத்ப்ரேக்ஷாலங்கார ரீதியிலென்று காட்டுகிறது இரண்டாவது பாதத்திலுள்ள நூநம் என்பது.

"मन्ये शङ्के ध्रुवं प्रायो नूनमित्येवमादिभिः । उत्प्रेक्षा व्यज्यते शब्दैरिव शब्दोऽपि तादृशः"

என்னக்கடவதிறே. தேவதாந்தர சிரஸ் ஸம்பந்தத்தினால் க்ஷயிஷ்ணுத்வத்தையும் களங்கித்வத்தையு மடைந்திருந்த சந்திரன் அழகருடைய திருவடிகளை ஆச்ரயித்து [அதாவது நகம் என்கிற தன்மை பூண்டிருந்து] க்ஷயிஷ்ணுத்வம் நீங்கி ஸதா ஸர்வதா புஷ்கலனாயிருக்கப் பெற்றான்; களங்கித்வம் நீங்கி விமலனாயிருக்கப்பெற்றான்; சில ஸமயங்களில் ஒளிமழுங்குதலின்றி எப்போதும் ஒளிமல்கியிருக்கப் பெற்றான்; ஏகத்வத்தை விட்டு பஹுத்வத்தையு மடைந்தான்—என்ற விதனால், பத்துத் திருவிரல்களிலுமுள்ள பத்து நகங்களும் பத்து சந்திரர்கள்போல விளங்குவதும் எப்போதும் புஷ்கலமாய் அகளங்கமாய் ஜாஜ்வல்யமாநமாயிருப்பதும் சொல்லிற்றாயிற்று. 68

यस्याः कटाक्षणमनुक्षणमीश्वराणामैश्वर्यहेतुरिति सर्वजनीनमेतत् ।
श्रीस्सेति सुन्दरनिषेवणतो निराहुस्तं हि श्रियश्श्रियमुदाहुरुदारवाचः ॥६९॥

யஸ்யாः கடாக்ஷண மநுக்ஷண மீச்வராணாம்
ஐச்வர்யஹேதுரிதி ஸர்வஜநீநமேதத்,
ஸ்ரீஸ் ஸேதி ஸுந்தரநிஷேவணதோ நிராஹுः
தம் ஹி ச்ரியः ச்ரியமுதாஹுருதாரவாசः. 69

* * * கீழ் (39) * ஆஜாநஜஸ்வகதபந்துரேத்யாதி ச்லோகந் தொடங்கிக் கீழ்ச்லோகமளவும் முப்பது ச்லோகங்களாலே அழகருடைய கேசாதி பாதாந்த திவ்யாவயவ வர்ணநம் செய்து தலைக்கட்டினாராயிற்று. இனி ஸ்ரீபூநீளாதேவிகளாகிற திவ்ய மஹிஷிகளின் சேர்த்தியையும், சேஷ சேஷாசநகருடப்ரமுக நித்யஸூரிகளின் பரிசர்யா விசேஷங்களையும் அநுபவிக்கத் திருவுள்ளம்பற்றி ஸ்ரீ மஹா லக்ஷ்மியின் நித்ய யோகத்தை யருளிச்செய்கிறாரிதில். யாவளொரு பிராட்டியின் கடாக்ஷமானது இந்திரன்

முதலிய தேவர்களுக்கும் அடிக்கடி ஐச்வர்ய ஹேதுவாகிற தென்பது ஸர்வஜந ஸம்மத மானதோ, அந்தப் பிராட்டியும் அழகரையாச்ரயித்தே ஸ்ரீயென்று திருநாமம் பெறு கிறாள்; அழகர்தாமும் திருவுக்கும் திருவாகிய செல்வராய் விளங்குகிறார்—என்கிறார்.

யஸ்யாః கடாக்ஷணம்—யாவளொருபிராட்டியின் கடைக்கண் பார்வையானது.

ஈச்வராணும் அநுக்ஷணம் ஐச்வர்யஹேதுரிதி ஏதத் ஸர்வஜநீநம்—ஈச்வரரென்று பேர் பெற்ற வர்களுக்கெல்லாம் அடிக்கடி ஐச்வர்ய ஹேதுவாகின்ற தென்பது நிர்விவாதமாயிருக் கின்றதோ.

ஸா ஸுந்தரநிஷேவணதః ஸ்ரீః இதி நிராஹுః—அந்தப் பிராட்டிதானும் அழகரை ஆச்ர யிப்பதனாலேயே ஸ்ரீ யென்று பேர் பெறுகிறாளென்று ஸ்ரீ சப்த நிர்வசநகர்த்தாக்கள் கூறுகின்றார்கள். ஸ்ரீ சப்தத்திற்கு ஆறுவகையான வ்யுத்பத்திகள் உள்ளன; அவற் றுள் ச்ரயதே என்பது ஒரு வ்யுத்பத்தி. எம்பெருமானைப் பற்றி ஸ்வரூபலாப மடை பவள் என்றபடி- * மலர்மகள் விரும்பும் நமரும் பெறலடிகள் என்றதாயிற்று. இனி, பிராட்டிக்கு எம்பெருமானாலே ஏற்றமென்பதுபோல எம்பெருமானுக்கும் பிராட்டியாலே, ஏற்றமென்பது முண்டிறே, அது சொல்லுகிறது நான்காவது பாதத்தி னால்;

உதாரவாசః தஞ்ச ச்ரியః ச்ரியம் உதாஹுః—* திருவுக்குந்திருவாகிய செல்வா * என்றருளிச் செய்த திருமங்கையாழ்வாரையும் * கః ஸ்ரீః ச்ரியః * என்றருளிச்செய்த ஆளவந்தாரை யும் இங்கு உதாரவாக்குக்களென்கிறார். திருப்பாவையில் (20)* திருவே துயிலெழாய் என்றவிடத்து ஆறுயிரப்படியில்—'உதாரவாக்குள்ளாகிறார்—திருமங்கையாழ்வாரும் ஆளவந்தாரும் ஆழ்வானும் பட்டரும்" என்றருளிச் செய்ததும் காண்க.

இந்த ச்லோகம் சில சப்தங்கள் மாறி ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் இருபத்தொன்ப தாம் ச்லோகமாகவுள்ளது; அங்குமிங்கும் முன்னிரண்டு பாதங்களில் சிறிதும் வாசி யில்லை. மூன்றாவது பாதம் "தாம் ஸ்ரீரிதி த்வதுபஸம் ச்ரயணாந் நிராஹுः" என்று அங்கே யுள்ளது. இங்கு அழகருடைய திருநாமமிட்டுச்சொல்ல வேண்டுகையாலே "ஸ்ரீஸ் ஸேதி ஸுந்தர நிஷேவணதோ நிராஹுः" என்று சிறிது மாறுபட்டுள்ளது. இனி நான்காவது பாதத்திலும் சிறிது வாசியுண்டு: அங்கு மூன்றாவது பாதம் 'த்வதுபஸம்ச்ரயணாத்' என்று மத்யம புருஷ நிர்தேசமாக இருப்பதனாலே அதற்குச் சேர நான்காவது பாதத்தி லும் த்வாம் என்று யுஷ்மச்சப்தநிர்தேசம் ப்ராப்தமாயிற்று. இங்கு மூன்றும்பாதத்தில் மத் யமபுருஷ நிர்தேசமின்றிக்கே 'ஸுந்தரநிஷேவணதः' என்று ப்ரதமபுருஷ நிர்தேசமே யுள்ளதனால் அதற்குச்சேர நான்காவதுபாதத்தில் (தம்) என்று இருக்கத்தகுமேயல்லாது (த்வாம்) என்று இருக்கத்தகாது. இங்கும் த்வாமென்று காண்கிறபாடம் ஸ்காலித்யத் தாலே வந்தததத்தனை. இதனையொருவாறு பொருந்தவிட வேணுமாகில், மூன்றாவதுபாதத் தில் (ஸுந்தரநிஷேவணதः) என்றதில் ஸுந்தர! என்று பிரித்து ஸம்போதனமாக்கி, நிஷே வணதः என்றதை (த்வந்நிஷேவணதः) என்பதாக மாநஸாநுஸந்தாநம் செய்து கொள்ள வேண்டும். இது க்லிஷ்டம், வக்தாவுக்கு விவக்ஷிதமுமன்று. ... ... 69

दिव्याचिन्त्यमहाद्भुतोत्तमगुणैस्तारुण्यलावण्यकप्रायैरद्भुतभावगर्भसततापूर्वप्रियैर्विभ्रमैः ।

रूपाकारविभूतिभिश्च सदृशीं नित्यानपेतां श्रियं नीलां भूमिमपीदृशीं रमयिता नित्यं वनाद्रीश्वरः ॥७०॥

திவ்யாசிந்த்ய மஹாத்புதோத்தமகுணைஸ் தாருண்ய லாவண்யக—
ப்ராயை ரத்புதபாவ கர்ப்பஸததாபூர்வப்ரியைர் விப்ரமைः,
ரூபாகார விபூதிபிச்ச ஸத்ருசீம் நித்யாநபேதாம் ச்ரியம்
நீலாம் பூமிமபீத்ருசீம் ரமயிதா நித்யம் வநாத்ரீச்வரః 70

***—கீழ்ச்லோகத்தில் பெரிய பிராட்டியாரைப்பற்றி மாத்திரம் அருளிச்செய்தார்; இந்த ச்லோகத்தில் * கூந்தல் மலர் மங்கைக்கும் மண்மடந்தைக்கும் குலவாயர் கொழுந் துக்கும் கேள்வன் * என்கிறபடியே ஸ்ரீபூநீலாதேவிகளின் பெருமையையும் அப்பிராட்டி மார்களை அழகர் ரஸிப்பித்தருளும் பரிசையும் பேசுகிறார்.

திவ்ய அசிந்த்ய மஹாத்புத உத்தமகுணை:—அப்ராக்ருதங்களாயும் இப்படிப்பட்டவை யென்று சிந்திக்க முடியாதவைகளாயும் மிக ஆச்சரியங்களாயும் உத்தமங்களாயுமிருக் கின்ற வாத்ஸல்ய காருண்யாதி ஆத்ம குணங்களாலும்.

தாருண்ய லாவண்யகப்ராயை:—(குணை:)—யௌவனம் லாவண்யம் போன்ற திவ்ய மங் கல விக்ரஹ குணங்களாலும்.

அத்புத பாவகர்ப்பஸததாபூர்வ ப்ரியை: விப்ரமைச்ச—ஆச்சரியமான அபிப்ராய விசேஷங் களை உள்ளேயுடையவைகளாய் அப்பொழுதைக்கப்பொழுது அபூர்வங்களாய் ப்ரியங் களாயுமிருக்கின்ற விலாஸங்களாலும்

ரூப ஆகார விபூதிபிச்ச—ஸ்வரூப விக்ரஹவிபவங்களினாலும்.

ஸத்ருசீம்—*துல்ய சீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம், ராகவோர்ஹதி வைதே ஹீம் தஞ்சேய மஸிதேக்ஷணா* என்றும், *பகவந்நாராயணாபிமதாநுரூபஸ்வரூபரூப குண விபவைச்வர்ய சீலாத்யநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குணகணாம்* என் றும் சொல்லுகிறபடியே அநுரூபையாயிருக்கின்ற.

நித்யாநபேதாம் ச்ரியம்—நித்யாநபாயிநியான ஸ்ரீ மஹாலக்ஷ்மியையும்.

ஈத்ருசீம் பூமிம் நீலாமபி—பூர்வோக்த விசேஷண விசிஷ்டைகளான பூமி நீளைகளையும்.

வநாத்ரீச்வர: நித்யம் ரமயிதா—திருமாலிருஞ் சோலையழகர் இடையறுது ரஸிப்பிக்குந் தன் மையர். இத்தால், அழகரைப் பற்றுவார்க்குக் காலம் பார்க்க வேண்டாதே புருஷ கார ஸாந்நித்யம் எப்போதுமுள்ளதென்றாராயிற்று. .... ... ... 70

अन्योन्यचेष्टितनिरीक्षणहार्दभावप्रेमानुभावमधुरप्रणयप्रभावः ।

आजस्रनव्यतरदिव्यरसानुभूतिस्त्वां प्रेयसीं रमयिता वनशैलनाथः ॥७१॥

அந்யோந்ய சேஷ்டிதநிரீக்ஷண ஹார்தபாவ
ப்ரேமாநுபாவ மதுரப்ரணயப்ரபாவ:,
ஆஜஸ்ரநவ்யதர திவ்ய ரஸாநுபூதி:
ஸ்வாம் ப்ரேயஸீம் ரமயிதா வநசைலநாத:. 71

* * * " रामस्तु सीतया सार्धं विजहार बहूनृतून् । मनस्वी तद्गतस्तस्या नित्यं हृदि समर्पितः ॥
प्रिया तु सीता रामस्य दाराः पितृकृता इति । गुणाद्रूपगुणाच्चापि प्रीतिर्भूयोऽभ्यवर्धत ॥
तस्याश्च भर्ता द्विगुणं हृदये परिवर्तते । अन्तर्गतमपि व्यक्तमाख्याति हृदयं हृदा ॥ "

இத்யாதி ஸ்ரீ ராமாயண ச்லோகங்களைப் பெரும்பாலும் திருவுள்ளம் பற்றி யருளிச் செய்வது இந்த ச்லோகம். பெருமாளுக்கும் பிராட்டிக்கும் ஸர்வாத்மநாவுள்ள ஸௌம நஸ்யம் பேசப்படுகிறது. [சேஷ்டித] புருவ நெறிப்பு, புன்சிரிப்பு முதலான விலாஸ வியாபார விசேஷங்கள். [நிரீக்ஷண] கடைக்கண் பார்வை. [ஹார்தபாவ] உள்ளே யுறையுமபிப்ராயம். அதாவது தாருண்ய லாவண்யாதிகளின் அநுத்யானம். [ப்ரேமா நுபாவ] ப்ரேமாதிசயம் ஆகிய இவற்றாலே [மதுர ப்ரணய ப்ரபாவ:] பரம போக்யமான அநுராகாதிசயத்தை யுடையவரான [வநசைலநாத:] திருமாலிருஞ் சோலை யழகர். [ஆஜஸ்ர நவ்யதர திவ்ய ரஸாநுபூதிஸ்ஸந்] அநவரத முண்டாயிருக்கச் செய்தேயும் அப் பொழுதைக்கப்பொழுது அபூர்வமாய்த் தோன்றுகின்ற அப்ராக்ருதமான ஆனந்தாநு

பவத்தையுடையவராய்க் கொண்டு. [ஸ்வாம் ப்ரேயஸீம் ரமயிதா] தம்முடைய தேவி யாரை ரஸிப்பியா நின்றார்.

ச்லோகாரம்பத்தில் (அந்யோந்ய) என்றது—திவ்ய தம்பதிகளுக்குப் பரஸ்பரம் அநுபாவ்யமான என்றபடி. *परस्पर तपस्सम्पत्फलायित परस्परौ—பரஸ்பர தபஸ் ஸம்பத் பலாயித பரஸ்பரௌ * இத்யாதிகளிற்போல [அந்யோந்ய—என்றதற்குச் சேர] த்விவசநாந்தமாக முடிய வேண்டாவோ வென்று சிலர் கேட்பதுண்டு. அப்படி நிர்ப்பந்தமில்லை. ... ... ... ... 71

सुन्दरस्य वनशैलवासिनो भोगमेव निजभोगमाभजन् ।
शेष एष इति शेषताकृतेः प्रीतिमानहिपतिस्स्वनामनि ॥७२॥

ஸுந்தரஸ்ய வநசைல வாஸிநோ
போகமேவ நிஜபோகமாபஜந்,
சேஷ எஷ இதி சேஷதாக்ருதே:
ப்ரீதிமாநஹிபதிஸ் ஸ்வநாமநி. 72

* * * இந்த ச்லோகம் முதல் மூன்று ச்லோகங்களாலே அநந்த கருட விஷ்வக்ஸேநர்களாகிற நித்ய ஸூரிவரர்களின் பரிசர்யா விசேஷங்களை முறையே யெடுத்துரைக்கத் திருவுள்ளம் பற்றி இந்த ச்லோகத்தினால் திருவனந்தாழ்வானுடைய பரிசர்யா விசேஷத்தைப் பேசுகிறார். சேஷாத்ரி யென்கிற திருநாமம் திருவேங்கட மலைக்குப் போலவே திருமாலிருஞ் சோலை மலைக்கு முண்டு. திருவனந்தாழ்வான் தானே திருமலையாக வடிவெடுத்து எம்பெருமானுக்குப் பரமாநந்த ஸந்தோஹஸந்தாயக ஸ்தாந விசேஷமாக அமைந்திருக்கிறபடி. இப்படிப்பட்ட விலக்ஷணமான சேஷத்வம் தனக்கு வாய்த்தபடியாலே திருவனந்தாழ்வான் சேஷனென்கிற தனது திருநாமத்திலே மிகவு முகப்புடையான் என்கிறார்.

அஹிபதி:—ஸர்ப்பராஜனான திருவனந்தாழ்வான்.

வநசைலவாஸிந: ஸுந்தரஸ்ய போகமேவ நிஜபோகம் ஆபஜந்—திருமாலிருஞ்சோலை மலையுறையும் அழகருடைய ஸ்வேச்சா விஹாராநுபவத்தையே தன்னுடைய வுடலுக்கு ஸாபல்யமாக நினைத்தவனாய் என்றபடி. வடமொழியில் ஸர்ப்பத்தின் உடலுக்கு போக மென்று பெயர். பகவத் போகத்தையே ஸ்வபோகமாகக் கொண்டானென்று சாதுக்தி யிருக்கிறபடி.

சேஷதாக்ருதே:—* परगतातिशयाधानेच्छया उपादेयत्वमेव यस्य स्वरूपं स शेषः * என்று லக்ஷணமுடையதான சேஷத்வம் ஸித்தித்தபடியாலே யென்கை.

சேஷ ஏஷ இதி ஸ்வநாமநி ப்ரீதிமாந்—' இவன் சேஷன் ' என்று பலரும் சொல்லும்படியாகத் தனக்கு வாய்த்த சேஷ நாமத்திலே போரவுகப்புடையான். ... 72

वाहनासनवितानचामराद्याकृतिः खगपतिस्त्रयीमयः ।
नित्यदास्यरतिरेव यस्य वै एष सुन्दरभुजो वनाद्रिगः ॥७३॥

வாஹநாஸந விதாநசாமராத்யாக்ருதி: ககபதிஸ்த்ரயீமய:,
நித்யதாஸ்யரதிரேவ யஸ்ய வை ஏஷஸுந்தரபுஜோ வநாத்ரிக:. 73

* * * பெரிய திருவடியின் பரிசர்யா விசேஷங்களைப் பேசுகிறாரிதில்.

த்ரயீமய: ககபதி:—" வேதாத்மா விஹகேச்வர: " என்று வேதஸ்வரூபியாகச் சொல்லப்பட்ட பெரிய திருவடி.

வாஹநாஸந விதாந சாமராத்யாக்ருதிஸ் ஸங்—“ தாஸஸ் ஸகா வாஹநமாஸநம் த்வஜோ யஸ் தே விதாநம் வ்யஜநம் த்ரயீமய: ” என்று ஆளவந்தாரருளிச் செய்தபடியே ஸம யாநு குணமாக வாஹனமாயும் ஆஸனமாயும் விதானமாயும் சாமரமாயும் மற்றும் பலவாயும் வடிவெடுத்தவனுய்க் கொண்டு.

யஸ்யைவ நித்யதாஸ்யரதி:—யாவரொரு அழகருக்கே நித்ய கைங்கர்ய நிரதராயிரா நின்ருரோ.

ஷ ஸுந்தரபுஜோ வநாத்ரிக:—அப்படிப்பட்ட சுந்தரத் தோளுடைய பெருமாள் திருமாலிருஞ் சோலைமலை யுறைகின்ருர். திருமாலிருஞ் சோலை யழகர் பெரிய திருவடியினுடைய ஸகலவித கைங்கரியங்களையும் கொண்டருளுமா போலே அடியேனிடத்திலும் கொண்டருள வேணுமென்று விஞ்ஜாபித்தபடி. ... ... 73

वनाद्रिनाथस्य सुसुन्दरस्य वै प्रभुक्तशिष्टाश्यथ सैन्यसत्पतिः ।
समस्तलोकैकधुरन्धरस्सदा कटाक्षवीक्ष्योऽस्य च सर्वकर्मसु ॥७४॥

வநாத்ரிநாதஸ்ய ஸுஸுந்தரஸ்ய வை
ப்ரபுக்தசிஷ்டாச்யத ஸைந்யஸத்பதி:,
ஸமஸ்த லோகைக துரந்தரஸ் ஸதா
கடாக்ஷவீக்ஷ்யோ஽ஸ்ய ச ஸர்வகர்மஸு. 74

* * * இதில் ஸ்ரீஸேநாபதியாழ்வானுடைய பரிசர்யாவிசேஷத்தைப் பேசுகிருர்.
ஸைந்யஸத்பதி:—ஸ்ரீ ஸேநாபதி யாழ்வான்.
வநாத்ரிநாதஸ்ய ஸுஸுந்தரஸ்ய ப்ரபுக்த சிஷ்டாசீ ஸங்—திருமாலிருஞ்சோலை மலைத் தலைவரான அழகருடைய போனகஞ் செய்த சேட முண்பாராய்க் கொண்டு. ஸேனை முதலியார்க்கு சேஷாசநனென்றே திருநாமமிறே. “த்வதீய புக்தோஜ்ஜித சேஷ போஜிநா—ப்ரியேண ஸேநாபதிநா” என்ருரிறே ஆளவந்தாரும்.

ஸர்வகர்மஸு அஸ்ய கடாக்ஷவீக்ஷ்ய:—ஜகத்ஸ்ருஷ்ட்யாதி ஸகல வ்யாபாரங்களிலும் அழகருடைய கடாக்ஷ வீக்ஷணமொன்றையே எதிர் பார்ப்பவராய்.

ஸதா ஸமஸ்த லோகைக துரந்தர:—“ஸ்ரீமதி விஷ்வக் ஸேநே ந்யஸ்த ஸமஸ்தாத்மைச்வர்யம்” என்றும், “ஸ்ரீ ரங்க சந்த்ரமஸ மிந்திரயா விஹர்த்தும் விந்யஸ்ய விச்வசித சிந்யநாதிகாரம், யோ நிர்வஹதி” என்றும் சொல்லுகிறபடியே எப்போதும் ஸமஸ்த லோக நிர்வாஹகராய் விளங்கா நின்ருர். ... ... 74

छत्रचामरमुखाः परिच्छदास्सूरयः परिजनाश्च नैत्यगाः ।
सुन्दरोरुभुजमिन्धते सदा ज्ञानशक्तिमुखनित्यसद्गुणाः ॥७५॥

சத்ரசாமரமுகா: பரிச்சதா: ஸூரய: பரிஜநாச்ச நைத்யகா:,
ஸுந்தரோருபுஜமிந்ததே ஸதா ஜ்ஞாநசக்தி முகநித்ய ஸத்குணா:. 75

* * * அழகருடைய பரிஜந பரிச்சத கல்யாண குண ஸம்ருத்தியை யருளிச் செய்கிருரிதில்.

நைத்யகா: ஸூரய:—நித்ய கைங்கர்ய பாகிகளான ஸூரிகளும்.

பரிஜநா:—பரிஜநங்களென்று பேர் பெற்றவர்களும்.

சத்ர சாமரமுகாः பரிச்சதாः—குடை சாமரம் முதலிய எடுபிடி ஸாமான்களும்.

ஜ்ஞாந சக்திமுக நித்யஸத்குணச்ச—ஜ்ஞாந சக்தி பலைச்வர்யாதிகளான நித்ய கல்யாண குணங்களும்.

ஸுந்தரோருபுஜம் ஸதா இந்ததே—சுந்தரத் தோளுடைய பெருமானை யடைந்து எப்போதும் விளங்கா நின்றன.

இதில் மூன்ருவது பாதத்தில் ஒரு விசாரமுண்டு;—

"ஸுந்தரோருபுஜம் இந்ததே" என்பதற்கு சுந்தரத் தோளுடையானை எப்போதும் விளங்கச் செய்கின்றன வென்று சிலர் பொருள் கூறுவதாகவும் அது பொருந்தமாட்டாதென்றும், ப்ராப்ய என்று ஒரு ல்யபந்தம் அத்யாஹாரம் செய்துகொண்டு 'ஸுந்தரோரு புஜம் ப்ராப்ய இந்ததே' என்று யோஜித்துக் கொள்வதே பொருத்தமென்றும் ஸம்ஸ்க்ருத வ்யாக்யாதா எழுதியுள்ளார், இந்ததே என்பதற்கு (ப்ரகாசயந்தி) என்று பொருள் கொள்ளுவதில் ஔசித்யமில்லை யென்று அவர் எழுதியிருப்பது பொருத்தமே. ஆனால், மேல் ச்லோகத்தின் முடிவில் (ச்ரிதாः) என்றிருப்பதுபோல, இந்த ச்லோகத்திலும் (த்ருதீயபாதாந்தே) 'ச்ரிதாः' என்றிருந்ததாகவும் அது (ஸதா) என்று மாறிவிட்டதாகவும் சில பெரியார் ஊஹித்துச் சொல்லுவதுண்டு. ஸஹஸா பாடத்தைத் திருத்த நாம் அதிகாரிகளல்லோம். பாடப் பிறழ்வுகள் எங்கும் ஸம்பாவிதமே. ... ... ... ... .... (75)

द्वारनाथगणनाथतल्लजाः पारिषद्यपदभागिनस्तथा ।
मामकाश्च गुरवः पुरातनास्सुन्दरं वनमहीध्रगं श्रिताः ॥७६॥

த்வாரநாத கணநாத தல்லஜாः பாரிஷத்யபதபாகிநஸ் ததா,
மாமகாச்ச குரவः புராதநாः ஸுந்தரம் வநமஹீத்ரகம் ச்ரிதாः. 76

சண்டப்ரசண்டாதிகளான த்வார பாலக ச்ரேஷ்டர்களும், குமுத குமுதாக்ஷாதிகளான கணநாயக ச்ரேஷ்டர்களும். "பாரிஷத்யாः பரச்சதம்" என்கிறபடியே பாரிஷத்ய பதவ்யபதேச்யர்களானவர்களும் ஸ்ரீபராங்குச பரகாலயதிவராதிகளான நம் முன்னோர்களும் திருமாலிருஞ்சோலை யழகரைப் பணிந்து உய்ந்து போந்தார்கள்-என்றாராயிற்று. தல்லஜ சப்தம்-ச்ரேஷ்டவாசகம். ... ... 76

ईदृशैः परिजनैः परिच्छदैर्नित्यसिद्धनिजभोगभूमिगः ।
सुन्दरो वनगिरेस्तटीषु वै रज्यते सकलदृष्टिगोचरः ॥७७॥

ஈத்ருசைः பரிஜநைः பரிச்சதைः
நித்யஸித்த நிஜபோக பூமிகः,
ஸுந்தரோ வநகிரேஸ் தடீஷுவை
ரஜ்யதே ஸகலத்ருஷ்டிகோசரः. 77

*** கீழே சொல்லப்பட்ட அனந்த கருட விஷ்வக்ஸேநாதிகளான பரிஜநங்களோடும் சத்ரசாமராதிகளான பரிச்சதங்களோடும் அழகர் திருமாலிருஞ்சோலைத் தாழ்வரையிலே அனைவரும் கண்ணாரக்கண்டு களிக்கலாம்படியெழுந்தருளியிருந்து ஸேவைஸாதித் தருளுமாற்றையநுபவித்துப் பேசுகிருரிதில்.

ஈத்ருசைः பரிஜநைः பரிச்சதைஸ்ஸஹ—பூர்வோக்த ப்ரகாரங்களான பரிஜந பரிச்சதங்களோடே கூட, கீழே * ஸுந்தரஸ்ய வநசைலவாஸிநः * என்கிற ச்லோகந் தொடங்கி

முந்தின ச்லோகமளவாக ஐந்து ச்லோகங்களிலே அருளிச் செய்தவற்றைச் சேரப் பிடித்து (ஈத்ருசைஃ) என்றருளிச் செய்தபடி.

நித்ய ஸித்த நிஜபோக பூமிக:—'நித்யஸித்த' என்றது ஸதா ஏகரூபமான என்றபடி. நிஜ போக பூமியென்று தனக்கு அஸாதாரணமான நலமந்தமில்லதோர் நாடாகிய நித்ய விபூதியைச் சொல்லுகிறது. *வைகுண்டே து பரேலோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதிஃ, ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ. என்கிறபடியே ஸ்ரீவைகுண்டத்திலே யெழுந்தருளியிருப்பவனான எம்பெருமான்,

ஸகலத்ருஷ்டிகோசரஃ ஸுந்தரஸ் ஸந்—ஸகலஜந நயந விஷயபூதரான அழகராய்க்கொண்டு.

வநகிரேஸ் தடேஷு ரஜ்யதே—திருமாலிருஞ்சோலை மலையடிவாரத்திலே திருவுள்ள முகந்து வர்த்திக்கிறாரென்றபடி. திருநாட்டிலே நம்போல்வாருடைய கண்ணுக்கு இலக்காகாமலிருக்கிற குறைதீர அங்குத்தை நிலைமையோடே இங்கே இனக்குறவர்களுட்பட ஸகலர்க்கும் சக்ஷுர்விஷயனாய்க் கொண்டு ஸேவை ஸாதிக்கிறாரென்றதாயிற்று. ... ... ... ... 77

आक्रीडभूमिषु सुगन्धिषु पौष्पिकीषु वैकुण्ठधामनि समृद्धसुवापिकासु ।
श्रीमल्लतागृहवतीषु यथा तथैव लक्ष्मीधरस्सजति सिंहगिरेस्तटीषु ॥७८॥

ஆக்ரீடபூமிஷு ஸுகந்திஷு பௌஷ்பிகீஷு
வைகுண்டதாமநி ஸம்ருத்தஸுவாபிகாஸு,
ஸ்ரீமல்லதாக்ருஹவதீஷு யதா ததைவ
லக்ஷ்மீதரஸ் ஸஜதி ஸிம்ஹகிரேஸ் தடீஷு. 78

***நலமந்தமில்லதோர் நாடாகிய ஸ்ரீவைகுண்டத்திலே திருவுள்ளத்திற்கு மிகவுமினிதாக வஸித்தருளும் பெருமானுக்கு இத்திருமலைத் தாழ்வரையிலே வாஸம் ருசிக்குமோ? என்று சிலர் சங்கிக்கக் கூடுமென்றெண்ணி, அவ்விருப்போடு இவ்விருப்போடு வாசியில்லை யென்றருளிச் செய்கிறாரிதில்.

வைகுண்டதாமநி—ஸ்ரீவைகுண்டமாகிற நித்ய விபூதியிலே.

ஸம்ருத்தஸுவாபிகாஸு—வாவித்தடங்கள் நிரம்பியவையாயும்.

ஸ்ரீமல்லதாக்ருஹவதீஷு—அழகிய கொடி மண்டபங்களையுடையனவாயும்.

பௌஷ்பிகீஷு—புஷ்பங்கள் நிறைந்தனவாயும்.

ஸுகந்திஷு—நறுமணம் மிக்கவையாயுமிருக்கிற.

ஆக்ரீடபூமிஷு—விஹாரோபயோகிகளான உத்யான வனங்களிலே.

லக்ஷ்மீதர: யதா ஸஜதி—ச்ரியஃபதியான எம்பெருமான் எவ்விதமாகத் திருவுள்ள முகந்து வர்த்திக்கிறானோ.

ததைவ ஸிம்ஹகிரேஸ் தடீஷு ஸஜதி—அவ்விதமாகவே திருமாலிருஞ்சோலைத் தாழ்வரைகளிலும் திருவுள்ள முகந்து வர்த்திக்கிறானாயிற்று. இத்தால், திருமலை பூலோக வைகுண்ட மென்றதாயிற்று. ... ... ... 78

आनन्दमन्दिरमहामणिमण्डपान्तर्लक्ष्म्या भुवाऽप्यहिपतौ सह नीलया च ।
निस्संख्यनित्यनिजदिव्यजनैकसेव्यो नित्यं वसन् सजति सुन्दरदोर्वनाद्रौ ॥७९॥

ஆநந்தமந்திர மஹாமணிமண்டபாந்தः
லக்ஷ்ம்யா புவாऽப்யஹிபதௌ ஸஹ நீலயா ச,
நிஸ்ஸங்க்ய நித்ய நிஜ திவ்ய ஜநைக ஸேவ்யः
நித்யம் வஸந் ஸஜதி ஸுந்தரதோர் வநாத்ரௌ. 79

* * * இந்த ச்லோகமும் கீழ் ச்லோகத்திற்கு சேஷபூதமாகவே அவதரிக்கிறதாயிற்று.

ஆநந்த மந்திரமஹாமணிமண்டபாந்த:—ஸ்வரூபரூபகுண விபூதிகளோடும் நித்ய முக்தர்களோடும் கூடியிருக்குமிருப்பை யநுபவிப்பதனாலுண்டாகும் மஹானந்தத்திற்குப் பிறப்பிடமான திருமாமணி மண்டபத்தினுள்ளே என்றபடி.

அஹிபதௌ லக்ஷ்ம்யா புவா நீலயாச ஸஹ—திருவனந்தாழ்வான்மீது ஸ்ரீதேவி பூதேவி நீலாதேவிகளோடுங்கூட.

நிஸ்ஸங்க்ய நித்ய நிஜ திவ்ய ஜநைக ஸேவ்ய:—த்ரிபாத் விபூதியாகையாலே எண்ணிறந்த நித்ய முக்தர்களன்றோ அங்கிருப்பது; அவர்களுக்கு மாத்திரமே ஸேவ்யனாயிருக்கின்ற, ஸுந்தரதோ:—சுந்தரத் தோளுடைய பெருமாள்.

வநாத்ரௌ நித்யம் வஸந் ஸஜதி—திருமாலிருஞ்சோலை மலையிலே நித்யவாஸரஸிகராயிரா நின்றார்.

விரஜையை மறக்கும்படியான நூபுரகங்கையும் திருமாமணி மண்டபத்தை மறக்கும்படியான திவ்யாலய மண்டப ஸந்நிவேசமுமிங்கிருக்கையாலே திருநாட்டில் வாஸத்தையும் மறந்து இங்கே வர்த்திக்கிறபடி [ஸஜதி—ஸக்தோ பவதி என்றபடி.] 79

प्रत्यर्थिनि त्रिगुणकप्रकृतेरसीम्नि वैकुण्ठधामनि पराम्बरनाम्नि नित्ये ।
नित्यं वसन्परमसत्वमयेऽप्यतीतयोगीन्द्रवाङ्मनस एष हरिर्वनाद्रौ ॥८०॥

ப்ரத்யர்த்திநி த்ரிகுணக ப்ரக்ருதேரஸீம்நி
வைகுண்டதாமநி பராம்பரநாம்நி நித்யே,
நித்யம் வஸந் பரமஸத்வமயேபி, அதீத
யோகீந்த்ர வாங்மநஸ ஏஷ ஹரிர் வநாத்ரௌ. 80

* * * ஸ்ரீவசநபூஷணத்திலே "ஆவரண ஜலம் போலே பரத்வம்....பெருக்காறு போலே விபவங்கள்; அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்." என்று பரமபதத்திற் காட்டிலும் அர்ச்சாவதாரத்திற்குள்ள ஏற்றம் த்ருஷ்டாந்த முகத்தாலே காட்டப்பட்டது. அப்படிப்பட்ட ஏற்றத்தைத் திருவுள்ளத்திலே கொண்டு அருளிச்செய்வது இந்த ச்லோகம். [வைகுண்டதாமநி நித்யம் வஸந்நபி ஏஷ ஹரிர் வநாத்ரௌ.] இவ்வழகர் திருநாட்டிலே யெழுந்தருளியிருப்பவராயினும் இத்திருமலையிலே ஸந்நிஹிதராயிரா நின்றார்—என்கிறாராயிற்று. வைகுண்டத்திற்கு அனேக விசேஷணங்கள் இட்டருளுகிறார்:—

த்ரிகுணகப்ரக்ருதே: ப்ரத்யர்த்திநி:—ஸத்வ ரஜஸ் தமோ குணங்களென்னும் முக்குணங்களின் கூட்டரவாகிய மூலப்ரக்ருதிக்கு எதிராகவுள்ளது. அதாவதென்னென்னில்;

பரமஸத்வமயே—சுத்த ஸத்வமயமாயிருக்கை.

அஸீம்நி—லீலா விபூதியின் பரிமாணம் எல்லை கண்டு கூறப்பட்டிருக்கின்றது. அங்ஙனன்றிக்கே, "तेषामपि इयत्परिमाणम् इयदैश्वर्यम् ईदृशस्वभावमिति परिच्छेत्तुमयोग्ये" என்று

ஸ்ரீவைகுண்ட கத்யத்தில்) ஸ்வாமி யருளிச்செய்தபடியே நித்யாஸங்குசித ஜ்ஞானர்களுக்கும் அளவிட வொண்ணாத பரிமாணத்தை யுடைத்தாயிருக்குமாயிற்று.

பராம்பரநாம்நி—பரமாகாச மென்னும் பெயரையுடையதாயிற்று.

நித்யே வைகுண்ட தாமநி—நித்ய விபூதி யென்னப்படுகிற ஸ்ரீ வைகுண்ட லோகத்திலே.

“அதீத யோகீந்த்ர வாங்கமநஸ ஏஷ:”—என்ற விடத்து முந்தின ஸமஸ்த பதமானது ஸப்தம்யந்தமாகவும் பிரிக்கக்கூடியது, ப்ரதமாந்தமாகவும் பிரிக்கக்கூடியது; ஸந்தி இரண்டு படிக்கும் பொதுவாக வுள்ளதாகையினாலே. ஸப்தம்யந்தமாகக் கொண்டால் வைகுண்ட தாமாவுக்கு விசேஷணமாய் நிற்கும். ப்ரதமாந்தமாகக் கொண்டால் அழகர்க்கு விசேஷணமாய் நிற்கும், இரண்டு படியுமழகியதே. சரணாகதி கத்யத்திலே “परमयोगिवाङ्मनसापरिच्छेद्यस्वरूपस्वभाव.... ....निरतिशयवैकुण्ठनाथ !” என்றருளிச் செய்திருப்பதற்குச் சேர ஸப்தம்யந்தமாகக் கொள்ளுதல் சிறக்கும். யோகி ச்ரேஷ்டர்களின் வாக்குக்கும் மநஸ்ஸுக்கும் எட்டாததுமான ஸ்ரீ வைகுண்டத்திலே. [வஸந்நபி ஏஷ ஹரி: வநாத்ரௌ] ‘ஸஜதி’ என்று க்ரியாபதம் கீழ்ச்லோகத்திலிருந்து வருவித்துக் கொள்ளத்தகும். ... ... .... ... 80

लोकांश्चतुर्दश दधत् किल सुन्दरस्य पङ्क्तीगुणोत्तरितसप्तवृतीदमण्डम् ।
अण्डानि चास्य सुसदृंशि परश्शतानि क्रीडाविधेरिह परिच्छदतामगच्छन् ॥८१॥

லோகாந் சதுர்தச ததத் கில ஸௌந்தரஸ்ய
பங்க்தீ குணோத்தரித ஸப்தவ்ருதீதமண்டம்,
அண்டாநி சாஸ்ய ஸௌஸத்ரும்சி பரச்சதாநி
க்ரீடாவிதேரிஹ பரிச்சததாமகச்சந். 81

* * * கீழே சில ச்லோகங்களினால் நித்ய விபூதி யோகத்தை அநுஸந்தித்தருளினராய் மேலிரண்டு ச்லோகங்களாலே லீலா விபூதி யோகத்தை யநுஸந்தித்தருளுகிறார். “யதண்ட மண்டாந்தர கோசரஞ்ச யத் தசோத்தராண்யாவரணாநி யாநி ச” என்று ஸ்தோத்ரரத்நத்தில் ஆளவந்தாரருளிச் செய்ததை யடியொற்றிப் பேசுகிறதாயிற்று இதில் பூர்வார்த்தம் அவ்விடத்திலே நம்முடைய வியாக்கியானத்தில் விரிவு கண்டு கொள்வது.

சதுர்தச் லோகாந் ததத், பங்க்தீகுணோத்தரிதஸப்தவ்ருதி இதம் அண்டம்—பதினான்கு லோகங்களையும் தன்னுள்ளே யடக்கிக் கொண்டிருப்பதும் மேலே ஒன்றுக்கொன்று பதின் மடங்காகப் பெருக்கப்பட்ட வைசால்யத்தை யுடைய ஸப்தாவரணங்களையுடையது மான இவ்வண்டமும்.

அஸ்ய ஸௌஸத்ரும்சி பரச்சதாநி அண்டாநி ச—கீழ்ச் சொன்ன வண்டத்தோடு மிகவுமொத்திருக்கின்ற நூற்றுக்கணக்கான அண்டங்களும்.

இஹ ஸௌந்தரஸ்ய க்ரீடாவிதே: பரிச்சததாம் அகச்சந்—இங்குள்ள அழகருக்கு க்ரீடாபரிகரங்களாயிரா நின்றன. அண்டக் குலத்துக்கு அதிபதியாய் அவற்றை லீலோபகரணமாகக் கொண்டவரான அழகர் இத்திருமலையிலே ஸேவை ஸாதிக்கின்றாரென்றதாயிற்று. ... ... ... 81

सुरनरतिर्यगादिबहुभेदकभिन्नमिदं जगदथ चाण्डमण्डवरणानि च सप्त तथा ।
गुणपुरुषौ च मुक्त पुरुषाश्च वनादिरिरेरुपकरणानि नर्मविधौ हि भवन्ति विभोः ॥८२॥

ஸுரநர திர்யகாதி பஹுபேதக பிந்நமிதம்
ஜகத்த சாண்ட மண்டவாரணுநி ச ஸப்த ததா,
குண புருஷௌ ச முக்த புருஷாச்ச வநாத்ரிபதேஃ
உபகரணாநி நர்மவிதயேஹி பவந்தி விபோஃ. 82

ஸுரநரதிர்யகாதி பஹுபேதக பிந்நம் இதம் ஜகத்—தேவமநுஷ்ய திர்யக் ஸ்த்தாவரங்கள் ளென்கிற பலவகைப்பட்ட விசேஷணங்களினாலே வேறுபட்டிருக்கிற இந்த ஜகத்தும். ஸுரநர திர்யக் ஸ்தாவராத்மக ஜந்து ஸமூஹவிசிஷ்டமான இவ்வுலகும் என்றபடி.

அதச அண்டம் ஸப்த அண்டவரணுநிச—இவ்வளவேயுமன்றிக்கே அண்டமும் ஏழு அண்டாவரணங்களும்.

குண புருஷௌ ச—ப்ரக்ருதியும் ஜீவாத்ம வர்க்கமும்.

முக்த புருஷாச் ச—ப்ரக்ருதி ஸம்பந்த விநிர் முக்தர்களான புருஷர்களும். கீதையில் "தேஷாம் ஸதத யுக்தாநாம்" என்ற விடத்தில் 'ஸததயோகம் காங்க்ஷமாணாநாம் என்று பாஷ்யரீத்யா பொருள் கொள்ளப்படுவதுபோல, இங்கும் 'முக்த புருஷாஃ' என்பதற்கு முக்தியை விரும்புகின்ற புருஷர்களென்று பொருள் கொள்ளவடுக்கும். திருவிருத்தத்தில் * விண்ணுளாரிலும் சீரியரே * என்னப்பட்டவர்களை விவக்ஷித்த படி. ஆக இவ்வளவும்.

வநாத்ரிபதேஃ விபோஃ நர்மவிதயே உபகரணாநி பவந்தி—திருமாலிருஞ்சோலை யெம்பெருமானுக்கு லீலா பரிகரங்களாகின்றன. ... ... 82

ज्ञानिनस्सततयोगिनो हि ये सुन्दरांघ्रिपरभक्तिभागिनः ।
मुक्तिमाप्य परमां परे पदे नित्यकिङ्करपदं भजन्ति ते ॥८३॥

ஜ்ஞாநிநஸ் ஸதத யோகிநோ ஹி யே
ஸுந்தராங்க்ரி பர பக்தி பாகிநஃ,
முக்திமாப்ய பரமாம் பரே பதே
நித்ய கிங்கர பதம் பஜந்தி தே. 83

* * * கீழ்ச்லோகத்திலே 'முக்த புருஷாச்ச' என்பதனாலே முமுக்ஷுப்ரஸ்தாவம் செய்தருளினபடியாலே அவர்களை விசேஷிக்கிறார் இந்த ச்லோகத்தில். பகவத் கீதையில்* தேஷாம் ஜ்ஞாநீ நித்ய யுக்த ஏகபக்திர் விசிஷ்யதே*என்றும்* ஜ்ஞாநீ து ஆத்மைவ மேமதம் *என்றும் புகழப்பட்ட ஜ்ஞாநி வகுப்பைச் சேர்ந்தவர்கள் திருமாலிருஞ்சோலையழகருடைய திருவடிகளிலே பக்தியைச் செலுத்தியே மோக்ஷத்தையடைய முடியும்—என்பது இந்த ச்லோகத்திற்கு உயிரான கருத்து. 'ஸதத யோகிநஃ' என்கிற பதம் 'தேஷாம் ஸதத யுக்தாநாம்' என்கிற கீதா ச்லோகத்திலுள்ள ஸதத யுக்த பதத்தின் ஸ்தானத்திலே ப்ரயுக்தமாகையாலே அப்பதத்தின் பொருளே இப்பதத்திற்குமாகக் கடவது. सततयोगं काङ्क्षमाणाः என்பது பொருள். எப்போதும் கூடியிருந்து அநுபவிக்க விரும்புகிறவர்களென்றபடி.

இரண்டாவது பாதத்தில் ஸுந்தராங்க்ரிபத-என்றும் ஸுந்தராங்க்ரிபர என்றும் இருவகையான பாடம் காண்கிறது; (பர) என்னும் பாடம் எளிதாகப் பொருள்படுகிறது. (பத) என்னும் பாடத்தில் (அங்க்ரி) யென்றாலும் திருவடியாய் (பத) என்றாலும் திருவடியாய் புநருக்தியாகிறதே யென்று சிலர் சங்கிப்பதுண்டு; சங்கை வேண்டா;

பதம் என்பதற்கு ஆஸ்பதம் என்று பொருள். அழகருடைய திருவடிகளை ஆஸ்பதமாகக் கொண்ட பக்தியை யுடையவர்கள் என்றவாறு.

மூன்ரும் பாதத்தில் "முக்திமாப்ய" என்றவிடத்து (ஆப்ய) என்ற ல்யப்பில் ஒரு விசாரமுண்டு; உபஸர்க்க யோகமில்லாத போது த்யக்த்வா, ஹித்வா, புக்த்வா, உக்த்வா, கத்வா என்ருப்போலே (ஆப்த்வா) என்று த்வாப்ரத்யயாந்தமாகத்தானே நிற்க வேணும்; உபஸர்க்க யோகமிருந்தால்தானே ஆகர்ய, பரித்யஜ்ய, பரிபுஜ்ய, ஸமாப்ய என்ருப்போலே ல்யபந்தமாகும். (ஆப்ய) என்ற இவ்விடத்தில் உபஸர்க்கமில்லாதிருக்க ல்யப்பு எங்ஙனே வந்ததென்று. இங்கும் ஆங் என்கிற உபஸர்க்கம அந்தர்ஹிதமாயிருக்கையாலே அநுபபத்தியொன்று மில்லையென்று ஸமாதானம் காண்க. அதிமாநுஷஸ்தவத்திலும் மூன்ருவது ச்லோகத்தில் "ரஸ மஜ்ஜந மஞ்ஜஸாப்ய" என்றவிடம் காண்க.

தே பரமாம் முக்திமாப்ய பரே பதே நித்ய கிங்கரபதம் பஜந்தி—பூர்வார்த்தத்தில் சொல்லப்பட்டபடி ஜ்ஞாநிகளாய் அழகர் திருவடிகளிலே பக்தியைச் செலுத்தினவர்கள் அபுநராவ்ருத்திலக்ஷணமான மோக்ஷத்தைப் பெற்றுத் திருநாட்டிலே நித்ய கைங்கர்யசாலிகளாகின்றன ரென்றபடி. ... .... 83

देवस्य सुन्दरभुजस्य वनाद्रिभर्तुर्हि शीलवत्त्वमथवाऽऽश्रितवत्सलत्वम् ।

ऐशस्वभावमजहद्भिरिहावतारैर्योऽलञ्चकार जगदाश्रिततुल्यधर्मा ॥८४॥

தேவஸ்ய ஸுந்தரபுஜஸ்ய வநாத்ரிபர்த்துঃ
ஹை சீலவத்த்வ மதவா ச்ரித வத்ஸலத்வம்,
ஐசஸ்வபாவ மஜஹத்பிரிஹாவதாரைঃ
யோலஞ்சகார ஜகதாச்ரித துல்யதர்மா. 84

* * * இனி மத்ஸ்ய கூர்மாதி விபவாவதாரங்களை விரிவாக அநுபவிக்கத் திருவுள்ளம்பற்றி அதற்கு அவதரணிகைபோல ஐந்தாறு ச்லோகங்களருளிச் செய்கிருர். * அஜோபி ஸந் அவ்யயாத்மா பூதாநாமீச்வரோபி ஸந், ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா * என்று கீதையிலருளிச் செய்தபடியே அஜஹத் ஸ்வபாவனைக்கொண்டும் மநுஷ்யஸஜாதீயனைக்கொண்டும் விபவாவதாரங்கள் செய்தருளினது ஸௌசீல்யப்ரயுக்தமோ! அல்லது ஆச்ரித வாத்ஸல்ய நிபந்தநமோ வென்கிருரிதில்.

யঃ (ஸுந்தரபுஜঃ) ஐசஸ்வபாவம் அஜஹத்பিঃ அவதாரைঃ இஹ ஆச்ரித துல்யதர்மா ஸந் ஜகத் அலஞ்சகார—யாவரொரு அழகர் ஸர்வேச்வரத்வத்திற்கு ஏற்ற ஸ்வரூபரூப குணவிபவாதிகளை (அல்லது) ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வாதிகளை விடாதிருக்கின்ற திருவவதாரங்களினுல் இந்நிலத்திலே அடியார்களான மநுஷ்யாதிகளோடு துல்யசீலராய்க் கொண்டு இந்த ஜகத்தை அலங்கரித்தருளினுரோ;

தஸ்ய வநாத்ரிபர்த்துঃ ஸுந்தரபுஜஸ்ய தேவஸ்ய சீலவத்த்வம் அதவா ஆச்ரிதவத்ஸலத்வம் ஹை—அந்த திருமாலிருஞ்சோலை மலைத்தலைவரான சுந்தரத் தோளுடைய பெருமானுடைய சீலகுணமோ அல்லது ஆச்ரிதவாத்ஸல்ய குணமோ ஆச்சரியமானது. 84

सिंहाद्रिनाथ ! तव वाङ्मनसातिवृत्तं रूपं त्वतीन्द्रियमुदाह रहस्यवाणी ।

एवं च न त्वमिह चेत्समवातरिष्यस्त्वज्ज्ञानभक्तिविषयोऽद्य मुधाऽभविष्यत् ॥८५॥

ஸிம்ஹாத்ரிநாத! தவ வாங்மநஸாதிவ்ருத்தம்
ரூபம் த்வதீந்த்ரிய முதாஹ ரஹஸ்ய வாணீ,
ஏவஞ்ச ந த்வமிஹ சேத் ஸமவாதரிஷ்யঃ
த்வத் ஜ்ஞாநபக்தி விஷயோத்ய முதாபவிஷ்யத். 85

* * * எம்பெருமான் அவதாரங்கள் செய்தருளாவிடில் ச்ருதி ஸ்ம்ருத்யாதி ஸகல சாஸ்திரங்களும் நிர்விஷயங்களா யொழியுமென்று சொல்லி அவதாரத்தின் ஆவச்யகதையை முதலிக்கிறுரிதில்.

ஸிம்ஹாத்ரிநாத!—திருமாலிருஞ் சோலைமலைத் தலைவரே!

ரஹஸ்யவாணீ வாங்மநஸாதிவ்ருத்தம் தவ ரூபம் து அதீந்திரியம் உதாஹ—உபநிஷத்தானது தேவரீருடைய அவாங்மநஸ கோசரமான திருவுருவத்தை அதீந்த்ரியமென்று ஓதிவைத்தது. கண்ணால் காணமுடியாததென்றது.

ஏவஞ்ச த்வம் இஹ ந ஸமவாதரிஷ்யச் சேத்—இங்ஙனே உபநிஷத்து ஓதியிருப்பதற்கேற்ப தேவரீரும் இந்நிலத்திலே போந்து விபவாவதாரங்களைச் செய்தருளாமலே யிருந்துவிட்டீராகில். ஒருவர் கண்ணுக்கு மிலக்காகாதிருந்தீராகில்.

த்வத் ஜ்ஞாநபக்தி விதயஃ அத்ய முதா அபலிஷ்யந்—சாஸ்திரங்களிலே *நிதித்யாஸிதவ்யஃ* என்றும் * அர்ச்சயேத் * என்றும் * ப்ரணமேத் * என்றும் * நித்யம் ப்ரதக்ஷிணீ குர்யாத்* என்றும் விதிக்கப்பட்டுள்ள வழிபாடுகளுக்கு விஷயமின்றிக்கே யொழியுமிறே.

மநுஷ்யர்களை நோக்கி ப்ரவர்த்தித்த சாஸ்திரங்களிலே விஹிதங்களாயிருந்துள்ள விதிகளுக்கு ஒரு இலக்குக் கிடையாதே, போனல் அந்த சாஸ்திரங்கள் நிரர்த்தகங்களாமே. *ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா* என்ற திருமுகப்பாசுரமும் பழுதேயாமத்தனையிறே. அங்ஙனுகாமைக்காகவாயிற்று திருவவதாரங்கள் செய்தருளிற்று. 85

ये भक्ता भवदेकभोगमनसोऽनन्यात्मसञ्जीवनास्तत्संश्लेषणतद्विरोधिनिधनाद्यर्थं वनाद्रीश्वर ! ।
मय्येण्डं यदवातरस्सुरनराद्याकारदिव्याकृतिस्तेनैव त्रिदशैर्नरैश्च सुकरं स्वप्रार्थितप्रार्थनम् ॥८६॥

யே பக்தா பவதேகபோக மநஸோ நந்யாத்மஸஞ்ஜீவநாஃ
தத்ஸம்ச்லேஷண தத்விரோதி நிதநாத்யர்த்தம் வநாத்ரீச்வர !,
மத்யேண்டம் யதவாதரஸ் ஸுரநராத்யாகார திவ்யாக்ருதிஃ
தேநைவ த்ரிதசைர் நரைச்ச ஸுகரம் ஸ்வப்ரார்த்தித ப்ரார்த்தநம் 86

* * * எம்பெருமான் விபவாவதாரங்கள் செய்தருளின காரணத்தையும் அவ்வவதாரத்தினுல் விளைந்த ஸௌகர்யத்தையு மருளிச் செய்கிறுரிதில்.

ஹே வநாத்ரீச்வர !—வாரீர்! திருமாலிருஞ்சோலைத் தலைவரே !

அநந்யாத்ம ஸஞ்ஜீவநாஃ பவதேக போகமநஸஃ யே பக்தா:—அநந்யோபாயர்களும் அநந்யோபேயர்களுமான யாவர் சில பக்தர்களுளரோ என்றபடி. * களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன் * என்றும் * உனக்குப் பணி செய்திருக்குந் தவமுடையேன் * என்றும் அநுஸந்தித்திருக்குமவர்களான பக்தர்கள் சிலருண்டே;

தத்ஸம்ச்லேஷண - தத்விரோதி நிதநாத்யர்த்தம்—அப்படிப்பட்ட பரமபக்தர்களோடே ஸம்ச்லேஷிக்கவும் அவர்களது விரோதிகளை நிரஸிக்கவும், ஆதிசப்தத்தாலே தர்ம ஸம்ஸ்தாபனத்திற்காகவு மென்றபடி. கீதையில் * பரித்ராணுய ஸாதூநாம் * என்றச்லோகத்தில் பரித்ராண சப்தத்தினுல் விவக்ஷிதமான பொருளை இங்கு ஸம்ச்லேஷண சப்தத்தினுல் விவரித்தருளினுராயிற்று. ஸாமாந்யமான பரித்ராணம் விவக்ஷிதமாகில் அது ஸங்கல்ப மாத்ர ஸாத்யமுமாகலாமே; அதற்காக வந்து பிறக்கவேண்டாவே. தத்ஸம்ச்லேஷணம் ஸங்கல்ப ஸாத்யமாகாதிறே. கீதாபாஷ்யத்திலும் அந்தராதிகரண ஸ்ரீபாஷ்யத்திலும் எம்பெருமானுர் திருவுள்ளம்பற்றின பொருள் இதுவேயாயிற்று. ஆக, ஸாதுபரித்ராண துஷ்க்ருத் விநாசநாதிகளுக்காக என்கை.

ஸுரநராத்யாகார திவ்யாக்ருதிஃ மத்யேண்டம் யத் அவாதரஃ—தேவமநுஷ்ய திர்யக்ஸ்தாவர ஸஜாதீயராய் திவ்யமான உருவத்தையுடையவராய்க் கொண்டு அண்டங்களினிடையே அவதரித்தீரென்பது யாதொன்றுண்டு;

தேநைவ—இப்படி அவதரித்ததனாலேயே.

த்ரிதசைஃ நரைச்ச—தேவர்களாலும் மனுஷ்யர்களாலும்.

ஸ்வப்ரார்த்தித ப்ரார்த்தநம் ஸுகரம் (அபூத்)—தம்தமக்கு வேண்டியவற்றை வேண்டிக்கொள்வதானது எளிதாகச் செய்துகொள்ளலாயிற்று. திருவவதாரங்களைச் செய்து கண்ணுக்குப் புலப்பட்டு நிற்கவேயன்றோ அவரவர்கள் வணங்கி வழிபட்டு வேண்டியவற்றை யாசிப்பதற்கு அவகாசமுண்டாயிற்று. அவதாரம் செய்தருளாவிடில் கண்ணிற்காண நேராதாகையினாலே ஒருவர் ஒன்று வேண்டிக்கொள்ள அவகாசமில்லையாகுமிறே.

"ஸ்வப்ரார்த்தித ப்ரார்த்தநம்"—என்றது ஸ்வாபிலஷிதவஸ்து ப்ரார்த்தநமென்றபடி. 86

श्रीमन्महावनगिरीश! विधीशयोस्ते मध्ये तु विष्णुरिति यः प्रथमावतारः ।
तेनैव चेत्तव महिम्नि जनाः किलान्धास्त्वन्मत्स्यभावमवगम्य कथं भवेयुः ॥८७॥

ஸ்ரீமந் மஹாவநகிரீச! விதீசயோஸ் தே
மத்யே து விஷ்ணுரிதி யஃ ப்ரதமாவதாரஃ,
தேநைவ சேத் தவ மஹிம்நி ஜநாஃ கிலாந்தாஃ
த்வந்மத்ஸ்ய பாவ மவகம்ய கதம் பவேயுஃ. 87

* * * விபவாவதார ப்ரசம்ஸை ப்ரஸ்துதமாய் நிகழ்ந்து வருகையாலே இதில் விவக்ஷிதமான விஷயங்களை யெல்லாம் அடைவே அருளிச்செய்கிறார். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்திலே (51) * மத்யே விரிஞ்ச கிரிசம் ப்ரதமாவதாரஃ * என்று தொடங்கியருளிச் செய்துள்ள ச்லோகம் இந்த ச்லோகத்தின் கருத்தை நன்கு விவரிக்குமது.

ஸ்ரீமந் மஹாவநகிரீச != திருமாலிருஞ்சோலை மலைத்தலைவரே! (இது இரண்டு ஸம்போதநமாகவும், ஒரே ஸம்போதநமாகவுமாம்.) ஸ்ரீமந்! என்று தனியே பிரித்தால் இரண்டு விளி. மஹாவநகிரியிலோ மஹாவந கிரீசனிலோ ஸ்ரீமத் த்வத்தையந்வயித்து ஸமஸ்தபதமாகக் கொண்டால் ஒரே விளி.

விதீசயோர் மத்யே விஷ்ணுரிதி தே யஃ ப்ரதமாவதாரஃ—பிரமன் சிவனென்னு மிவர்களினிடையே தேவரீர் விஷ்ணுவென்று முதன்முதலாகத் திருவவதாரம் செய்தது யாதொன்றுண்டு;

தேநைவ தவ மஹிம்நி ஜநாஃ அந்தாச் சேத்—அது கொண்டே ஜனங்கள் தேவரீருடைய பெருமையில் குருடர்களாக ஆவர்களானால்; தேவரீருடைய மஹிமையை உள்ளபடியுணராதே விபரீதமாகக் கொள்வர்களாகில் என்றபடி.

த்வந்மத்ஸ்யபாவம் அவகம்ய கதம் பவேயுஃ?—தேவரீர் மத்ஸ்யாவதாரம் செய்தருளினபடியையறிந்து என்னுவர்களோ? தேவரீர் தேவயோநியில் அவதரித்தது கொண்டே ப்ரபாவத்தில் ப்ரமித்திருப்பர்களாகில் மத்ஸ்யாதி நீசயோனிகளில் ஜனித்தது கொண்டு இன்னமும் அதிகமாக ப்ரமிப்பார்களன்றோ வென்றபடி. "த்வந்மத்ஸ்ய பாவம்" என்று பாடமன்றிக்கே "த்வந்மர்த்ய பாவம்" என்கிற பாடமும் காண்கிறது. இதுவே பொருத்தமென்பாருமுளர். எம்பெருமான் தனித்தனியவதாரங்கள் செய்தது தவிர த்ரிமூர்த்தி ஸாம்யப்ரமம் தோன்றும்படியாக ப்ரஹ்மருத்ரர்களினிடையே விஷ்ணுவாகி நின்று ஓரவதாரம் முந்துறமுன்னம் செய்ததுண்டு. திரு

மங்கையாழ்வார் "நல்லரன் நாரணன் நான்முகனுக்கு" (2-9-1.) என்று பெரிய திருமொழியிலருளிச்செய்தது காண்க. அதிமாநுஷ ஸ்தவத்திலும் "ப்ரஹ்மேச மத்யகணநா" என்றருளிச் செய்தார். நிகமாந்த குருவும் வரதராஜ பஞ்சாசத்திலே "मध्ये विरिञ्चिशिवयोर्विहितावतारः ख्यातोऽसि तत्समतया तदिदं न चित्रम्" என்றருளிச் செய்தார். அந்தச் லோகத்தின் உத்தரார்த்தம் "मायावशेन मकरादिशरीरिणं त्वां तानेव पश्यति करीश ! यदेष लोकः" என்றிருக்கையாலே இந்த ச்லோகத்தில் நான்காவது பாதத்தில் "த்வந் மத்ஸ்யபாவமவகம்ய" என்கிறபாடமே மிகப் பொருத்தமென்று கொள்ளலாம். எம்பெருமான் ப்ரஹ்மருத்ரர்களினிடையே அவதாரம் செய்ததுகொண்டு அவர்களோடொக்க நினைப்பது அநுசிதமென்பது இந்தச்லோகத்தின் ஸாரமான கருத்து. ... 87

हे देव ! सुन्दरभुज ! त्वमिहाण्डमध्ये सौलभ्यतो विसदृशं चरितं महिम्नः ।
अङ्गीकरोषि यदि तत्र सुरैरमीभिस्साम्यान्निकर्षपरिपालनमेव साधु ॥८८॥

ஹேதேவ! ஸுந்தரபுஜ! த்வமிஹாண்ட மத்யே
ஸௌலப்யதோ விஸத்ருசம் சரிதம் மஹிம்நः,
அங்கீகரோஷி யதி தத்ர ஸுரைரமீபிः
ஸாம்யாந் நிகர்ஷபரிபாலநமேவ ஸாது. 88

* * * கீழ்ச்லோகத்தில் ப்ரஹ்மருத்ரர்களினிடையே விஷ்ணுவாக அவதரிக்குமோரவதாரம் ப்ரஸ்துதமாயிற்று; அவ்வவதாரந்தன்னில் தேவர்கள் விஷ்ணுவை அந்த ப்ரஹ்மருத்ரர்களோடு ஸமமாக ப்ரதிபத்தி பண்ணுமதிற் காட்டிலும் நிகர்ஷப்ரதிபத்தி பண்ணுவதே நலமென்றருளிச் செய்கிறார் இந்த ச்லோகத்தில். புருஷோத்தமனை எம்பெருமானை க்ஷுத்ரர்களோடு ஸமமாக நினைப்பதும் குறைய நினைப்பதும் துல்யமேயென்பது கருத்து.

ஹே ஸுந்தரபுஜ தேவ!—வாரீர் சுந்தரத் தோளுடைய பெருமாளே!; த்வம்—தேவரீர்.
ஸௌலப்யதः—ஸௌலப்ய குணத்தினால்.
இஹ அண்டமத்யே—இவ்வண்ட மத்யத்திலே (திருவவதரித்து),
மஹிம்நः விஸத்ருசம் சரிதம் அங்கீகரோஷி யதி—தேவரீருடைய பரத்வத்திற்கு எதிர்த்தட்டாயிருக்கிற நிலைமையை ஏற்றுக் கொள்ளுமளவில்.
தத்ர—அந்நிலை தன்னிலே. அமீபிः ஸுரைः—இந்த தேவர்களாலே.
ஸாம்யாத் நிகர்ஷபரிபாலநமேவ ஸாது—ஸாம்யப்ரதிபத்தி கொள்ளுமதிற் காட்டிலும் அபகர்ஷப்ரதிபத்தி கொள்ளுமதே நன்றாம். அபகர்ஷப்ரதிபத்தி எப்படி அவிவேககிருத்யமோ அப்படியே ஸாம்யப்ரதிபத்தியும் அவிவேகக்ருத்ய மென்றதாயிற்று.

ஸம்ஸ்க்ருத வ்யாக்க்யாதா இந்த ச்லோகத்திற்கு வேறு வகையாகத் தாத்பரியம் காட்டுகிறார் ;—"ब्रह्मरुद्रेन्द्रादिसाम्याद्वविष्णूपेन्द्राद्यवतारादपि मत्स्यकूर्मादिसजातीयावतार एव अत्यन्तसौलभ्यावह इति भावः ॥" என்றெழுதியுள்ளார். பிரமன் சிவனிந்திரன் முதலானவர்களோடு ஸாம்யத்தை ப்ரமிப்பதற்குறுப்பான விஷ்ணுவவதாரம் முதலிய அவதாரங்களைச் செய்வதை விட மத்ஸ்யகூர்மாதி ஸஜாதீயமான அவதாரம் செய்வதுமேல்—என்பதாக இந்த ச்லோகத்தின் கருத்தைக் காட்டுகிறார். ... ... 88

इहावतीर्णस्य वनाद्रिनाथ ! ते निगूहतः स्वं महिमानमैश्वरम् ।
उमापतेः किं विजयः प्रियङ्करः प्रियङ्करा चेन्द्रजिदस्त्रबन्धना ॥८९॥

இஹாவதீர்ணஸ்ய வநாத்ரிநாத ! தே
நிகூஹத: ஸ்வம் மஹிமாநமைச்வரம்,
உமாபதே: கிம் விஜய: ப்ரியங்கர:
ப்ரியங்கரா வேந்த்ரஜிதஸ்த்ரபந்தநா. 89

* * * அவதாரங்களில் எம்பெருமானுக்கு அபகர்ஷம நினைக்கும்படியாகச் சில சரித்ரங்கள் இதிஹாஸ புராணங்களில் காணபதுண்டு. தன்னுடைய பெருமையைத் தானே மறைத்துக் காட்ட நினைத்த எம்பெருமானுடைய ஒரு விலக்ஷணஸங்கல்ப விசேஷத்தினலேயான அந்த சரித்திரங்களைக் கொண்டு அந்யதாப்ரதிபத்தி கொள்ளலாகாதென்கிற தாத்பர்யத்தைத் திருவுள்ளத்திலே கொண்டு, எம்பெருமான் தன்னையே ஒரு கேள்வி கேட்பதாக அருளிச் செய்யப்படுகிறது இந்த ச்லோகம்.

ஹேவநாத்ரிநாத !—வாரீர் திருமாலிருஞ்சோலை மலைத்தலைவரே !

ஐச்வரம் ஸ்வம் மஹிமாநம் நிகூஹத: இஹ அவதீர்ணஸ்ய தே—ஸர்வேச்வரத்வ நிபந்தநமாய் ஸ்வதஸ்ஸித்தமான பெருமையை மறைத்துக்கொண்டு இந்த லீலா விபூதியில் அவதாரங்களைச் செய்தருளாநின்ற தேவரீருக்கு.

உமாபதே: விஜய: ப்ரியங்கர: கிம்? இந்த்ரஜிதஸ்த்ரபந்தநா ப்ரியங்கராவா ?—பாணாஸுர யுத்தத்திலே சிவனைப் பங்கப்படுத்தின செயல் திருவுள்ளத்திற்கு உகப்பானதா? அல்லது, இந்திரஜித்தின் மாயாஸ்த்ரத்தாலே கட்டுண்டுகிடந்தது திருவுள்ளத்திற்கு உகப்பானதா? என்று கேட்பதாக ஸம்ஸ்க்ருத வ்யாக்யாதா பொருளெழுதியுள்ளார். ‘உமாபதேர் விஜய: ; என்பதற்கு ‘உமாபதியான சிவனைத் தோற்பித்தது’ என்று பொருள் கொள்வதிற்காட்டிலும் ‘உமாபதியான சிவன் வெற்றிபெறும்படி செய்தது’ என்று பொருள் கொள்வது சிறக்கும். * कर्तृकर्मणोः कृति * என்பது வ்யாகரண ஸூத்ரமாகையாலே உமாபதியை விஜயத்திற்குக் கர்த்தாவாகவும் கொள்ளலாம், கர்மமாகவும் கொள்ளலாம். கர்மமாகக் கொண்டு ஸம்ஸ்க்ருத வ்யாக்யாதா பொருள் பணித்தார். அப்போது எம்பெருமானுக்கு உத்கர்ஷம் விளங்கும். இது இவ்விடத்திற்கு ஸ்வரஸமன்று ; “நிகூஹத: ஸ்வம் மஹிமாநமைச்வரம்” என்று எம்பெருமான் தனது மேன்மையை மறைத்துக்கொண்டு அவதாரம் செய்தருளின படியையன்றோ இங்கு ப்ரஸ்தாவித்தருளினர். அதற்குச் சேர்ந்திருக்கவேணுமே சொல்லப்படுகிற சரித்திரம். उमापतिकर्तृको विजय एवात्र ग्रन्थकर्तुरभिमत इति प्रतिभाति ॥ எம்பெருமான் சிவபிரானிடத்திலே புத்ரவரம் கேட்பது முதலான அபதானங்களில் சிவனுக்கு வெற்றியும் தனக்குத் தோல்வியும் காண நிற்குமிறே. திருவாய்மொழியில் (2-2-10) * கள்வா வெம்மையு மேழுலகும், நின்னுள்ளே தோற்றிய இறைவ வென்று, வெள்ளேறன் நான்முகனிந்திரன் வானவர், புள்ளூர்தி கழல் பணிந்தேத்துவரே * என்ற பாசுரத்தின் சுவைமிக்க பொருள் இங்கே அநுஸந்திக்கத் தகும். (அதாவது) தேவர்கள் எம்பெருமான் பக்கலிலே வந்து வரங்கொள்ளும் போது “நீர் எங்களிடத்திலே வந்து வரங் கேட்பதாகவுங்காட்டி எங்களைப் பெருமைப்படுத்த வேணும்” என்றும் வரம் கேட்பர்களாம்; எம்பெருமான் அதற்கிணங்கி ‘ருக்மிணிப் பிராட்டிக்கு ஒரு பிள்ளை வேணும்’ என்று சிவபிரானிடத்தே வரங் கேட்பனாம்; அப்போது, “அந்தோ! தான் பராத்பரனாயிருக்கிற நிலைமையை மறைத்துக்கொண்டு இப்படி வரம் கேட்கிறானே, இது என்ன கள்வமோ!” என்றீடுபட்டுக் கள்வா! என்று விளிப்பர்களாம், அதை ஆழ்வாரெடுத்துக் காட்டுகிறார், இப்படிப்பட்ட கள்வச் செயல்களினால் உமாபதிக்கு உயர்த்தியையும் தனக்குத் தாழ்வையும் காட்டுவதுண்டே, அதுதான் இங்கு விவக்ஷிதமென்னப் பொருந்தும். ஸம்ஸ்க்ருத வ்யாக்

க்யாதா காட்டின பொருள் ஸர்வாத்மநா அஸங்கத மென்னப்போகாது; அதுவும் ஒருவாறு இணங்கக்கூடியதே.

"இந்த்ரஜிதஸ்த்ரபந்தநா" என்றவிடத்து அநுஸந்தேயமான கதை ஸ்ரீராமாயண யுத்த காண்டத்தில் நாற்பத்தைந்தாவது ஸர்க்கத்தில் காணத்தக்கது. 89

पुच्छोत्पुच्छनमूर्च्छनोद्धतिधुतव्यावर्तितावर्तवत्संवर्तार्णवनीरपूरविलुठत्पाठीनदिव्याकृतेः ।
सिंहाद्रीश ! न वैभवं तव कथं स्वालक्ष्यमालक्ष्यते पद्माक्षस्य जुघुक्षतोऽपि विभवं लक्ष्मीधराधोक्षज ! ॥९०॥

புச்சோத் புச்சந மூர்ச்ச நோத்த திதுத வ்யாவர்த்தி தாவர்த்தவத்
ஸம்வர்த்தார்ணவ நீரபூரவிலுடத் பாடீந திவ்யாக்ருதே:,
ஸிம்ஹாத்ரீச ! ந வைபவம் தவ கதம் ஸ்வாலக்ஷ்யமாலக்ஷ்யதே
பத்மாக்ஷஸ்ய ஜுகுக்ஷதோபி விபவம் லக்ஷ்மீதராதோக்ஷஜ ! 90

* * * கீழ் ச்லோகத்தில், எம்பெருமான் விபவாவதாரங்களில் தன்னுடைய பெருமையை மறைத்துக் கொள்வதென்னும் விஷயம் ப்ரஸ்துதமாயிற்று; அவன் மறைத்துக் கொள்ள நினைத்தாலும் மறைக்க முடியாதென்கிறாரிதில். இது தொடங்கி மத்ஸ்யகூர்மாதி யவதாரங்களை அடைவே அநுபவித் தருளுகிறாராயிற்று. இதில் பூர்வார்த்தம் முழுவதும் ஸமஸ்தமான ஒரே பதம்; மத்ஸ்யாக்ருதியை அற்புதமாக வர்ணிக்கிறது.

ஹே ஸிம்ஹாத்ரீச !—வாரீர் திருமாலிருஞ்சோலை மலைத்தலைவரே ! லக்ஷ்மீதர அதோக்ஷஜ !

புச்சோத் புச்சந மூர்ச்ச நோத்த திதுத வ்யாவர்த்தி தாவர்த்தவத் ஸம்வர்த்தார்ணவ நீரபூரவிலுடத்பாடீந திவ்யாக்ருதேஸ்தவ—(மீனுயவதரித்தபோது) வாலை உயரத்தூக்குவது, குறுக்கே பரப்புவது ஆகிய இச்செயல்களினால் நடுக்கமுற்றதாகச் செய்யப்பட்டதும் சுழற்சியுடையதாகச் செய்யப்பட்டதுமான ப்ரளயார்ணவத்தின் நீர் வெள்ளத்தாலே புரளா நின்ற திவ்ய மத்ஸ்யாக்ருதியைக் கொண்ட தேவரீருடைய. ['ஆவர்த்தவத்' என்றது, 'நீர்ச்சுழிகளையுடைய' என்றபடி. இது ஸ்வாபாவிக விசேஷணம்.] எம்பெருமான் மீனுருவங் கொண்டது ஸாமான்யமான மீனுருவமன்று; வாலை உயரத் தூக்கும் போதும் குறுக்கே பரப்பும்போதும் ப்ரளயார்ணவமே நிலை கலங்கும்படியாயிற்று. இப்படிப்பட்ட அப்ராக்ருத அதிவிலக்ஷண மத்ஸ்ய விக்ரஹத்தைக் கொண்ட தேவரீருடைய.

ஸ்வாலக்ஷ்யம் வைபவம் கதம் நாலக்ஷ்யதே—நன்கு காணக்கூடிய வைபவம் எங்ஙனே காண முடியாமற் போகும்?

விபவம் ஜுகுக்ஷதோபி பத்மாக்ஷஸ்ய தவ என்று கீழோடே அந்வயம். தேவரீருடைய பெருமையை மறைத்துக்கொள்ளவேணு மென்று தேவரீர் விரும்பின போதிலும் என்பது தாற்பரியம். गूहितुमिच्छन् - जुघुक्षन् ; तस्य—जुघुक्षतः । இங்கு (பத்மாக்ஷஸ்ய) என்றது ஸாபிப்ராயம்; செந்தாமரைக் கண்ணரான தேவரீர் அவதாரத்தில் அக்கண்ணழகை மறைத்துக்கொள்ள முடியுமாகில் மற்றுள்ள பெருமைகளையும் மறைத்துக் கொள்ள முடியும் என்று காட்டினபடி. * பீஷ்ம த்ரோணு வதிக்ரம்ய மாஞ்சைவ மதுஸூதந! கிமர்த்தம்......புக்தம் வ்ருஷல போஜநம் * என்று அதிக்ஷேபிக்கவந்த துரியோதநனும் "கிமர்த்தம் புண்டரீகாக்ஷ" என்று பரவசமாகச் சொல்லும்படியாயிற்றே. 90

... .... ...

साचलावटलटाकदीर्घिकाजाह्नवीजलविवर्धितः क्षये ।
शृङ्गसङ्गमितनौर्मनोरभूरग्रतोऽण्डजवपुर्हि सुन्दर ! ॥९१॥

ஸர்சலாவட தடாக தீர்க்கிகா ஜாஹ்நவீ ஜலவிவர்த்திதஃ க்ஷயே,
ச்ருங்கஸங்கமித நௌர் மநோரமூஃ அம்ரதோண்டஜ வபுர் ஹி ஸௌந்தர! 91

* * * மத்ஸ்யாவதார சரித்ரவிஸ்தரம் சுருங்க அநுபவிக்கப்படுகிறது இந்த ச்லோகத்தில். க்ருதமாலா நதியின் கரையில் எம்பெருமானை நோக்கித் தவஞ்செய்து கொண்டிருந்த ஸத்யவ்ரத ரென்னுமோர் ராஜர்ஷி ஜலபானம் பண்ணிக்கொண்டு பிழைத்திருந்தார். அவர் ஜல தர்ப்பணஞ் செய்கையில் அவரது இரண்டு கைகளுக்குள் ஒரு சிறிய மீன் அகப்பட்டுக்கொண்டது. அதனை அவர் பூமியிலுள்ளதொரு பள்ளத்தில் விட்டார்; அம்மீன் அதிலடங்காத வுருவமெடுத்தது கண்டு அதையெடுத்து ஒரு குளத்தில் விட்டார்; அதிலுமடங்காத வுருவமுண்டானது கண்டு அம்மீனை பெரியதோர் நடை வாவியில விட்டார்; அதிலு மடங்காத வடிவுகொண்டது கண்டு கங்கையில் விட்டார்; அதிலு மடங்காத பேருருவங்கொண்டது கண்டு கடலில் விட்டார். அப்பால் அந்த ஸத்யவ்ரதர் அம்மீனிடத்துப் பெருமயல் கொண்டு அதனை நோக்கி 'ஓமத்ஸ்ய ராஜனே! உனது வரலாற்றைத் தெரிந்துகொள்ள மிகவு மாவலுடையேன்; நூறு யோஜனை நீளமும் அதற்குத்தக்க பருமனும் வாய்ந்துள்ள நீ யார்? உனது தத்துவத்தை வெளியிடவேணும' என்று கைகூப்பிப் பிரார்த்திக்க, அந்த மத்ஸ்யராஜன் "ஓ மஹாநுபாவரே! இன்று முதல் ஏழு நாட்களுக்குள் இம்மூவுலகங்களும் மூழ்கிவிடப் போகின்றன; அந்தப் பெருநீரில் ஒரு விசாலமான ஓடம் வரப்போகிறது; அந்தப்படகில் ஸப்தர்ஷிகளும் நீரும் எல்லா வோஷதிகளும ஸமஸ்தப்ராணிகளும் ஏறி மனத்திற்கு வருத்தமொன்று மின்றி உலாவக்கடவீர்கள்; அப்படி ஸஞ்சரித்துககொண் டிருக்குமளவில ஒரு பெருங்காற்று வீசப்போகிறது; அதனால் அந்த ஓடமானது பெருநீரில் அலையப் போகின்றது; அப்பொழுது எனது சிரஸஸில முளைத்துள்ள பெரியதொரு கொம்பில் பெரிதான வொரு ஸர்பபத்தினால் அந்த வோடத்தைக கட்டிவிடும். பிறகு நான் அந்தப் படகுடன் உமமையும் எல்லாபபிராணிகளையும ரிஷிகளையும சுமந்துகொண்டு அந்தப் பேரிருள் நீங்கும் வரையில் கடலில் ஸஞ்சரிக்கப் போகின்றேன். அப்போது எனது பெருமையை நீர் உணர்வீர்" என்று உரைத்துவிட்டு மறைந்திடவே, ஆச்சரிய மடைந்த அந்த ஸத்யவ்ரதர் பகவானாலே குறிககப்பட்ட அக்காலத்தை எதிர் பார்த்திருக்கையில், ஸபத மேகங்களினுடைய ஆரவாரத்தால் கடல் கிளரத் தொடங்கிற்று. பகவான் குறித்த தினத்தில் ஒரு பெரியவோடம அக்கடலில் வரக்கண்டு மகிழ்ந்து எல்லாக் கொடி செடி பீஜங்களையும் அந்தப் படகிலேற்றித் தாமும் ஏறினர். ஏறி, ஸப்தர்ஷிகளும் தாமுமாய்ப் பகவானைச் சிந்தனை செய்துகொண்டிருக்கையில், பெரிய கொம்புள்ள மத்ஸ்ய ரூபங்கொண்ட பகவான் காணப்பட்டார். லக்ஷம் யோஜனை நீளமும் பதினாயிரம் யோஜனை பருமனும் ஒற்றைக் கொம்பும் ஸௌவர்ண வர்ணமும் ஸகலலோக மநோஹரரூபமும் வாய்ந்தவராகக் காணப்பட்டார். உடனே அந்த ஸத்ய வ்ரதர் ஒரு பெரிய நாகத்தைக்கொண்டு அந்த மத்ஸ்ய பகவானது கொம்பிலே அப்படகைக் கட்டிவிட, அப்பெருமான் அதைவஹித்துக் கொண்டு அண்டகடாஹத்தளவும் செல்லத துள்ளி விளையாடி, முன்பு அசுரர்கவர்ந்து சென்ற வேதங்களையும் மீட்டுக் கொணர்ந்தருளி ஆக இவ்வண்ணம் பிரளயாபத்தில நின்றும் ப்ரஜைகளைக் காத்தருளியதும் வேதங்களை உபகரித்தருளினதும் மத்ஸ்யாவதார சரிதமாகும். இதுதன்னை இந்த ச்லோகத்தாலும் அடுத்த ச்லோகத்தாலும் சுருங்க அநுஸந்திக்கிறாரயிற்று.

ஹேஸௌந்தர!—வாரீர் அழகரே; க்ஷயே—ப்ரளய காலத்திலே.

அண்டஜவபுஸ் ஸந்—மத்ஸ்யத் திருமேனியையுடையீராய்க் கொண்டு.

ஸாசலாவட தடாக தீர்க்கிகாஜாஹ்நவீஜலவிவர்த்திதஃ— * பூர்ப்பூமி ரசலாநந்தா * என்கிற அமர கோசத்தின் படியே (அசலா) என்பது பூமிக்கு வாசகம். அவட மென்பது

பள்ளம். தடாகமென்பது ஏரி. தீர்க்கிகா—நடைவாவி. ஜாஹ்நவீ—கங்கை. இவற்றினுடைய தீர்த்தத்திலுல் வளரச் செய்யப்பட்டவராய் என்றபடி. முதலில் பூமியிலே விட, பிறகு பள்ளத்திலே விட, முடிவாகக் கடலிலே விட்டதாகக் கதையிருப்பதனாலே இங்கு जाह्नवीजलधि वर्धित :— ஜாஹ்நவீ ஜலதி வர்த்திதஃ" என்று பாடமிருந்திருக்குமென்றும், அப்பாடம் (ஜலவிவர்த்திதஃ) என்று திரிந்திருக்கு மென்றும் தோன்றுகிறது. நிஷ்கர்ஷிப்பதில பெரியார் ப்ரமாணம். (ஸாசலாவட) என்றவிடத்து, अचलाया अवट: —अचलावट:, तेन सहिता: तटाकादय:....என்று கொள்ளலாம்.

மநோஃ அக்ரதஃ ச்ருங்கஸங்கமித நௌஃ அபூஃ—கீழ் விவரித்த வரலாற்றில் ஸத்யவ்ரதரென்னப்பட்டவர்தாம் இங்கு மநு வெனப்படுகிறார். அவருடைய முன்னிலையில் தன் சிரஸ்ஸிலே தோன்றிய கொம்பிலே கட்டப்பட்ட படகையுடையீரானீர் என்றபடி. ஸ்ரீரங்க ராஜஸ்தவ உத்தரசதகத்திலுள்ள * மீநதநுஸ் த்வம் நாவி நிதாய ஸ்திரசரபரிகரம் அநுமநு பகவந் * இத்யாதி மத்ஸ்யாவதார ச்லோகமும் இங்கே அநுஸந்தேயம். 91

प्रलयजनीरपूरपरिपूरितस्वनिलयावसन्नवदनभ्रमदशरण्यभूतशरणार्थिनाकिशरणं भवन् स्वकृपया ।
चलदुदधीरिताम्बुकलुषीक्रियाढ्यगमनस्वपृष्ठविधृताचलकुल एष मीनतनुरत्र सुन्दरभुजो वनाद्रिनिलय: ॥९२॥

ப்ரலயஜ நீரபூர பரிபூரிதஸ்வ நிலயாவஸந்நவதந
ப்ரமதசரண்யபூத சரணார்த்தி நாகி சரணம் பவந் ஸ்வக்ருபயா,
சலதுத தீரிதாம்பு கலுஷீக்ரியாட்ய கமநஸ்வப்ருஷ்ட வித்ருதா
சலகுல ஏஷ மீநதநுரத்ர ஸுந்தரபுஜோ வநாத்ரி நிலயஃ. 92

*** இந்த ச்லோகமும் மத்ஸ்யாவதார வர்ணநபரம்; முந்தின ச்லோகத்திற்கு சேஷபூதமானது. பெரிய திருமொழியில் பதினோராம் பத்தில் தசாவதார வர்ணநபரமான * நிலையிடமெங்குமின்றி * என்ற திருமொழியில் முதற் பாசுரம் மத்ஸ்யாவதார பரம். அப்பாசுரமும் இந்த ச்லோகமும் பொருளொற்றுமையோடு கூடினவளவே யல்லாமல் வ்ருத்தபங்கியும் ஓரேவகையி லமைந்ததென் றுணர்க. இந்த ச்லோகம் பாதந்தோறும் இருபத்து மூனறெழுத்துக் கொண்டது; அந்தப் பாசுரமும் அடிதோறும் ஒற்றொழித்து இருபதது மூன்றெழுத்துக் கொண்டது. அப்பாசுரம் வருமாறு:—

நிலையிட மெங்குமின்றி நெடுவெள்ள மும்பர் வளநாடுமூட விமையோர் *
தலையிட மற்றெமக்கோர் சரணில்லையென்ன அரணாவனென்னுமருளால் *
அலைகடல் நீர்குழம்ப வகடாடவோடி அகல்வானுரிஞ்ச முதுகில் *
மலைகளை மீதுகொண்டு வருமீனைமாலை மறவாதிறைஞ்சென்மனனே.

ஸ்வக்ருபயா— தன்னுடைய இயற்கையின்னருளாலே.

ப்ரலயஜ நீரபூர பரிபூரித ஸ்வநிலயாவஸந்ந வதந ப்ரமத் அசரண்யபூத சரணார்த்திநாகி சரணம் பவந்—பிரளயத்திலுண்டான பெருவெள்ளத்தினாலே நிரப்பப்பட்ட தம்தம் இருப்பிடங்களையுடையவர்களாய், அதனாவ மிகவருந்தின முகத்தை யுடையவர்களாய், தடுமாறினவர்களாய், நாதனற்றவர்களாய், புகலிடம் விரும்புமவர்களான தேவர்களுக்குத் தஞ்சமாய்க்கொண்டு. பரிபூரிதஸ்வநிலய, அவஸந்நவதந, ப்ரமத், அசரண்யபூத, சரணார்த்தி—என்கிற ஐந்தும் நாகிகளுக்கு விசேஷணங்களாகையாலே பஹுபத் கர்மதாரயம்.

சலஜுதீரிதாம்பு கலுஷீக்ரியாட்யகமநஸ்வப்ருஷ்ட விக்ருதாசலகுல:—இதுவரையில் ஸமஸ்தமான ஒருபதமாகக் கொள்ளவுமாம்; இடையில் கலுஷீக்ரியாட்யகமந: என்று விஸர்க்காந்தமாக்கி அதை ஒருபதமாகவும் மேலுள்ளதை ஒரு பதமாகவும் கொள்ளவுமாம். பொருளிலும் கருத்திலும் வாசியில்லை. முன்னமெடுத்துக்காட்டிய பெரிய திருமொழிப் பாசுரத்தில் * அலைகடல் நீர் குழம்ப அகடாடவோடியகல்வானுரிஞ்ச * என்றதற்கான கருத்தை "சலஜுத தீரிதாம்பு கலுஷீ க்ரியாட்ய கமந:" என்றதனாலே யருளிச்செய்தார். * முதுகில் மலைகளை மீதுகொண்டுவருமீனை மாலை * என்றதற்கான கருத்தை "ஸ்வப்ருஷ்ட விக்ருதாசல குல ஏஷ மீநதநு:" என்றதனாலே யருளிச்செய்தார். கொந்தளிக்கின்ற கடல் நீர் வெள்ளத்தை யெல்லாம் கலக்கிக்கொண்டு அதனுள்ளே ஸஞ்சரிப்பவரும், முதுகிலே மலைத்திரள்களைத் தாங்கிக்கொண்டிருந்தவருமான மத்ஸ்யாவதாரப் பெருமாள்.

அத்ர ஸுந்தரபுஜோ வநாத்ரி நிலய:—இங்குத் திருமாலிருஞ்சோலை மலையுறையும் சுந்தரத்தோளராகக் காட்சி தருகின்றாரென்கை. ... ... 92

स्वपृष्ठे प्रष्ठाद्रिभ्रमणकरणैः किञ्च फणिनः विकृष्टिव्याकृष्टिव्यतिविधुतदुग्धाब्धिचलितैः ।
अविष्पन्दो नन्दन् विकसदरविन्देक्षणरुचिः पुराऽभूस्सिंहाद्रेः प्रियतम ! हरे ! कच्छपवपुः ॥९३॥

ஸ்வப்ருஷ்டே ப்ரஷ்டாத்ரி ப்ரமண கரணை: கிஞ்ச பணிந:
விக்ருஷ்டி வ்யாக்ருஷ்டி வ்யதிவிதுத துக்தாப்தி சலிதை:,
அவிஷ்பந்தோ நந்தந் விகஸதரவிந்தேக்ஷண ருசி:
புராபூஸ் ஸிம்ஹாத்ரே: ப்ரியதம ஹரே! கச்சப வபு: 93

* * * கூர்மாவதார வைபவத்தை யநுபவித்தருளிச் செய்கிறாரிந்த ச்லோகத்திறல்.

ஹே ஸிம்ஹாத்ரே: ப்ரியதம ஹரே!—வாரீர் திருமாலிருஞ்சோலைமலைக் கன்பரான அழகரே;

புரா—பண்டொரு காலத்திலே; தேவர்களுக்கு அமுதமளிக்கக் கடல் கடைய நேர்ந்த காலத்திலே யென்றபடி.

ஸ்வப்ருஷ்டே ப்ரஷ்டாத்ரி ப்ரமண கரணை:—தன்னுடைய முதுகின்மீது முந்துற முன்னம் வந்து நின்ற மந்தரமலையைச் சுழற்றியதனாலும். * प्रष्ठोऽग्रगामिनि * என்பது வியாகரண ஸூத்ரம். ச்ரேஷ்டமென்று பொருள் தேறும். ப்ரஷ்டாத்ரி யென்றது சிறந்த மலையென்றபடியாய் மந்தரமலையைச் சொல்லிற்றாகும்.

கிஞ்ச பணிந: விக்ருஷ்டி வ்யாக்ருஷ்டி வ்யதிவிதுத துக்தாப்திசலிதை:—மந்தரமலையை மத்தாக நாட்டிச் சுழற்றினவளவன்றிக்கே, வாசுகி நாகத்தைக் கடைகயிறாகப் பூட்டி இடம் வலங்கொள்ள இழுப்பதனாலே மிகவும் அசைதலுற்ற திருப்பாற்கடலின் அசைவினாலும்.

அவிஷ்பந்த:—தான் சிறிதும் அசைதலற்று.

நந்தந்—ஆச்ரிதர்களான தேவர்களின் காரியம் தலைக்கட்டப்பெறுகிறதென்று திருவுள்ளமுவந்து.

விகஸதரவிந்தேக்ஷண ருசி:—அப்போதலர்ந்த செந்தாமரை போன்ற திருக்கண்ணழகையுடைய.

கச்சபவபு: அபூ:—ஆமைவடிவையுடையீரானீர். தம்முடலைப் பேணுமல் ப்ரணதஜந மனோரத பரிபூரணத்தையே விரதமாகக்கொண்டவரென்கிற குணாதிசயம் அநுபவிக்கப்பட்டதாயிற்று. ... ... 93

जगत्प्रलीनं पुनरुद्दिधीर्षतस्सिंहक्षितिक्षिन्निलयस्थ ! सुन्दर ! ।
पुरा वराहस्य तवेयमुर्वरा दंष्ट्राह्वयेन्दोः किल लक्ष्म लक्षिता ॥९४॥

ஜகத் ப்ரலீநம் புநருத்திதீர்ஷத:
ஸிம்ஹ க்ஷிதிக்ஷிந் நிலயஸ்த ஸுந்தர,
புரா வராஹஸ்ய தவேய முர்வரா
தம்ஷ்ட்ராஹ்வயேந்தோ: கில லக்ஷ்ம லக்ஷிதா. 94

* * * திவ்ய வராஹ மூர்த்தியை யநுபவிக்கிறார் இந்த ச்லோகத்தில். கோல வராஹத் திருமேனியின் பெருமையைப் பேசுபவர்கள் யாவரும் ஓரோ சமத்கார வகையிலே பேசுவதுண்டு. திருமங்கையாழ்வார் * खुरमध्यगतो यस्य मेरुः कणकणायते * என்ற ப்ரமாணத்தை யடியொற்றி * சிலம்பினிடைச் சிறுபரல் போல் பெரியமேரு திருக்குளம்பில் கணகணப்பத் திருவாகாரம் குலுங்க, நிலமடந்தைதனை யிடந்து புல்கிக் கோட்டிடை வைத்தருளிய வெங்கோமான் * என்றருளிச்செய்தார். பின்னையும், * தீதறு திங்கள் பொங்கு சுடரும்பரும்பருல கேழினோடு முடனே, மாதிர மண் சுமந்த வட குன்று நின்ற மலையாறு மேழுகடலும், பாதமர் சூழ்குளம்பின் அக மண்டலத்தி னொருபாலொடுங்க வளர்சேர், ஆதிமுனேனமாகி யரணாயமூர்த்தியது* என்று மருளிச் செய்தார். *वरद हन्त कथं प्रभूतं वाराहमास्थितवतो वपुरद्भुतं ते *என்று கேள்வி கேட்டார் வேதாந்த தேசிகர். இங்கு ஆழ்வானுடைய விலக்ஷணமான உல்லேகம் காணீர்.

ஸிம்ஹ க்ஷிதிக்ஷிந் நிலயஸ்த ஸுந்தர—ஸிம்ஹாத்ரியான திருமாலிருஞ்சோலைமலையிலெ மூந்தருளி யிராநின்ற அழகரே! (க்ஷிதிக்ஷித்—பர்வதம்.)

புரா ப்ரலீநம் ஜகத் புநருத்திதீர்ஷத: வராஹஸ்ய தவ—பண்டொருகால் ப்ரலயார்ணவ மக்னமான ஜகத்தைப் புநருத்தாரம் செய்ய நினைத்தருளின வராஹ ரூபியான தேவரீருடைய.

தம்ஷ்ட்ராஹ்வய இந்தோ :—கோரப் பற்களென்னும் சந்திரனுக்கு.

இயம் உர்வரா லக்ஷ்ம கில லக்ஷிதா—ஸஸ்யங்கள் நிறைந்த இந்தப் பூமியானது ஒரு களங்கமாகவன்றோ காணப்பட்டது. பூமண்டலம் முழுதும் கோரப்பல்லிலே ஏக தேசமாகக் காணப்பட்டதென்றால் அந்த வராஹ மூர்த்தியின் வைபுல்யம் அளவிட முடியாதென்கை ... ... 94

न वायुः पस्पन्दे ययतुरथवाऽस्तं शशिरवी दिशोऽनश्यन् विश्वाऽप्यचलदचला साचलकुला ।
नभश्च प्रश्च्योति क्वथितमपि पाथो नरहरौ त्वयि स्तम्भे शुम्भद्वपुषि सति हे सुन्दरभुज ! ॥९५॥

நவாயு: பஸ்பந்தே யயது ரதவாஸ்தம் சசிரவீ
திசோநச்யந் விச்வாப்யசலதசலா ஸாசலகுலா,
நபச் ச ப்ரச்ச்யோதி க்வதிதமபி பாதோ நரஹரௌ
த்வயி ஸ்தம்பே சும்பத்வபுஷி ஸதி ஹே ஸுந்தரபுஜ! 95

* * * இது முதல் மூன்று ச்லோகங்களினால் நரஸிம்ஹாவதாரத்தை யநுபவித்துப் பேசுகிறார். * அங்கண் ஞாலமஞ்ச அங்கோராளரியாய் * என்கிறபடியே, நரசிங்க

வுருக்கொண்டு தோன்றியபோது உலகமெல்லாம் நடுங்கும்படியிருந்ததனால், அப்போது காற்று அசையவில்லை, சந்திர ஸூர்யர்கள் உதிக்கவில்லை; திசைகள் தென்படவில்லை, பர்வதஸமூஹங்களோடு கூடிய ஸமஸ்த பூமண்டலமும் ஆடியசைந்தது; ஆகாசமும் விகாரப்பட்டது; கடல் நீரும் கொதிப்படைந்தது! இப்படியாக அந்த நிலைமையை என் சொல்லுவோமென்கிறார்.

ஹே ஸுந்தரபுஜ!—வாரீர் சுந்தரத் தோளுடைய அழகரே!

த்வயி நரஹரௌ ஸ்தம்பே சும்பத்வபுஷி ஸதி—தேவரீர் நரசிங்க வுருவினராய்க்கொண்டு ஹிரண்யாஸுர க்ருஹ ஸ்தம்பத்தில் ப்ரகாசித்த வடிவையுடையரானவளவில்—ப்ராதுர்ப்பவித்தருளினவளவில்.

வாயுः ந பஸ்பந்தே—* भीषाऽस्माद्वातः पवते * என்கிறபடியே தேவரீருடையதிவ்யாஜ்ஞைக்குக் கட்டுப்பட்டு ஸதாகதியாயிருக்கக்கடவனான வாயுவுங்கூட அசைந்திலன்.

அதவா சசிரவீ அஸ்தம் யயதுः—அதற்குமேல் சந்திரஸூரியர்களும் அஸ்தமித்தே கிடந்தார்கள், உதிக்கப்பெற்றிலர்.

திசः அநச்யந்—கிழக்கு முதலிய திசைகளும் தெரியாதொழிந்தன.

ஸாசலகுலா விச்வாபி அசலா அசலத்—பர்வத ஸமூஹங்களோடு கூடிய நிலவுலகம் முழுவதும் ஆடல் கொடுத்தது.

நபச்ச ப்ரச்ச்யோதி—ஆகாசமும் சரிந்து கடலில் ஆழ்ந்தது என்று அதிசயோக்தியிருக்கிறபடி.

பாதः அபி க்வதிதம்—கடல் நீரும் கொதிப்படைந்ததாயிற்று. ... ... 95

अरालं पातालं त्रिदशनिलयः प्रापितलयो धरित्री निर्धूता ययुरपि दिशः कामपि दिशम् ।
अजृम्भिष्टाम्भोधिर्घुमुघुमिति घूर्णन् सुररिपोः विभिन्दाने वक्षस्त्वयि नरहरौ सुन्दरभुज ! ॥९६॥

அராலம் பாதாலம் த்ரிதசநிலயः ப்ராபிதலயः
தரித்ரீ நிர்த்தூதா யயுரபி திசः காமபி திசம்,
அஜ்ரும்பிஷ்டாம்போதிः குமுகுமிதி கூர்ணந் ஸுராரிபோः
விபிந்தாநே வக்ஷஸ் த்வயி நரஹரௌ ஸுந்தரபுஜ! 96

* * * கீழ்ச்லோகத்தில், நரஹரியாய்த் தூணில் நின்று தோன்றினபோது உண்டான ஸம்பவம் சொல்லிற்று. இதில் இரணியனுடலைப் பிளந்தபோது உண்டான ஸம்பவம் சொல்லுகிறது.

ஹேஸுந்தரபுஜ! த்வயி நரஹரௌ ஸுராரிபோः வக்ஷः விபிந்தாநே ஸதி—வாரீர் சுந்தரத் தோளுடைய அழகரே! தேவரீர் நரஸிம்ஹ மூர்த்தியாகி ஹிரண்யாஸுரனுடைய மார்பைத் திருவுகிரால் கீண்டருளினவளவில்.

பாதாலம் அராலம்—பாதாளலோகமானது தலைதடுமாறுயிற்று.

த்ரிதச நிலயः ப்ராபிதலயः—தேவர்களின் குடியிருப்பான ஸ்வர்க்கலோகமும் லயமடைந்ததாயிற்று. சுவர்க்க மிருக்குமிடமே தெரியவில்லை யென்றபடி.

தரித்ரீ நிர்த்தூதா—பூமியானது மிகவும் கம்பமடைந்தது.

திசः அபி காமபி திசம் யயுः—திக்குக்களும் ஏதோவொரு திக்கை யடைந்தன—திசைகளும் மறைந்தன வென்றபடி.

அம்போதிః குமுகுமிதி கூர்ணந் அஜ்ரும்பிஷ்ட—கடலும் குமுகுமு வென்கிறவோசை யோடே சுழன்று கொந்தளித்தது. ஆக இவ்வளவு பயங்கரமான நிலைமையாயிற் றென்கை. ... ... ... 96

नखक्रकचकप्रथिक्रथितदैत्यवक्षःस्थलीसमुत्थरुधिरच्छटाच्छुरितबिम्बितं स्वं वपुः ।

विलोक्य रुषितः पुनः प्रतिमृगेन्द्रशङ्कावशाच्च एष नरकेसरी स इह दृश्यते सुन्दरः ॥९७॥

நகக்ரகசகப்ரதிக்ரதிததைத்ய வக்ஷஸ்ஸ்தலீ—
ஸமுத்தருதிரச்சடாச்சுரிதபிம்பிதம் ஸ்வம் வபுః,
விலோக்ய ருஷிதః புநः ப்ரதிம்ருகேந்த்ர சங்காவசாத்
ய ஏஷ நரகேஸரீ ஸ இஹ த்ருச்யதே ஸுந்தரః. 97

* * * நரஸிம்ஹாவதார காலத்தில் இரணியன் பரமபக்தமணியான ப்ரஹ்லாதாழ்வானுக்குப் பலவகையான த்ரோஹங்களைச் செய்தானென்று உண்டான சீற்றம் படுத்தினபாடு கீழிரண்டு ச்லோகங்களில், அருளிச் செய்யப்பட்டது. மற்றொரு சீற்றமுமுண்டாயிற்றென்கிறார் இந்த ச்லோகத்தில். பேயாழ்வார் * பார்த்தகடுவன் சுனை நீர் நிழல் கண்டு, பேர்த்தோர் கடுவனெனப் பேர்ந்து * என்றருளிச்செய்த கணக்கிலே. ம்ருகங்கள் நீரிலே ப்ரதிபிம்பங் கண்டு சீறுவதென்று ஒன்றுண்டு; அதுதன்னைச் சொல்லுகிறார்.

யః நரகேஸரீ—யாவரொரு அழகிய சிங்கர்.

நக க்ரகசகப்ரதிக்ரதித தைத்யவக்ஷஸ்ஸ்தலீஸமுத்த ருதிரச்சடாச்சுரிதபிம்பிதம் ஸ்வம் வபுః விலோக்ய—திருநகங்களாகிற ரம்பங்களின் நுதியாலே பிளக்கப்பட்ட இரணியனது மார்வகலத்தில் நின்றும் கிளர்ந்த உதிர வெள்ளத்திலே தோன்றின ப்ரதிபிம்ப ரூபமான தம்முடைய திருமேனியைத் தாமே பார்த்து.

ப்ரதி ம்ருகேந்த்ரசங்காவசாத் புநః ருஷிதः—தமக்கு எதிராகத் தோன்றிய மற்றொரு சிங்கமோவிது! என்கிற சங்கையினால் முன்னிலு மதிகமாகச் சீற்ற முற்றனரோ;

ஏஷః இஹ ஸுந்தரः த்ருச்யதே—அவர்தாமே இத்திருமலையிலே அழகராக ஸேவை ஸாதிக்கின்றாரென்று தர்மியின் ஐக்யம் அநுஸந்திக்கப் பட்டதாயிற்று. ஸ்வப்ரதிபிம்பத்தைக் கண்டு சீற்றமுற்றதாகச் சொன்னவிதனால் ஸிம்ஹ ஜாதியின் மெய்ப்பாடு சொல்லிற்றாயிற்று. ... ... 97

क्षितिरियं जनिसंहृतिपालनैः निगिरणोद्गिरणोद्धरणैरपि ।

वनगिरीश ! तवैव सती कथं वरद ! वामन ! भिक्षणमर्हति ॥९८॥

க்ஷிதிரியம் ஜநிஸம்ஹ்ருதிபாலநைః நிகிரணோத்கிரணோத்தரணைரபி,
வநகிரீச! தவைவ ஸதீ கதம் வரத! வாமந! பிக்ஷணமர்ஹதி. 98

* * * வாமனாவதாரத்திலீடுபட்டுப் பேசுகிற ச்லோகமிது. நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் எம்பெருமானை மடிபிடித்து ஒரு கேள்விகேட்டார்—*சீரால் பிறந்து சிறப்பால் வளராது, பேர் வாமனாகாக்கால் பேராளா!—மார்பாரப் புல்கி நீ யுண்டுமிழ்ந்த பூமி நீரேற் பரிதே, சொல்லு நீ யாமறியச் சூழ்ந்து * என்றார்; அப்பாசுரத்தைத் தழுவியே இந்த ச்லோகமவதரிக்கின்றது.

வநகிரீச வரத வாமந இயம் க்ஷிதிః ஜநிஸம்ஹ்ருதிபாலநைః நிகிரண உத்கிரண உத்தரணைரபி தவைவ ஸதீ கதம் பிக்ஷணமர்ஹதி?—திருமாலிருஞ் சோலைக்குத் தலைவனான வரந்தரும் வாமன மூர்த்தியே! இப் பூமண்டலம் முழுவதும் படைத்தல் துடைத்தல் காத்தல்

உண்டு உமிழ்தல் இடந்தெடுத்தல் முதலான செயல்களினால் ஸர்வாத்மநா உனக்கே யன்றோ வச்யமாயிரா நின்றது; இதனை ஒரு பையல் பக்கல் பிக்ஷுவாய்ச் சென்று யாசித்துப் பெற்றதென்கொல்? என்று கேட்கிறார். சதுர்முகமுகேந ஸ்ருஷ்டித்தும் ஸ்வேந ரூபேண ரக்ஷித்தும் போருகிற ப்ரகாரங்களாலே உனக்கே ஸ்வமான இந்த த்ரைலோக்யத்தை ஒரு பையல் தன்னதாக அபிமாநித்திருந்தானாகில் அவனை நேர் கொடு நேரே தண்டித்து வாங்கலாமாயிருக்க அது செய்யாதே யாசகனாய்ச் சென்று பல் பன்னிரண்டுங் காட்டி இரந்துதானோ பெறவேணும்? பெறுதற்கு வேறு உபாய மறிந்திலையோ? என்று கேள்வியை விரித்துக்கொள்க. வரத! என்கிற ஸம்போதநம் ஸாபிப்ராயம்; வரந்தரும் பெருமாளென்று விருது வஹித்து அலம்புரிந்த நெடுந் தடக்கையனாயிருந்து வைத்து பிக்ஷுகனாகலாமோ வென்றவாறு. மஹாபலியான வன் ஔதார்ய மென்றொரு தர்மாபாஸத்தை ஏன்றுகொண்டிருந்தானாகையாலே அதற்குத் தக்கவாறு யாசக வேஷங்கொண்டு சென்று காரியம் பார்த்தது ஸதுபாயத் ருத்வத்தில் சேர்ந்ததென்று ஸமாதானம் கண்டுகொள்வது. இது, ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் * தைத்யௌதார்யேந்த்ர யாச்ஞாவிஹதிமபநயந் * என்கிற ச்லோகத் தில் காணத்தக்கது.

முதல் பாதத்தில், ஜந்மவாசகமான ஜநிசப்தம் உபசாராத் ஸ்ருஷ்டிக்கு வாசக மாகக் கொள்ளக்கடவது.

... ... 98

भार्गवः किल भवन् भवान्पुरा कुन्दसुन्दरवनाचलेश्वर !।
अर्जुनस्य बलदर्पितस्य तु च्छेत्स्यति स्मरति बाहुकाननम् ॥९९॥

பார்க்கவ: கில பவந் பவாந் புரா குந்தஸுந்தரவநாசலேச்வர,
அர்ஜுநஸ்ய பலதர்ப்பிதஸ்ய து ச்சேத்ஸ்யதி ஸ்மரதி பாஹுகாநநம்.

* * * இந்த ச்லோகத்தினால் பரசுராமாவதாரத்தை யநுபவிக்கிறார். ஸ்ரீமஹா விஷ்ணு பரசுராமனாய்த் திருவவதரித்து உலகில் க்ஷத்ரியப் பூண்டே இல்லையாம்படி செய்த செயல் அறியத்தக்கது. உலகத்தில் எவரும் அழிப்பவரில்லாமையால் கொழுத்துத் திரிந்து கொடுமை யியற்றிவந்த க்ஷத்ரியர்களின் குலத்தை நாசஞ் செய்வதற்காக ஜமதக்நி முனிவருடைய மனைவியான ரேணுகையிடம் இராமனாய்த் திருவவதரித்து, பரசு என்னுங் கோடாலிப்படையை ஆயுதமாகக் கொண்டு அதனால் பரசுராமனென்ன வழங்கப்பட்டுவந்தான். ஒருநாள் கார்த்தவீர்யார்ஜுநனும் அவனது குமாரர்களும் ஜமதக்நியின் ஆச்ரமத்தில் இளைப்பாறப் புகுந்த காலத்து அங்கே அம் முனிவனுடைய ஹோமதேநுவானது வேண்டின வஸ்துக்களை யெல்லாம் யதேஷ்டமாக அளித்துக் கொண்டிருப்பதைக் கண்ட இவர்கள் அப் பசுவைக் கொள்ளைகொள்ள விரும்பி அதனைக் கவர்ந்து அம்முனிவனையுங் கொன்றிட்டது காரணமாக (பரசுராமன்) அக் கார்த்தவீர் யார்ஜுனனையும் அவனது குமாரர்களையுங் கொன்று, அதனாலேயே க்ஷத்ரிய வம்சம் முழுவதன் மேலேயும் கோபாவேசங் கொண்டு உலகத்திலுள்ள அரசர்கள் பலரையும் இருபத்தொரு தலைமுறை பொருது அழித்திட்டான் என்பது இதிஹாஸம். * தெழித் திட்டெழுந்தே யெதிர்நின்ற மன்னன் சினத் தோளவையாயிரமும் மழுவால் அழித் திட்டவன் * என்றும் * அடல்புரை யெழில் திகழ் திரடோள் ஆயிரந் துணிய அடல் மழுப்பற்றி மற்றவனகல் விசும்பணைய * என்றும் திருமங்கையாழ்வாரருளிச் செய்த பாசுரங்களை யடியொற்றி இந்த ச்லோகமருளிச்செய்கிறபடி. முமுக்ஷுக்களுக்குப் பரசு ராமாவதாரம் உபாஸனைக்கு உரியதன்றாகிலும் விரோதிகளைக் களைந்தொழித்தஉபகாரத் துக்குத் தோற்றுத் துதிப்பது மாத்திரமுண்டு. இராமானுச நூற்றந்தாதியில் * கோக் குல மன்னரை மூவெழுகால் ஒரு கூர்மழுவால் போக்கிய தேவனைப் போற்றும் புனிதன் ... இராமானுசன் * என்றதும் காண்க.

பரசுராமன் ப்ருகு குலத்தில் தோன்றினபடியால் (பார்க்கவ:) என்றது. ஸ்ரீரங்க ராஜஸ்தவத்தில் * भवान् रामो भूत्वा परशु परिकर्मा भृगुकुलादलावीद्भूपालान् * என்று பட்டரு மருளிச்செய்தார். ஹே குந்தஸுந்தரவநாசலேச்வர !—குருந்த மரங்களாலழகிய திருமாலிருஞ்சோலைமலைக்குத் தலைவரே !

புராகில பவாந் பார்க்கவ: பவந்—பண்டு தேவரீர் பரசுராமனாகத் திருவவதரித்து,

பலதர்ப்பிதஸ்ய அர்ஜுநஸ்ய—வலிமைச்செருக்குள்ளவனான கார்த்தவீர்யார்ஜுநனுடைய.

பாஹுகாநநம் சேத்ஸ்யதி ஸ்மரதி—புஜவனத்தை அறுத்தொழித்தீர். * अभिज्ञावचने लृट् * என்கிற அநுசாஸநத்தினால் ஸ்மரதிபதஸமபிவ்யாஹாரத்தில் இறந்தகாலப் பொருளில் எதிர்காலப் பொருளதான லகாரத்திற்கு ப்ரயோகமாயிற்று. (ஸ்மரதி) என்கிற க்ரியைக்குத் தனியே ஒரு பொருள் கிடையாது. அது தன் முன்னேயிருக்கிற எதிர்காலப் பொருளதான க்ரியா பதத்திற்கு இறந்தகாலப் பொருளை நிர்வஹித்து நிற்குமத்தனை. ... ... 99

आज्ञा तवात्रभवती विदिता त्रयी सा धर्मं तदुक्तमखिलेन वनाद्रिनाथ ! ।
अन्यूनमाचरितुमास्तिकशिक्षणार्थमत्रावतीर्य किल सुन्दर ! राघवोऽभूः ॥१००॥

ஆஜ்ஞா தவாத்ரபவதீ விதிதா த்ரயீ ஸா
தர்மம் தது்க்தமகிலேந வநாத்ரி நாத !
அந்யூநமாசரிது மாஸ்திக சிக்ஷணார்த்தம்
அத்ராவதீர்ய கில ஸுந்தர ! ராகவோ ऽபூ: . 100

* * * இது முதல் * ரகுகுல திலகஸ் த்வம் * என்னும் ச்லோகமளவாக ஏழு ச்லோகங்களாலே ஸ்ரீராமாவதாரத்தை யநுபவித்தருளிச் செய்கிறார். பண்டு ராமனாகத் திருவவதரித்தவரும் இப்போது அழகராக ஸேவை ஸாதிப்பவரும் ஒருவரே யென்பது தோற்ற 'வநாத்ரிநாத ஹே ஸுந்தர த்வம் ராகவ: அபூ:' என்றருளிச் செய்கிறார். வேதோக்தங்களான தர்மங்களை யெல்லாம் குறையற அநுஷ்டிப்பதற்காகவே நீர் சக்ரவர்த்தி திருமகனாராகத் திருவவதரித் தருளினீரென்கிறார்.

அத்ரபவதீ ஸா த்ரயீ தவ ஆஜ்ஞா விதிதா—பரமபூஜ்யமானவேதமானது * ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா * என்கிறபடியே தேவரீருடைய திவ்யாஜ்ஞையாக ப்ரஸித்தமானது.

தது்க்தம் தர்மம் ஆஸ்திகசிக்ஷணார்த்தம் அகிலேந அந்யூநம் ஆசரிதும்—*வேதோகிலோ தர்ம மூலம் * என்கிறபடியே அந்த வேதமானது ஸகலவித தர்மங்களுக்கும் மூலமாயிருக்குமாகையாலே அதிற் சொல்லப்பட்ட ஸகலவித தருமங்களையும் ஆஸ்திக சிக்ஷார்த்தமாகத் தாம் குறையற அநுஷ்டிப்பதற்காக.

அத்ர அவதீர்ய ராகவ: அபூ:—இந் நிலத்திலே திருவவதரித்து ஸ்ரீமத் ரகு குல திலகராக ஆனீர். ஸ்ரீராமனாகத் திருவவதரித்தீரென்றபடி. பகவத் கீதையிலே பகவானுடைய திருவவதாரத்திற்கு ப்ரயோஜநம் ஸாதுபரித்ராணம் துஷ்க்ருத் விநாசநம் தர்ம ஸம்ஸ்தாபநம் என்று மூன்றாகச் சொல்லிற்று. அதில் தர்மஸ்தாபனம் இங்கு முக்கியமாகக் கொள்ளப்பட்டது. * ராமோ விக்ரஹவாந் தர்ம: * என்னக் கடவதிறே. பித்ரு வாக்ய பரிபாலனம் சரணாகத பரித்ராணம் முதலான ஸாமாந்ய தர்மங்களையும் விசேஷ தர்மங்களையும் தான் அநுஷ்டித்துக்காட்டி ஆஸ்திகர்களையும் அநுஷ்டிப்பிக்கவே ராமாவதாரமென்றதாயிற்று. "ஆஸ்திக சிக்ஷணார்த்தம்" என்ற விடத்தில் "சிஷ்யனாய் நின்றது சிஷ்யனிருக்குமிருப்பு நாட்டாரறியாமையாலே அத்தை யறிவிக்கைக்காக" என்ற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தி ஒரு புடை நினைக்கத் தக்கது. 100

वनगिरिपतिरीशितेति देवैः त्रिपुरहरत्रिपुरघ्नचापभङ्गात् ।
व्यगणि परशुरामदर्शितस्य स्वकधनुषः परिमर्शदर्शनाच ॥१०१॥

வநகிரி பதிரீசிதேதி தேவைః த்ரிபுரஹர த்ரிபுரக்ந சாபபங்காத்,
வ்யகணி பரசுராமதர்சிதஸ்ய ஸ்வகதநுஷః பரிமர்சதர்சநாச்ச. 101

* * * ஸ்ரீராமாவதாரத்தில் * ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம் * என்று பரத்வத்தை மறைத்து மனிச்சை ஏறிட்டுக் கொண்டாலும் இரண்டு செய்கைகளினால் தன்னுடைய பரத்வத்தை தேவர்கள் தெரிந்து கொள்ளும்படியாயிற்றென்கிறாரிதில்.

த்ரிபுரஹரத்ரிபுரக்ந சாப பங்காத்—திரிபுர மூன்றெரித்த சிவபெருமான் அந்த த்ரிபுரஸம்ஹாரம் பண்ணும்போது கொண்ட வில்லானது சிறிது முறிபட்டது; அதனைச் சிவபிரான் ஜநக குலத்துத் தேவராதனென்னும் அரசனிடம் கொடுத்திட, அது வம்ச பரம்பரையாய் ஜநக மஹாராஜனளவும் வந்தது; அதனை ஸீதைக்குக் கந்யா சுல்கமாக ஜநகன் வைத்திருந்தான்; இராமன் அந்த வில்லை முறித்துத் தன் பேராற்றலை விளங்கச் செய்ததனாலும்.

பரசுராம தர்சிதஸ்ய ஸ்வகதநுஷః பரிமர்சதர்சநாச்ச—ஆதி காலத்தில் தேவ சில்பியான விச்வகர்மாவினால் இரண்டு சிறந்த விற்கள் நிருமிக்கப்பட்டன; அவற்றுள் ஒன்று சிவபிரான் கொண்டது. அதைப்பற்றிக் கீழே சொல்லியாயிற்று, மற்றொரு வில்லை ஸ்ரீ மஹாவிஷ்ணு எடுத்துக்கொண்டு ரிசீக முனிவனிடம் கொடுத்துச் செல்ல, அது அவன் குமாரனான ஜமதக்நி யினிடத்தும் அவன் குமாரனான பரசுராமனிடத்தும் பரம்பரையாய் வந்தது; இராமபிரான் பிராட்டியை மணந்து கொண்டு மிதிலாபுரியினின்றும் புறப்பட்டு அயோத்திக் கெழுந்தருளும்போது வழியிடையே * என் வில்வலி கண்டு போவென்று செருக்கிவந்த பரசுராமனது கையில்நின்றும் அவ் வில்லை வாங்கி எளிதில் வளைத்து நாணேற்றிக் கணைதொடுத்து 'இவ்வம்புக்கு இலக்கு என்?' என்று வினவ, பரசுராமன் அதற்கு இலக்காகத் தனது தபோபலம் முழுவதையும் கொடுக்க, அவன் க்ஷத்திரிய வம்சத்தைக் கருவறுத்தவனா யிருந்தாலும் வேதவித்தும் தவவிரதம் பூண்டவனுமா யிருத்தல்பற்றி அவனைக் கொல்லாமல் அவனது தவத்தைக் கவர்ந்த மாத்திரத்தோடு ஸ்ரீராமன் விட்டருளினன் என்பது வரலாறு. பரசுராமன் காட்டின வில் விஷ்ணு தநுஸ்ஸாகையாலே (ஸ்வகதநுஷః) என்றருளிச் செய்தார். ஆக, த்ரிபுரஹரத்ரிபுரக்ந சாப பங்கத்தாலும் பரசுராம தர்சித ஸ்வகீய தநுః பரிமர்ச தர்சநத்தாலும் தேவர்களால் எந்த ஸ்ரீராமன் பரமேச்வரனென்று அறுதியிடப்பட்டானோ அப்பெருமானே திருமாலிருஞ்சோலை யழகராக விளங்காநின்றானென்றதாயிற்று. ... ... 101

अनवाप्तमत्र किल लिप्स्यते जनैः न च लब्धमेतदिह भोक्तुमिष्यते ।
अनवाप्तमत्र किल नास्ति राम ! तज्जगती त्वया तृणमवैक्षि सुन्दर ! ॥१०२॥

அநவாப்தமத்ர கில லிப்ஸ்யதே ஜநைః
நச லப்தமேததிஹ போக்து மிஷ்யதே,
அநவாப்தமத்ர கில நாஸ்தி ராம! தத்
ஜகதீ த்வயா த்ருணமவைக்ஷி ஸுந்தர! 102

* * * சக்ரவர்த்தி திருமகன் கூனி சொற்கேட்ட கொடியவள்தன் சொற்கொண்டு * குவலயத் துங்கக்கரியும் பரியுமிராச்சியமு மெல்லாம் துறந்து கானகமே

மிக விரும்பிப் போனது அவாப்த ஸமஸ்தகாமனான தான் ஜகத்தையெல்லாம் த்ருண மாக நினைத்ததனாலே யென்கிறாரிதில்.

ராம ஸுந்தர !—பண்டு ஸ்ரீராமனாகத் திருவவதரித்த அழகரே !

ஜநை: அத்ர அநவாப்தம் கில லிப்ஸ்யதே—இவ்வுலகில் மனிசரெல்லாம் தங்களுக்குக் கிடைக்காத பொருள்களையே பெற விரும்புவது இயல்பு.

நச லப்தம் ஏதத் இஹ போக்துமிஷ்யதே—அநுபவிக்கப் பாங்காகக் கிடைத்த வஸ்துவானது விரும்பப்படுகிறதில்லை ; ஸித்தமானதில் விருப்பமுண்டாக ப்ரஸக்தி யில்லாமையாலே. ஆக, கிடைக்காத வஸ்துவில் ஆசையும், கிடைத்து முடிந்த வஸ்துவில் ஆசை யில்லாமையும் உலக வியல்பு என்றதாயிற்று. இனி எம்பெருமான்படி சொல்லுகிறது ;

அநவாப்த மத்ர கில நாஸ்தி—அவாப்த ஸமஸ்த காமரென்று புகழ்பெற்ற தேவரீருக்கு அநவாப்தமான தொன்றில்லையிறே ; தத்—ஆகையினாலே.

த்வயா ஜகதீ த்ருணம் அவைக்ஷி—* பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதும் சோராமே ஆள்கின்ற வெம்பெருமானாய் உபய விபூதிநாதரான தேவரீராலே இக்ஷ்வாகு ராஜ்யமானது மிக அற்பமாகக் காணப்பட்டது. ஆனதுபற்றியே நாடு துறந்து காடு சென்றீரென்கை. ... ... 102

शिखरिषु विपिनेष्वप्यापगास्वच्छतोयास्वनुभवसि रसज्ञो दण्डकारण्यवासान् ।

तदिह तदनुभूतौ साभिलाषोऽद्य राम ! श्रयसि वनगिरीन्द्रं सुन्दरीभूय भूयः ॥१०३॥

சிகரிஷு விபிநேஷ்வப்யாபகா ஸ்வச்சதோயாஸு
அநுபவஸி ரஸஜ்ஞோ தண்டகாரண்ய வாஸாந்,
ததிஹ ததநுபூதௌ ஸாபிலாஷோத்ய ராம !
ச்ரயஸி வநகிரீந்த்ரம் ஸுந்தரீபூய பூய:. 103

* * * ஸ்ரீராமாவதாரத்தில் சித்ரகூடம் முதலிய மலைகளிலும் தண்டகாரணியம் முதலிய காடுகளிலும் கங்கை கோதாவரி முதலிய நதிகளிலும் விலக்ஷணமான ஆனந்தத்தை அநுபவித்தபடியாலே மீண்டும் அவ்வானந்தத்தை யநுபவிக்க வேண்டியே அழகராகித் திருமாலிருஞ்சோலைமலையிலே யெழுந்தருளியிருக்கிறீர்போலு மென்கிறாரிதில். சித்ரகூடாதி பர்வதஸ்தாநத்திலே இத்திருமலையும், தண்டகாதி அரண்யஸ்தானத்திலே இங்குள்ள வநராஜிகளும் கங்காதிநதிஸ்தானத்திலே நூபுரகங்காதிகளும் கொள்ளக்கடவன.

ஹே ராம ! ரஸஜ்ஞ: த்வம்—சக்ரவர்த்தி திருமகனாரே ! ரஸிகரான தேவரீர் ;

சிகரிஷு—சித்ரகூடாதி பர்வதராஜங்களிலும்.

விபிநேஷு—* தே வநேந வநம் கத்வா * என்னும்படியான வனங்களிலும்.

அச்ச தோயாஸு ஆபகாஸு—நிர்மலமான தீர்த்தத்தை யுடைய மந்தாகிந்யாதி நதிகளிலும்.

தண்டகாரண்ய வாஸாந் அநுபவஸி—* சித்ரகூட மநுப்ராப்ய பரத்வாஜஸ்ய சாஸநாத், ரம்யமாவஸதம் க்ருத்வா ரமமாணா வநே த்ரய:. தேவகந்தர்வஸங்காசாஸ் தத்ர தே ந்யவஸந் ஸுகம் * இத்யாதிப்படியே அரண்யவாஸ ஸுகத்தை யநுபவித்தீர். பூதகாலப்ரயோகம் பண்ணவேண்டுமிடத்து (அநுபவஸி) என்று வர்த்தமாநப்ரயோகம் பண்ணினது, * चिरनिर्वृत्तमप्येतम् प्रत्यक्षमिव दर्शितम् *என்ற ஸமாதியாலே யென்னலாம்.

தத்—இங்ஙனே திருவுள்ளத்திற்குப் பாங்காக அநுபவித்த ராஸிக்யாதிசயத்தாலே.

இஹ பூய: தததநுபூதௌ ஸாபிலாஷஸ்ஸந்—மீண்டும் அவ்வநுபவங்களைச் செய்து போரத் திருவுள்ளம் பற்றினவராய்க்கொண்டு.

ஸுந்தரீபூய வநகிரீந்த்ரம் ச்ரயஸி — அழகராகத் திருவவதரித்துத் திருமாலிருஞ்சோலை மலையை உறைவிடமாகக் கொண்டருளிற்று. ... ... 103

उपवनतरुषण्डैर्मण्डिते गण्डशैलप्रणयिभवदुदन्तोद्गायिगन्धर्वसिद्धे ।

वनगिरितटभूमिप्रस्तरे सुन्दर ! त्वं भजसि नु मृगयानानुद्रवश्रान्तिशान्तिम् ॥१०४॥

உபவநதருஷண்டைர்மண்டிதே கண்டசைல
ப்ரணயிபவதுதந்தோத்காயி கந்தர்வஸித்தே,
வநகிரிதடபூமிப்ரஸ்தரே ஸுந்தர! த்வம்
பஜஸி நு ம்ருகயாநாநுத்ரவச்ராந்தி சாந்திம். 104

* * *—கீழ்ச்லோகத்தி லருளிச்செய்த அர்த்தத்தைச் சிறிது பரிஷ்கரிக்கிறதாயிற்று இந்த ச்லோகம். தண்டகாரண்யவாஸத்தில் ச்ரமங்கள் நேர்ந்தன; அந்த ச்ரமங்கள் ஆறுதற்கு இத்திருமலையில் வாஸத்தை உகந்தீர்போலு மென்கிறார்.

ஹேஸுந்தர!—வாரீர் அழகரே!; த்வம்—தேவரீர்.

ம்ருகயாநாநுத்ரவ ச்ராந்திசாந்திம் வநகிரிதடபூமிப்ரஸ்தரே பஜஸி நு—பண்டு பஞ்சவடியில் மாரீச மாயாம்ருகத்தின் பின்னே தொடர்ந்து சென்றதனாலுண்டான ச்ரமத்தின் பரிஹாரத்தைத் திருமாலிருஞ்சோலைத் தாழ்வரையிலே அடைகின்றீர்போலும். அந்தத் தாழ்வரை எங்ஙனேயிராநின்றதென்ன, இரண்டு விசேஷணங்களினால் அதனைச் சிறப்பிக்கின்றார்.

உபவநதருஷண்டைர் மண்டிதே—* ஆயிரமாறுகளும் சுனைகள் பலவாயிரமும் ஆயிரம் பூம்பொழிலு முடை மாலிருஞ்சோலையதே * என்கிறபடியே பூஞ்சோலைகள் நிரம்பப் பெற்றது.

கண்ட சைலப்ரணயி - பவதுதந்தோத் காயி கந்தர்வஸித்தே—கந்தர்வர்களும் ஸித்தர்களும் பாறைகளின் மீது வீற்றிருந்து எம்பெருமானுடைய திவ்யசரிதைகளை உரக்கப்பாடுகின்றார்களாயிற்று. ஆக இப்பெருமைவாய்ந்த திருமலைத்தாழ்வரையிலே பண்டு வனவாஸத்திலுண்டான விடாய் தீரப்பெறுகிறீர்போலு மென்றாராயிற்று. ... 104

कूलेऽब्धेः किल दक्षिणस्य निवसन्दूरोत्तराम्भोधिगान् दैत्यानेकपतत्रिणाऽच्छिनत इतीयं किंवदन्ती श्रुता ।

तत्रैवेश्वरमम्भसां व्यजयथास्तस्माद्वनाद्रीश्वर ! श्रीमन् ! सुन्दर ! सेतुबन्धनमुखाः क्रीडास्तवाडम्बरम् ॥१०५॥

கூலேப்தே: கில தக்ஷிணஸ்ய நிவஸந் தூரோத்தராம்போதிகாந்
தைத்யாநேகபதத்ரிணாச்சிந இதீயம் கிம்வதந்தீ ச்ருதா,
தத்ரைவேச்வரமம்பஸாம் வ்யஜயதாஸ் தஸ்மாத் வநாத்ரீச்வர
ஸ்ரீமந் ஸுந்தர ஸேதுபந்தநமுகா: க்ரீடாஸ் தவாடம்பரம். 105

* * * பெருமாள் * ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்துமர்ஹதி * என்ற விபீஷண வசனத்தில் விச்வாஸததாலே கடலரசனை நோக்கிச் சரணாகதி பண்ணின வளவிலும் அவன்வந்து முகங்காட்டாதொழிந்தவாறே சிறிச்சிவந்த கண்ணினராய் இளைய பெருமாளை நோக்கி வில்லைக்கொண்டுவரச்சொல்லி அம்பு தொடுத்தவாறே ஸமுத்ரராஜன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து அநுகூலித்தபின்பு பெருமாள் அவனை நோக்கித்தொடுத்த

பாணம் பழுதுபடக் கூடாமையாலே இதை எங்கேனு மோரிடத்தே ப்ரயோகித்துத் தீர வேண்டு மென்று 'எங்கே எய்வது? சொல்லாய் வருணனே' என்ன; அவனும், வட புறத்திலே த்ருமகுல்ய மென்கிற வொரு தீவிலே தனக்குப் பலபல சத்ருக்களிருப்ப தாகச்சொல்லி அவர்கள்மேலே ப்ரயோகிக்கும்படி ப்ரார்த்திக்க, பெருமாளும் அப்படியே செய்தருளி அவர்களை யெல்லாம் ஒரு நொடிப்பொழுதில கொன்றொழித்தாரென்று ஸ்ரீராமாயணத்தில் யுத்தகாண்டத்தில இருபத்திரண்டாம் ஸர்க்கத்தில் இதிஹாஸ முள்ளது. இது கடலின் வடபுறத்தில் நடந்த காரியம். தென்புறத்தில் நின்றவிடத் திலேயே ஸமுத்ர ராஜனை வென்றி கொண்டது முள்ளது. இவற்றால் பெருமாளுடைய ஸத்யகாமத்வ ஸத்யஸங்கல்பத்வங்கள் வெளியாகின்றன. இப்படிப்பட்ட பெருமை யிருக்கும்போது நின்றவிடத்தே நின்று இராவணன் தலைகளை யறுத்து இலங்கையை நீறுக்க முடியாமையில்லை. இதற்காக ஒரு ப்ரயாஸமும் அநுபவிக்க ஆவச்யகதை யில்லை. அப்படியிருந்தும் கடலில் அணை கட்டிக்கொண்டு இலங்கைசென்றது, அங்கே பல பரிச்ரமங்கள் பட்டது, அகஸ்த்ய மஹர்ஷியால் ஆதித்யஹ்ருதயம் உபதேசிக்கப் பெற்று ராவணவதம் செய்தது ஆகிய இவையெல்லாம் எதற்கு? என்று ஒரு கேள்வி யுண்டாகும். கீழே அதிமாநுஷஸ்தவத்தில் * த்வம் தக்ஷிணஸ்ய நிவஸந் * (25) என்கிற ச்லோகத்தில் அக் கேள்வியைக் கேட்டு விட்டார்; இந்தச்லோகத்தில் அதற்குத் தாமே ஒருவாறு ஸமாதானமு மருளிச்செய்கிறார். என்ன ஸமாதானமென்னில் ஸேதுபந்தமுகாஃ க்ரீடாஸ் தவாடம்பரம் என்பதேயாமது.

ஹேவநாத்ரீச்வர! ஸ்ரீமந் ஸுந்தர!—திருமாலிருஞ்சோலைமலைக்குத் தலைவரான அழகரே!;

தக்ஷிணஸ்ய அப்தேஃ கூலே நிவஸந் த்வம்—தென்கடற்கரையிலே எழுந்தருளியிருந்த தேவரீர்;

தூரோத்தராம்போதிகாந் தைத்யாந்—மிகவும் தூரஸ்தமான வடபுறக் கடலில் வாழ்ந்த (ஸமுத்ரராஜ சத்ருக்களான) தைத்யர்களை.

ஏகபதத்ரிணா அச்சிநஃ இதி இயம் கிம்வதந்தீ ச்ருதா—ஓரேயம்பினால் தொலைத்தருளிற் றென்று கேள்விப்பட்டிருந்தோம். அதுவன்றியும்,

தத்ரைவ—தென் கடற்கரையிலேயே.

அம்பஸாம் ஈச்வரம் வ்யஜயதாஃ—ஸமுத்ர ராஜனை வெற்றிகொண்டீர்.

தஸ்மாத்—மநுஷ்யத்வேபி பரத்வம் பொலியநிற்கும் பெருமை குறையற்றிருக்கையாலே யென்றபடி. அங்கிருந்தபடியே அவ்வொரு பாணத்தையே லங்கைக்கும் போக விட்டு ராவணன் தலையை அறுக்கலாமாயிருக்க, அப்படிச் செய்யாதே.

ஸேதுபந்த முகாஃ தவ க்ரீடாஃ—* குரக்கினத்தாலே குரைகடல் தன்னை நெருக்கியணை கட்டினது முதலான லீலைகளை தேவரீர் செய்தருளினதானது,

ஆடம்பரம்—இராவணனைத் தொலைத்தே விடவேணுமென்கிற திருவுள்ளம் இருந்திருக் குமாகில் அங்ஙனே செய்திருக்கலாம். * யதி வா ராவணஸ் ஸ்வயம் * என்றவர்க்கு அங்ஙனே திருவுள்ளமிருக்க நியாயமில்லையே. எப்படியாவது அவனையும் அபிமுக னாக்கிக் கொள்ளவேணுமென்றே திருவுள்ள மிருந்ததனால் அதற்கு அவகாசமளிக் கிற ரீதியிலே ஆடம்பரமாகச் செய்த வித்தனை யென்கை.

ஆடம்பர சப்தம் பும்லிங்கமே யாதலால் "க்ரீடாஸ் தவாடம்பரஃ" என்றே பாடம் யுக்தம். ஆயினும் ஆடம்பர மென்கிற க்லீப பாடமே காண்கிறது. 105

रघुकुलतिलक ! त्वं जातुचिद्यातुधानच्छलमृगमृगयायां संप्रसक्तः पुराऽभूः ।

तदुपजनितखेदच्छेदनायाद्य गायन्मधुकरतरुषण्डे रज्यसे किं वनाद्रिम् ॥१०६॥

ரகுகுலதிலக ! த்வம் ஜாதுசித் யாதுதாந
ச்சலம்ருக ம்ருகயாயாம் ஸம்ப்ரஸக்தஃ புராபூஃ,
ததுபஜநித கேதச்சேதநாயாத்ய காயந்—
மதுகரதரு ஷண்டம் ரஜ்யஸே கிம் வநாத்ரிம் ? 106

* * * இந்த ச்லோகத்தோடு ஸ்ரீராமாவதாராநுபவத்தைத் தலைக்கட்டி யருளுகிறார். கீழே * உபவந தருஷண்டைஃ (104) என்கிற ச்லோகத்தில் மாரீசமாயாம்ருகத்தின் பின்னே சென்ற விடாய் தீரவோ இத்திருமலையில் வாழ்வதென்றூரிறே; அவ்வொரு விடாய்தானோ ? ராக்ஷஸ வேட்டையாடின பெருவிடாய் கனத்திருக்குமே; அது தீரவோ இத் திருமலையில் வாழ்வதென்று கேட்கிறாராயிற்று.

ஹே ரகு குல திலக !—பண்டு ராமாவதாரம் செய்தருளின அழகரே !

புரா ஜாதுசித் த்வம் யாதுதாநச்சலம்ருகம்ருகயாயாம் ஸம்ப்ரஸக்தஃ அபூஃ—முன்னொருகால் தேவரீர் ராவணாதி ராக்ஷஸர்களாகிற மிருகங்களிடையே வேட்டையாடுவதில் வியாபரித்தீர் ;

ததுபஜநித கேதச் சேதநாய—அந்த வேட்டையினாலுண்டான ச்ரமந் தீர.

காயந்மதுகர தருஷண்டம் வநாத்ரிம் அத்ய ரஜ்யஸே கிம்— * பாண்டகு வண்டினங்கள் பண்கள் பாடி மதுப் பருக * என்று பெரியாழ்வாருளிச் செய்தபடியே வண்டினமுரலுஞ்சோலைகளையுடைய இத் திருமலையிலே இப்போது உகந்து வர்த்திக்கிறீர் போலும்.

“ யாதுதாநச்சலம்ருக ” என்றதற்கு மாரீச மாயா ம்ருகத்தைப் பொருளாகச் சிலர் சொல்லுவது ஆசிரியர்க்கு விவக்ஷிதமன்று. அது முன்னமே சொல்லியாயிற்று. ஸ்ரீராமாயண கதைகளை ஒருவாறு அடைவே அநுபவித்து வருமிந்த ஸந்தர்ப்பத்திலே கீழ் ச்லோகத்தில் திருவணை கட்டுதல் ப்ரஸ்துதமானபடியாலே அதன் பிறகு லங்கையில் ப்ரவ்ருத்தமான ராக்ஷஸ வேட்டையே இங்கு விவக்ஷிதமாகத் தக்கது. அரசர்கள் மிருகங்களைக் கொல்ல வேட்டையாடுவது போல, பெருமாளும் அரக்கர்களாகிற மிருகங்களை முடித்ததாக அருளிச் செய்தபடி. இதனால் * பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைந்தானை * என்றாப்போலே அநாயஸேந அழித்தமை சொன்னதாயிற்று. 106

हे सुन्दरैकतरजन्मनि कृष्णभावे द्वे मातरौ च पितरौ च कुले अपि द्वे ।
एकक्षणादनुगृहीतवतः फलं ते नीला कुलेन सदृशी किल रुक्मिणी च ॥१०७॥

ஹே ஸுந்தரைகதர ஜந்மநி க்ருஷ்ண பாவே
த்வே மாதரௌ ச பிதரௌ ச குலே அபி த்வே,
ஏகக்ஷணா தநுக்ருஹீதவதஃ பலம் தே
நீலா குலேந ஸத்ருசீ கில ருக்மிணீ ச. 107

* * * கீழ் ஏழு ச்லோகங்களாலே ஸ்ரீராமாவதாரத்தை யநுபவித்தாராய் நின்றார்; இனி இந்த ச்லோகம் தொடங்கி ‘ வாராணஸீதஹநேத்யாதி ச்லோகமளவாகப் பத்து ச்லோகங்களாலே ஸ்ரீக்ருஷ்ணாவதாராநுபவ ப்ரவணராய்ச் செல்லுகிறார். அழகருக்கும் கண்ணனுக்குமுள்ள அபேதத்தைத் திடப்படுத்துகிறபடி. ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தில் ஏக க்ஷணத்திலே மாதாக்களிருவர் பிதாக்களிருவர் குலங்களுமிரண்டு என்னும்படியானது எதற்காகவென்று ஆராயுமிடத்து இரண்டு குலங்களுக்கும் தகுதியாக மனைவியர் இருவரைப் பரிக்ரஹிக்கைக்காகவே போலும் என்று சமத்காரமாக அருளிச் செய்கிறாரிதில்.

ஹே ஸுந்தர !—வாரீர் அழகரே !

ஏகதாஜன்மநி க்ருஷ்ணபாவே—கண்ணனாகத் தோன்றின ஓரவதாரந் தன்னிலே ;

த்வே மாதரௌச த்வெள பிதரௌச த்வே குலே அபிச—தாய்மார் இருவரையும் தந்தையர் இருவரையும் குலங்களிரண்டையும் ; (அதாவது) தேவகீ யசோதைகளென்று தாயார் இருவர் ; வஸுதேவ நந்தகோபர்களென்று தந்தையர் இருவர் ; யதுகுல கோபால குலங்களென்று குலங்களிரண்டு. ஆக எல்லா மிரண்டாக.

ஏகஸ்ஷணாத் அநுக்ருஹ்ணதவத: தே பலம்—* ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவி லொருத்தி மகனாய் * என்னும்படி ஸ்வல்ப காலந்தன்னிலேயே பரிக்ரஹித்தருளின தேவரீருக்கு உத்தேச்யம் யாதெனில ; அதனை உள்ளபடி அறியப்பெற்றோம் கேளீரென்கிறார் ;

குலேந ஸத்ருசீ நீலாச ருக்மிணீச கில—கோபால குலத்திற்குத் தகுதியாக நப்பின்னைப் பிராட்டியையும், க்ஷத்ரிய குலத்திற்குத் தகுதியாக ருக்மிணிப் பிராட்டியையும் பெறுதற்கே யாமத்தனை.

திருமழிசைப் பிரான் திருச்சந்த விருத்தத்திலே * ஆயனாகி ஆயர்மங்கை வேய தோள் விரும்பினாய் * என்றருளிச் செய்த பாசுரத்தையே உயிராகப் பிடித்து அருளிச் செய்ததாம் இந்த ச்லோகம். கண்ணபிரான் நந்தகோபன் குமரனாக வளரத் திருவுள்ளம்பற்றின போதே, ஸ்ரீதேவி பூதேவிகளோடொக்க திவ்ய மஹிஷியான நீளாதேவியானவள் தானும் இடைக்குலத்திலே யசோதைப் பிராட்டியின் உடன் பிறந்தவனான கும்ப னென்பவனுக்கு மகளாய்த் தோன்றி நப்பின்னைப் பிராட்டியென வழங்கப்பட்டு வந்தாள். அவளுடைய தந்தையானவர் ஒருவர்க்கு மடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளைக் கந்யா சுல்கமாகக் குறிப்பிட்டு இவற்றை வலியடக்குபவற்கே என் மகளை விவாஹஞ் செய்துகொடுப்பே னென்று உறுதி கொண்டிருக்கையில், கண்ணபிரான் சென்று அவற்றை வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்துகொண்டு பின்னை மணாளனாயினன். இவ்வரலாறு ஸ்ரீவிஷ்ணு புராண ஸ்ரீபாகவதாதிகளில் காணப்பெற்றதில்லை. யாதவாப்யுதயத்தில் நான்காவது ஸர்க்கத்தில் * திசா கஜாநாமிவ சாக்வராணம் * என்னும் ச்லோகத்தில் இக்கதை கூறப்பட்டுள்ளது ; அவ்விடத்து வியாக்யானத்தில் அப்பய்ய தீக்ஷிதர் இக்கதை ஹரிவம்சத்திலுள்ள தென்று வரலாற்றுடன் எடுத்துக் காட்டியுள்ளார். ஆழ்வார்களருளிச் செயல்களில் ருக்மிணீ ப்ரஸ்தாவமுள்ளது அதிஸ்வல்பமேயாம். திருவாய்மொழியில் ஓரிடத்திலும் பெரியாழ்வார் திருமொழியில் இரண்டிடங்களிலுமே யுள்ளது. நப்பின்னைப் பிராட்டியின் ப்ரஸ்தாவமுள்ள இடங்கள் அபரிமிதம். 'குலவாயர் கொழுந்து' என்று அவளை நம்மாழ்வார் சிறப்பித்துக் கூறுவர் ; ஆயர் குலத்திலே அமைந்த திவ்ய மஹிஷியானதுபற்றியே. 107

त्वं हि सुन्दर ! यदा स्तनन्धयः पूतनास्तनमधास्तदा नु किम् ।
जीर्णमेव जठरे पयोविषं दुर्जरं बद तदात्मना सह ॥१०८॥

த்வம் ஹி ஸுந்தர யதா ஸ்தநந்தய:
பூதநாஸ்தநமதாஸ் ததா நு கிம்,
ஜீர்ணமேவ ஜடரே பயோவிஷம்
துர்ஜரம் வத ததாத்மநா ஸஹ. 108

* * * கண்ணபிரான் யசோதாஸ்தநந்தயனாக வளவன்றிக்கே பூதநாஸ்தநந்தயனுமான அற்புதத்தை அநுபவித்துப் பேசுகிறார். வடமதுரையில் வஸுதேவ க்ருஹத்தில் திருவவதரித்த கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் ஒளித்து வளர்கிறானென்பதையறிந்த கம்ஸன் எவ்வகையினாலாவது அவனை முடித்தாலல்லது தனக்கு ஜீவிதாசை யில்லையென்று துணிந்து கண்ணனை மாய்க்கும் பொருட்டுப் பல அசுரர்களைக் கோகுலத்திற்குப் போகவிடுவதே பணியாயிருந்தான். அவனுடைய ஏவுதலால் பூதனை யென்னும் ராக்ஷஸி யசோதையினுருவங் கொண்டு நள்ளிரவிலே திருவாய்ப்பாடிக்கு

வந்து அங்கு தூங்கிக்கொண்டிருந்த கிருஷ்ண சிசுவை யெடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையை உண்ணக்கொடுத்துத் தீங்கு செய்ய முயல, பகவானுன குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப் பிடித்து பாலுண்ணுகிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி, * ஸ்தந்யம் தத் விஷஸம்மிச்ரம் ரஸ்யமாஸீத் ஜகத்குரோ: * என்னும்படியே அவள் தனத்தில் பூசியிருந்த விஷத்தையும் அமுதமாக வுண்டு அவளை முடித்தருளினன் என்பது பூதநாவதவ்ருத்தாந்தம். இதைப்பற்றி அவன்தன்னையே ஒரு கேள்வி கேட்கும் முகத்தாலே ஸ்வாநுபவ ராஸிக்யத்தைக் காட்டியருளுகிறுர்.

ஹே ஸுந்தர! த்வம் யதா ஸ்தநந்தயஸ் ஸந் பூதநாஸ்தநம் அதா:—திருமாலிருஞ்சோலையழகரே! பண்டு கண்ணபிரானுகத் திருவவதரித்த தேவரீர் ஸ்தநந்தய சிசுவாய் எப்போது பூதனையின் முலைப்பாலை அமுது செய்தருளிற்ரே;

ததா துர்ஜரம் பயோ விஷம் ததாத்மநா ஸஹ ஜடரே ஜீர்ணமேவ கிம்? வத — அப்போது பிறரால் உண்டறுக்கமுடியாத ஸ்தந்ய விஷமானது அவளது ஆவியோடு கூடவே தேவரீருடைய திருவயிற்றில் ஜீர்ணமாகி யொழிந்ததோ? இதை தேவரீர் தாமே யருளிச் செய்யவேணும் என்கிறுர்.

பூதனையூட்டிய விஷந்தானே பிறர்வாயில் புகுந்தால் முடித்தல்லது விடாதிறே. ஒருவராலும் ஜரிப்பித்துக்கொள்ளப் போகாதே; அது உமக்கு ஜீர்ணமானவளவே யன்றிக்கே அவளுயிரைத்தானே முடித்து நின்றதே; இது வென் கொல்! என்று அதிசயித்துக் கூறினவிதனுல் சைசவத்திலும் பரத்வம் குறைய நில்லாத அவனுடைய பெருமை பேசப்பட்டதாயிற்று. ... ... ... ... 108

आश्रितेषु सुलभो भवन् भवान् मर्त्यतां यदि जगाम सुन्दर ! ।
अस्तु नाम तदुलूखले कियद्दामबद्ध इति किं तदाऽरुदः ॥१०९॥

ஆச்ரிதேஷு ஸுலபோ பவந் பவாந் மர்த்யதாம் யதி ஜகாம ஸுந்தர
அஸ்து நாம ததுலூகலே கியத் தாமபத்த இதி கிம் ததாऽருத:. 109

* * * கண ணபிரானுடைய ஸௌலப்ய பரம காஷ்டையிலீடுபட்டு உருகிப் பேசுகிறுர். அழகரே; தேவரீர் ஆச்ரித ஸௌலப்யத்தாலே கட்கிலியான வுருவத்தைக் கண்ணுக் கிலக்காம்படியாக்கி * துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக் கண்காண வந்து * என்கிறபடியே மநுஷ்யஸஜாதீயராக அவதரித்ததுபற்றிக் கேள்வியில்லை; * ஒளியா வெண்ணெயுண்டானென்று உரலோடாய்ச்சி யொண்கயிற்றால், விளியாவார்க்க ஆப்புண்டு விம்மியழுதான் * என்றும் * எழில் கொள் தாம்பு கொண்டடிப்பதற்கு எள்கு நிலையும் வெண்தயிர் தோய்ந்த செவ்வாயும் அழுகையு மஞ்சி நோக்குமந் நோக்கும் அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும் * என்றும் சொல்லுகிறபடியே கண்ணி நுண் சிறுத் தாம்பினுல் உரலோடு கட்டுண்டு ஏங்கியழுது கிடந்தது எதற்காக? இக் குணத்தை எந்த வகுப்பில் சேர்ப்பது? என்கிறுர்.

ஹேஸுந்தர! பவாந் ஆச்ரிதேஷு ஸுலபோ பவந் மர்த்யதாம் யதி ஜகாம தத் அஸ்துநாம— திருமாலிருஞ்சோலையழகரே! தேவரீர் ஆச்ரிதர்கள் பக்கலிலே எளியராய் மநுஷ்யஸ ஜாதீயராய்ப் பிறந்தீராகில் அது கிடக்கட்டும்; அதில் விசிகித்ஸை யொன்றும் செய்கின்றிலோமென்கை. பின்னை விசிகித்ஸையுள்ளது எதிலே யென்னில்;

ததா உலூகலே கியத்தாமபத்த இதி கிம் அருத:—அப்படி மநுஷ்ய யோநியிலே பிறந்த காலத்து வெண்ணெய் களவு கண்டு அதற்காக உரலிலே சிறு தாம்பினுல் கட்டுண்டு கிடந்து அழுது நின்றீயே, அது எதற்காக? என்று இதிலேயாயிற்று என்போல்வார்க்குப் போர விசிகித்ஸையுள்ளது என்கிறுர். இங்ஙனே கேள்வி கேட்குமிவருடைய திருவுள்ளம் யாதெனில், * மத்துறு கடை வெண்ணெய் களவினிலுரவிடையாப்புண்டு எத்திற முரலினேடிணைந்திருந்தேங்கிய வெளிவே! * என்று சொல்லி ஆழ்வார் ஆறு

மாதம் மோஹிப்பதற்காகவே நீ உரலிலே கட்டுண்டு அழுது நின்றது என்று வெளியிடுவதாம்.

கியத்தாமபத்தः' என்றது 'ஸ்வல்பதாமபத்தः' என்றபடி. 'தாமபத்தஸ் ஸந் அருதः' என்னுமல் 'தாமபத்த இதி அருதः' என்றது—ஆய்ச்சியர் உன்னைக் கட்டினார்களல்லர்; *கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்பண்ணிய பெருமாயன் * என்கிறபடியே உன்னை நீயே கட்டுண்டவனாகச் செய்துகொண்டாய்; அதுதானும் உன்னுடைய குணாதிசயத்தை வெளியிடுகைக்காக. என்னுங் கருத்துத் தோன்ற. 109

सुन्दरोरुभुज ! नन्दनन्दनस्त्वं भवन् भ्रमरविभ्रमालकः ।

मन्दिरेषु नवनीततल्लजं वल्लवीधियमुत व्यचूचुरः ॥११०॥

ஸுந்தரோருபுஜ! நந்தநந்தநஸ் த்வம் பவந் ப்ரமர விப்ரமாலகः,
மந்திரேஷு நவநீததல்லஜம் வல்லவீதிய முத வ்யசூசுரः. 110

* * * கீழ் ச்லோகத்தில் தாம்பினால் கட்டுண்டமை ப்ரஸ்துதமாகையாலே அதற்கு மூலமான நவநீத சௌர்யம் நினைவுக்கு வர, களவுகண்டது வெண்ணெயையோ ஆய்ச்சியருள்ளத்தையோ வென்று வினவுகிறார்.

ஸுந்தரோருபுஜ!—சுந்தரத்தோளுடைய பிரானே! அழகரே!;

த்வம் ப்ரமரவிப்ரமாலகः நந்தநந்தநः பவந்— * களிவண்டெங்கும் கலந்தாற்போல் கமழ்பூங்குழல்கள் தடந்தோள்மேல் மிளிரநின்று * என்றும் * அண்டத்தமரர் பெருமானழகமர் வண்டொத்திருண்ட குழல் * என்றும் சொல்லுகிறபடியே, தேவரீர் வண்டொத்த திருக்குழற் கற்றையையுடைய நந்தன் மதலையாய்க் கொண்டு,

மந்திரேஷு நவநீததல்லஜம் வ்யசூசுரः? உத வல்லவீதியம்?—ஆயர் மனைகளிலே புக்கு வெண்ணெயைத்தான் களவுகண்டீரோ? அல்லது ஆய்ச்சியர்களின் உள்ளத்தைத்தான் கொள்ளைகொண்டீரோ? இரண்டையுந்தான் கொள்ளை கொண்டேனென்பது எம்பெருமானுடைய விடை. நவநீதசோரனாயிருந்த நிலைதன்னிலே கோபீமநோஹரனாயுமிருந்தமை சொன்னபடி. அதிமாநுஷஸ்தவத்தில் "கோபக்ருஹேஷு கிம் த்வம் கோபீமநாம்ஸி நவநீத முதாப்யமோஷீः?" என்றருளிச்செய்ததும் இங்கே அநுஸந்தேயம்.

[நவநீததல்லஜம்] தல்லஜ சப்தம் ச்ரேஷ்ட வாசகம். வெண்ணெய்க்குச் சிறப்பாவது கண்ணபிரான் கைக்கொள்ளப் பெறுகையாயிற்று. ... .... 110

कालियस्य फणतां शिरस्तु मे सत्कदम्बशिखरत्वमेव वा ।

वष्टि जुष्टवनशैल ! सुन्दर ! त्वत्पदाब्जयुगमर्पितं ययोः ॥१११॥

காலியஸ்ய பணதாம் சிரஸ்து மே ஸத்கதம்பசிகரத்வமேவ வா,
வஷ்டி ஜுஷ்டவநசைல! ஸுந்தர! த்வத்பதாப்ஜயுக மர்ப்பிதம் யயோः.

* * * நித்யமும் திருவாய்ப்பாடியிலிருந்து ப்ருந்தாவனத்திற் கெழுந்தருளாநின்ற கண்ணபிரான் நம்பிமூத்தபிரானோடு கூடவே யெழுந்தருள்வது வழக்கம்; * ஏகதா து விநா ராமம் க்ருஷ்ணோ ப்ருந்தாவநம் யயௌ * என்கிறபடியே ஒருநாள் அவனை யொழியப் புறப்பட்டுக் கன்றுகளை யோட்டிக்கொண்டு ஒருவரும் ஸஞ்சரியாத வழியே போகத் தொடங்க, மற்றுள்ள பிள்ளைகள் 'கண்ணா! அவ்வழி நோக்கவேண்டா; அவ்வழிபிற் சென்றால் யமுநாநதியின் ஓர் மடுவில் காளியனென்னுங் கொடிய நாகம் தன் குடும்பத்தோடு வாஸஞ்செய்துகொண்டு விஷாக்னியைக் கக்கி யாவரையும் பிணமாக்கி விடுவதால் நாங்கள் அஞ்சுகிறோம்' என்ன, அக்காளிய நாகத்தைத் தண்டிக்க வேண்டுமென்று திருவுள்ளங்கொண்ட கண்ணன் அப் பிள்ளைகளுக்கு அபயங் கூறி

உடனழைத்துக்கொண்டு அம்மடுவிற்குச் சென்று அங்கு அருகேயுள்ளதொரு கடம்ப மரத்தின் மேலேறி அம் மடுவிற் குதித்து அந் நாகத்தின் படங்களின் மேலேறி நின்று நர்த்தனஞ்செய்து வலியடக்கினதாக வரலாறு உள்ளது. இதனை யநுஸந்தித்த ஆசிரியர் தமக்குண்டான வோர் வாஞ்சையை வெளியிடுகிறாரிதில். காளியநாகத்தின் மத்தகமாகவோ கடம்ப மரத்தின் உச்சியாகவோ ஆகப் பெறவேணுமென்று தம்முடைய திருமுடி விரும்புவதாக அருளிச்செய்கிறார்.

ஜுஷ்ட்வநசைல! ஸுந்தர!—திருமாலிருஞ்சோலை மலையுறையும் அழகரே!;

மே சிரஸ்து—அடியேனுடைய தலையோவென்றால்,

காளியஸ்ய பணதாம் ஸத்கதம்ப சிகரத்வமேவ வா வஷ்டி—காளிய நாகத்தின் படமாயிருக்கையையோ கடம்பமரத்தின் உச்சியாயிருக்கையையோ மெச்சுகின்றது; அவற்றில் என்ன ஏற்றங்கண்டு? என்னில்;

யயோஃ த்வத்பதாப்ஜயுகம் ஆர்ப்பிதம்—தேவரீருடைய திருவடித்தாமரையிணையை வைத்தருளப் பெற்றவையன்றோ அவை. * அடிச்சியோந் தலைமிசை நீயணியாய் ஆழியங் கண்ணாவுன் கோலப்பாதம் * என்றும் * கோலமாமென் சென்னிக்கு உன் கமலமன்ன குரைகழலே * என்றும் * கதாபுநஃ......த்வச்சரணாம்புஜத்வயம் மதீயமூர்த்தாநம் அலங்கரிஷ்யதி * என்றும் பிரார்த்தித்துப் பெறவேண்டிய பேறு அவற்றுக்கு அநாயாஸமாகக் கிடைத்ததேயென்று வியந்து பேசினபடி. வஷ்டி - விரும்புகிறது.
"वश-कान्तौ ; कान्तिरिच्छा ॥" .... .... .... 111

गूहितस्वमहिमाऽपि सुन्दर ! त्वं व्रजे किमिति शक्रमाक्रमीः ।
सप्तरात्रमदधाश्च किं गिरिं पृच्छतश्च सुहृदः किमकृथः ॥११२॥

கூஹித ஸ்வமஹிமாபி ஸுந்தர! த்வம் வ்ரஜே கிமிதி சக்ரமாக்ரமீஃ,
ஸப்தராத்ரமததாச்ச கிம் கிரிம் ப்ருச்சதச்ச ஸுஹ்ருதஃ கிமக்ருதஃ.

*** ஸௌலப்ய ஸௌசீல்யங்களையே காட்டிப் பரத்வத்தை யொளித்து மாநுஷ்யகம் கொண்டாட வந்தவிடத்திலே பரத்வமே பொலியும்படியான அதிமாநுஷ க்ருத்யங்களையும் ஊடே வெளியிட்டது எதற்காகவென்று வினவுகிறார்.

ஸுந்தர த்வம் கூஹிதஸ்வமஹிமா அபி வ்ரஜே கிமிதி சக்ரம் ஆக்ரமீஃ—அழகரே! தேவரீர் * ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவி லொருத்தி மகனா யொளித்து வளர்ந்தது ஸ்வகீய சக்தி விசேஷங்களை யெல்லாம் மறைத்திறே: அப்படியிருந்தும், * கேட்டறியாதன கேட்கின்றேன் கேசவா; கோவலரிந்திரற்குக் காட்டிய சோறுங் கறியும் தயிரும் கலந்துடனுண்டாய் போலும் * என்றும், * ஆயிரங் கண்ணுடை யிந்திரனாருக்கென்று ஆயர் விழவெடுப்ப, பாசனநல்லன பண்டிகளால் புகப்பெய்த வதனையெல்லாம், போயிருந்தங்கொரு பூதவடிவுகொண்டு உன் மகனின்று நங்காய்!, மாயனதனை யெல்லாம் முற்றும் வாரிவளைத்துண்டிருந்தான் போலும் * என்றும் சொல்லுகிறபடியே இந்த்ர பூஜையைத் தடைசெய்து அவனை யுத்தோந் முகனாக ஆக்கிக் கொண்டது என்னோ?

ஸப்தராத்ரம் அததாச்ச கிம் கிரிம்—* வழுவொன்று மில்லாச் செய்கை வானவர் கோன் வலிப்பட்டு முனிந்து விடுக்கப்பட்ட மழைவந் தெழுநாள் பெய்து மாத்தடைப்ப மதுசூதனெடுத்து மறித்த மலை * என்றும், * செப்பாடுடைய திருமாலவன் தன் செந்தாமரைக் கை விரலைந்தினையும் கப்பாக மடுத்து மணிநெடுந் தோள் காம்பாகக் கொடுத்துக் கவித்த மலை * என்றும் சொல்லுகிறபடியே * கொடியேறு செந்தாமரைக் கை விரல்கள் கோலமு மழிந்தில வாடிற்றில வடிவேறு திருவுகிர் நொந்துமில வென்னும் படியாக ஏழு நாள் வாடாதே வதங்காதே மலையைத் தாங்கி நின்றது என்னோ?

ப்ருச்சதச் ச ஸுஹ்ருத: கிம் அக்ருத:—மலையெடுத்து நின்ற அதிமாநுஷ சேஷ்டிதங் கண்டு ஆச்சரியப்பட்ட ஆயர்கள் * बालत्वं चातिवीर्यं च जन्म चास्मास्वशोभनम् । चिन्त्यमानममेयात्मन् ! शङ्कां कृष्ण ! प्रयच्छति ॥ देवो वा दानवो वा त्वं यक्षो गन्धर्व एव वा *என்று 'நீ தேவனா? தானவனா? யக்ஷனா? கந்தர்வனா?' என்று கேட்க; * क्षणं भूत्वा त्वसौ तूष्णीं किञ्चित्प्रणयरोषवान् *என்கிறபடியே அப்படி அவர்கள் கேட்டதற்காகச் சீற்றங்கொண்டதாக வுள்ளது; சீற்றங்கொள்ளும்படியாக அவர்கள் ஒன்றும் கேட்கவில்லையே, அப்படியிருக்க சீற்றங்கொண்டது ஏன்? என்று கேட்கிறார்.

ஆக இந்த ச்லோகத்தில் மூன்று வினாக்கள் உள்ளன; நெடுநாளாகத் திருவாய்ப்பாடியில் நடந்துவந்த தேவேந்த்ர ஸமாராதனையைத் தடுத்தது ஏன்? என்பது முதற்கேள்வி; பராத்பரனான தான் வளருகிற ஊரிலே தேவதாந்தரத்திற்கு ஆராதனை யாவதென்? என்றிருந்தபடியாலே தடுத்ததாக இதற்கு விடை. அவ்விந்திரன் ஏழுநாள் கல்மழை பெய்வித்து ஆயர்களுக்கும் ஆநிரைகளுக்கும் பொறுக்கொணாத் தீங்கை விளைத்தபோது அவனைத் தலையரிந்து பொகட வேண்டியிருக்க, அது செய்யாதே மலையைக் குடையாக வெடுத்து நின்றதேன்? என்பது இரண்டாவது கேள்வி. 'இந்திரனது உணவைக் கொண்ட நாம் உயிரையும் கொள்ளவேணுமோ? இந்த மலையே நமக்கு ரக்ஷகமென்று நாம் அடியிலே சொன்ன வார்த்தையை மெய்யாக்கிக் கொண்டோமாகில் அவன் கை சலித்தவாறே தானே ஓய்ந்து நிற்கிறான்' என்று ஆந்ருசம்ஸ்யம் கொண்டாடி நின்றதுதான் இதற்கு ஸமாதானம். 'நீ தேவனா தானவனா யக்ஷனா கந்தர்வனா? என்று கேட்டவர்கள் மீது சீற்றமுற்றது எதற்காக?' என்பது மூன்றாவது கேள்வி; பரத்வத்திலே வெறுப்புக்கொண்டு மநுஷ்ய ஸஜாதீயனாய், அதிலும் இடையர்களுள் கடைகெட்ட இடையனாய் ஆசையோடு தான் வந்து பிறந்திருக்க, வேறாகச் சங்கித்துக் கேட்டது அப்ரியமாய், "தேவத்வமும் நிந்தையானவனுக்கு" என்று ஆசார்ய ஹ்ருதயத்திலருளிச் செய்கிறபடியே நிந்தாரூபமுமாய்த் தோற்றுகையாலே சீற்ற முண்டாயிற்றென்பது ஸமாதானம்.

ஆக, இம் மூன்று கேள்விகளாலும் பெறுவிக்கப்படுகிற ஸமாதானங்களினால் விலக்ஷணமான குணாநுபவம் செய்தருளினாராயிற்று. ... 112

हे नन्दनन्दन ! सुसुन्दर सुन्दराह्व ! बृन्दावने विहरतस्तव वल्लवीभिः ।
वेणुध्वनिश्रवणतस्तरुभिस्तदा वै सग्रावभिर्जतुविलायमहो ! विलिल्ये ॥११३॥

ஹே நந்தநந்தந! ஸுஸுந்தர! ஸுந்தராஹ்வ!
ப்ருந்தாவநே விஹரதஸ் தவ வல்லவீபி:,
வேணுத்வநி சரவணதஸ் தருபிஸ் ததா வை
ஸக்ராவபிர் ஜதுவிலாயமஹோ விலில்யே. 113

*** வேணுகானத்திலே மரங்களும் மலைகளுங்கூட உருகினபடியைப் பேசியநுபவிக்கிறாரிதில்.

ஹே நந்தநந்த! ஸுஸுந்தர! ஸுந்தராஹ்வ!—நந்தகோப ஸூநுவாகத் திருவவதரித்த அழகரே! அழகரென்றே திருநாமம் படைத்தவரே!

ததா ப்ருந்தாவநே வல்லவீபிஸ் ஸஹ விஹரதஸ் தவ—முன்பு ப்ருந்தாவனத்தில் ஆயர் மங்கைகளோடு லீலா ரஸமநுபவியாநின்ற தேவரீருடைய.

வேணு த்வநி ச்ரவணத:—குழலூது மிசையைக் கேட்டதனாலே.

ஸக்ராவபி: தருபி: ஜதுவிலாயம் விலில்யே அஹோ—மலைகளும மரங்களும் தீயோடுடன் சேர்மெழுகு உருகுமாபோலே உருகினபடி என்னே!

பெரியாழ்வார் திருமொழியில் * நாவலம் பெரிய தீவினில் வாழுமென்கிற திருமொழியிலே * மருண்டு மான் கணங்கள் மேய்கை மறந்து மேய்ந்த புல்லும் கடைவாய் வழிசோர, இரண்டுபாடும் துலுங்கா புடைபெயரா எழுது சித்திரங்கள் போல நின்றனவே * என்றும், * மரங்கள் நின்று மதுதாரைகள் பாயும் மலர்கள் வீழும் வளர்கொம்புகள் தாழும் இரங்கும் கூம்பும் திருமால் நின்ற நின்ற பக்கம் நோக்கி அவை செய்யுங் குணமே * என்றும் அருளிச் செய்த பாசுரங்கள் இங்கே அநுஸந்தேயங்கள். பட்டர் ஸ்ரீரங்க ராஜஸ்தவத்தில் * சைலோக்நிச்ச ஜலாம்பூவ * என்று தொடங்கி யருளிச்செய்ததும் காண்க. நான்காவது பாதம் भावे प्रयोग: ॥ ... 113

गायंगायं वनगिरिपते ! त्वं हि बृन्दावनान्तर्गोपीसंघैर्विहरसि यदा सुन्दर व्यूढबाहो ! ।
रासारम्भोत्सवबहुविधप्रेमसीमन्तिनीनां चेतश्चेतस्तव च तु तदा कां दशामन्वभूताम् ॥११४॥

*காயம்காயம் வநகிரிபதே த்வம் ஹி ப்ருந்தாவநாந்தః*
*கோபீ ஸங்கைர் விஹரஸி யதா ஸுந்தர வ்யூடபாஹோ!*
*ராஸாரம்போத்ஸவ பஹுவிதப்ரேம ஸீமந்திநீநாம்*
*சேதச் சேதஸ் தவ ச து ததா காம் தசாமந்வபூதாம்* 114

*** கீழ் ச்லோகத்தில் வேணுகானம் ப்ரஸ்துதமாகையாலே, அக்காலத்திலே மரங்கள் மலைகள் முதலிய அசேதநங்கள் பட்டபாடு கிடக்கட்டும்; அவனுடைய ஹ்ருதயமும் கோபிகளின் ஹ்ருதயமும் பட்டபாடு எதுவாயிருக்குமென்று ஆராய்கையில் இது அவன் திருவுள்ளத்திற்கே தெரியுமத்தனை யென்று தெளிந்து அவன் தன்னையே கேட்டருளுகிறார் இதில்.

ஹேவநகிரிபதே! ஸுந்தரவ்யூடபாஹோ!—திருமாலிருஞ்சோலைமலைக்குத் தலைவராய் சுந்தரத் தடந்தோளுடையவரான அழகரே!.

த்வம் ப்ருந்தாவநாந்தः காயம் காயம் கோபீஸங்கைஸ் ஸஹ யதா விஹரஸி—தேவரீர் ப்ருந்தாவனத்தினுள்ளே வேணுகானத்தை அடுத்தடுத்துச்செய்து கோபிகள் திரளோடு லீலாரஸம் கொண்டாடின காலத்திலே.

ராஸாரம்போத்ஸவபஹுவிதப்ரேமஸீமந்திநீநாம் சேதः தவச சேதः ததா காம் தசாம் அந்வபூதாம்—ராஸாரம்போத்ஸவமாவது — ராஸக்ரீடை; இது தமிழில் குரவைக் கூத்தெனப்படும். * अङ्गनामङ्गनामन्तरे माधवः माधवं माधवं चान्तरेणाङ्गना—அங்கநாமங்கநா மந்தரே மாதவः மாதவம் மாதவஞ் சாந்தரேணாங்கநா * என்கிறபடியே ஒவ்வோராய்ச்சியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனுகப் பலவடிவெடுத்து ஆடினதொரு கூத்து அப்போது * इत्थमाकल्पिते मण्डले मध्यगः संजगौ वेणुना देवकीनन्दनः—இத்தமாகல்பிதே மண்டலே மத்யகः ஸஞ்ஜகௌ வேணுநா தேவகீ நந்தநः * என்று, அந்த ராஸக்ரீடா மண்டலத்தின் நடுவேயிருந்துகொண்டு கண்ணன் அற்புதமாக வேணுகானம் செய்வனுயிற்று. அப்போது அவ்வாய்ச்சிகளுக்குண்டான ப்ரேமம் பேச்சுக்கு நிலமன்றே. அப்படி வாசமகோசரமான ப்ரேமத்தையுடையவர்களான ஆய்ச்சிகளின் உள்ளமும், கண்ணபிரானது திருவுள்ளமும் எந்த நிலையிலிருந்திருக்குமென்று அவன் தன்னையே கேட்குமத்தனையிறே.

ஸீமந்திநீ—என்று ஸ்த்ரீஸாமாந்யப்பெயர்.

இங்ஙனே அழகரை நோக்கிக் கேள்வி கேட்ட ஆசிரியர்க்கு என்ன ஸமாதாநம் கிடைத்திருக்கு மென்னில்; 'இப்போது நீரும் நாமும் கலந்து பரிமாறுகையில் நம்மிருவருடைய உள்ளமும் என்ன நிலையிலிரா நின்றதோ இந்த நிலைதான் அப்போதுமென்று கொள்ளீர்' என்கிற ஸமாதாநமே கிடைத்திருக்கும். ... ... 113

इङ्गितं निमिषितं च तावकं रम्यमद्भुतमतिप्रियङ्करम् ।
तेन कंसमुखकीटशासनं सुन्दराल्पकमपि प्रशस्यते ॥११५॥

இங்கிதம் நிமிஷிதம் ச தாவகம் ரம்யமத்புத மதிப்ரியங்கரம்,
தேந கம்ஸமுக கீடசாஸநம் ஸுந்தரால்பகமபி ப்ரசஸ்யதே. 115

* * * க்ருஷ்ணவதாரத்தில் * தேனுகன் பிலம்பன் காளிய னெனனுந் தீப்பப் பூடுகளடங்க வுழக்கினதும் * வார்கடாவருவியானை மாமலையின் மருப்பிணைக்குவடி றுத்துருட்டி ஊர்கொள் திண்பாகனுயிர் செகுத்து அரங்கின் மல்லரைக் கொன்று கஞ்சனைத் தகர்த்ததும் முதலான துஷ்க்ருத் விநாசக சரிதைகள் விசேஷமாகவுண்டு; இவை ஸர்வ சக்தனுன எம்பெருமானுக்கு க்ரிமி கீட நிரஸநப்ராயமே யல்லது விக்ரமச் செயலில் சேர்ந்தவையல்ல. அதிமாநுஷஸ்தவத்திலே * या कंसमुख्यनृपकीटनिवर्हणोत्था सा निर्जितत्रिजगतस्तव नैव कीर्तिः—யா கம்ஸ முக்ய்ந்ருப கீட நிபர்ஹணோத்தா ஸா நிர்ஜித த்ரிஜகதஸ் தவ நைவ கீர்த்தி: * என்று ஸ்பஷ்டமாகவே யருளிச்செய்யப்பட்டது. உண்மை இங்ஙனே யிருந்தும் கம்ஸவதம் முதலான கீட நிபர்ஹணங்களையும் ஸ்தோதாக்களான பக்தர்கள் புகழ்ந்து பேசுகிறுர்களே, இது எங்ஙனே? என்று ஒரு சங்கை தோன்றக்கூடியதுண்டு; அதற்குப் பரிஹார முணர்த்துகிறுரிந்த ச்லோகத்தில். செய்கிற செயல் சிறிதா பெரிதா என்று பாரார் பக்தர்கள்; செய்தவன் யாவன்? என்று அஃதொன்றையே பார்ப்பர்கள்; எம்பெருமான் செய்தது, கண்ணபிரான் செய்தது என்று தெரிய வந்தால் சிறிது பெரிதென்கிற வாசியின்றிக்கே ஸகல சரிதங்களையும் ஸமரீதியாகவே புகழ்ந்து பேசக் கடமைப்பட்டவர்கள் பக்தர்கள்—என்கிற பரமார்த்தம் இதில் வெளியிடப்படுகின்றது.

ஹேஸுந்தர! இங்கிதம் நிமிஷிதஞ்ச தாவகம்—அழகரே! இங்கிதமோ வீக்ஷிதமோ எதுவாகிலுமாம்; தேவரீருடையதாயிருக்கு மத்தனையே வேண்டுவது. அபிப்ராயாநுரூபமான சேஷ்டைக்கு இங்கிதமென்றுபெயர். கண்ணிமைத்தலுக்கு நிமிஷிதமென்று பெயர். எங்களுக்கு சரித்ரபர்யந்தம் வேண்டா; இங்கித நிமிஷிதங்களே போதும் உருகுகைக்கு—என்கைக்காக இவை சொல்லுகிறபடி.

ரம்யம் அத்புதம் அதிப்ரியங்கரம்—தேவரீருடைய தெல்லாம் ரமணீயமும் அத்புதமும் பரம யோக்யமுமா யிருக்குமிறே.

தேந—இக் காரணம் பற்றியே.

கம்ஸமுககீடசாஸநம் அல்பகமபி ப்ரசஸ்யதே—கம்ஸன் முதலிய புழுக்களைத் தண்டித்ததுங் கூட சிறுச்சேவகமாயிருக்கச் செய்தேயும் குலாவப்படுகிறது. நம்மாழ்வார் திருவாய் மொழியில் (5-10-2) * அதுவிதுவுது வென்னலாவனவல்ல என்னையுன் செய்கை நைவிக்கும் * என்றருளிச்செய்த பாசுரத்தின் விவரணமாயிற்று இந்த ச்லோகம். 115

वाराणसीदहनपौण्ड्रकभौमभङ्गकल्पद्रुमाहरणशङ्करजृम्भणाद्याः ।
अन्याश्च भारतवलक्रथनादयस्ते क्रीडास्सुसुन्दरभुज ! श्रवणामृतानि ॥११६॥

வாராணஸீதஹந பௌண்ட்ரக பௌமபங்க
கல்பத்ருமாஹரண சங்கர ஜ்ரும்பணுத்யா:,
அந்யாச்ச பாரத பல்க்ரதநாதயஸ் தே
க்ரீடாஸ் ஸுஸுந்தர புஜ! ச்வரணும்ருதாநி. 116

*** கீழ் ச்லோகத்தில் ‘ அல்பகமபி ’ என்றூரே ; அல்பமன்றிக்கே அநல்ப
மென்று மதிக்கக்கூடிய சேஷ்டிதங்களும் சிலவுண்டே ; அங்ஙனேயுள்ள சிலவற்றை
யெடுத்துரைத்து இவையெல்லாம் கர்ணாமிருதமான சரித்திரங்களென்கிறாரிதில்.

வாராணஸீ தஹந பௌண்ட்ரகபங்க = பௌண்ட்ரக பங்கம் முன்பும் காசீ தஹனம் பின்பும்
நடந்ததாகையாலே பௌண்ட்ரக பங்கத்தை முன்னே யநுஸந்திப்பது. பௌண்ட்
ரகனென்பானோரரசன் வாஸுதேவ னென்று பேர்பெற்றிருந்தான். பல மூடர்கள்
திரண்டு ‘ நீ தான் ஸாக்ஷாத் வாஸுதேவ பரமாத்மா ’ என்று அவனைப் புகழ்ந்து
கொண்டிருந்தார்கள். அவனும் தன்னையே வாஸுதேவனாக மயங்கி மார்பு நெறித்
துச் சங்கு சக்கரம் கிரீடம் முதலியவற்றைச் செய்வித்துத் தானணிந்து கொண்டு
தூதனையழைத்து ‘ நீ க்ருஷ்ணனிடம் போய் என் பெயரைச் சொல்லி இன்னான்
வாஸுதேவனாயிருக்க நீ அவனுடைய சங்கு சக்கரங்களைத் தரிக்கக் கூடாது ; இன்று
முதல் விட்டுவிடவேண்டியது ; இல்லையாகில் யுத்தஞ் செய்ய வருக – என்று சொல்ல
வேண்டியதென்று சொல்லியனுப்ப, அங்ஙனமே அந்தத் தூதன் வந்து க்ருஷ்ண
னிடம் அச் செய்தியைச் சொல்ல, கண்ணபிரான் சீறிச் சினந்து பெரிய திருவடியின்
மீதேறிச் சென்று போர் செய்து பௌண்ட்ரகனைத் தனது திருவாழியினால் தலை
யறுத்துக் கொன்றொழித்தான். இச் செய்தியை அவனது தோழனான காசி மன்னன்
கேள்விப்பட்டு க்ருஷ்ணனையும் மற்றும் யாதவர்களையும் த்வாரகையையும் அழித்திடு
வதாகச் சங்கற்பித்து ஒரு பிசாசத்தை ஸ்ருஷ்டித்து ஏவவிட்டான் ; அப்பிசாசம் த்வா
ரகைக்கு வந்து பாதிக்கத் தொடங்கிற்று ; இச்செய்தியைச் செவியுற்ற கண்ணபிரான்
அப்போது அக்ஷக்ரீடையில் வ்யாஸக்தனா யிருந்ததனால் தானெழுந்து ஒன்று செய்
யாமலே திருவாழியாழ்வானை ஏவியிட, அவன் அப்பிசாசத்தைத் துரத்திக்கொண்டு
காசியளவும் போய் அதையும் அத்துடன் சேர்ந்துவந்த கணங்களையும் அந்தக் காசிப்
பட்டணத்தையும் நீறுக்கி மீண்டனனென்ற வரலாறு அறியத்தக்கது.

பௌமபங்க கல்பத்ருமாஹரண—பௌமனென்று நரகாஸுரனுக்குப் பெயர் ; எம்பெரு
மான் வராஹாவதாரஞ் செய்து பூமியைக் கோட்டாற் குத்தியெடுத்தபொழுது எம்
பெருமானுடைய ஸ்பர்சத்தால் பூமி தேவிக்குக் குமாரனாய்ப் பிறந்தவனும் அஸமயத்
தில் சேர்ந்து பெறப்பட்டதனால் அஸுரத் தன்மை பூண்டவனுமான நரகனென்
பவன் ப்ராக்ஜோதிஷ மென்னும் பட்டணத்திலிருந்து கொண்டு ஸகல ப்ராணிகளை
யும் நலிந்து தேவ ஸித்த கந்தர்வாதிகளுடைய கன்னிகைகளையும் பற்பலரை பலாத்
காரமாய் அபஹரித்துக் கொண்டுபோய்த் தான் மணம்புணரத் தன்மாளிகையிற்
சிறை வைத்து, வருணனது குடையையும் மந்தரகிரி சிகரமான ரத்ன பர்வதத்தையும்
தேவ மாதாவான அதிதி தேவியின் குண்டலங்களையும் கவர்ந்து போனதுமன்றி
இந்திரனுடைய ஐராவத யானையையும அடித்துக்கொண்டு போக ஸமயம் பார்த்
திருக்க, அஞ்சிவந்து பணிந்து முறையிட்ட இந்திரன் வேண்டுகோளால் கண்ணன்
கருடனை வரவழைத்து ஸத்யபாமையுடனே தான் கருடன் மேலேறி அந்நகரேகிச்
சக்ராயுதத்தைப் பிரயோகித்து அவனது மந்த்ரியான முரன் முதலிய பல அஸுரர்
களையும் இறுதியில் அந்த நரகாஸுரனையும் அறுத்துத்தள்ளியழித்து, அவன் சிறைப்
படுத்தியிருந்த பதினாறாயிரத்தொரு நூறு கன்னிகைகளையும் ஆட்கொண்டு, நரகனால்
முன்பு கவரப்பட்ட அதிதி குண்டலங்களை அவ்வதிதி தேவிக்குக் கொடுக்கும்பொருட்டு
ஸத்யபாமையுடனே கருடன் தோள்மே லேறிக்கொண்டு தேவலோகத்துக்குச்
செல்ல, அங்கு இந்திராணி ஸத்யபாமைக்கு ஸகல உபசாரங்களைச் செய்தும் தேவர்க்
கே உரிய பாரிஜாத புஷ்பம் மானிடப் பெண்ணாகிய இவளுக்குத் தகாதென்று ஸமர்ப்
பிக்கவில்லையாதலின் அதனைக் கண்டு பாமை விருப்புற்றவளாய் நாதனை நோக்கி
இந்தப் பாரிஜாத தருவை த்வாரகைக்குக் கொண்டுபோக வேண்டுமென்ன, உடனே
மரத்தை வேரோடு பெயர்த்துப் பெரிய திருவடி தோளின்மேல் வைத்தருளி, அப்

பொழுது இந்திராணி தூண்டிவிட்டதனால் வந்து மறித்துப் போர் செய்த இந்திரனை ஸகல தேவ ஸைன்யங்களுடன் சங்கநாதத்தாலே பங்கப்படுத்திப் பின்பு பாரிஜாத தருவை த்வாரகைக்குக் கொண்டுவந்து ஸத்யபாமையின் தோட்டத்தில் நாட்டியருளினன் என்ற வரலாறு அறிக.

சங்கரஜ்ரும்பணத்யா:—பாணாஸுர யுத்தத்திலே ஜ்ரும்பகாஸ்த்ர ப்ரயோகம் பண்ணிச் சிவபெருமானைக் கொட்டாவி விட்டுக்கொண்டு கிடக்கும்படி செய்தது முதலான.

அந்யாச்ச பாரதபலக்ரதநாதய: தே க்ரீடா:— * மலைபுரை தோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன் சிலை வளையத் திண்டேர் மேல் முன்னின்று செய்த லீலைகளுமெல்லாம்.

ச்ரவணாம்ருதாநி—தேவரீர் திறத்திலே விஸ்மயப் படத் தக்கவை யல்லவாகிலும் ஒவ்வொரு சரிதையும் செவிக்கு அமுதமாயிருப்பவை யன்றோ. * செவிகளாலார நின் கீர்த்திக் கனியென்னுங் கவிகளே காலப்பண் தேனுறைப்பத் துற்றிப், புவியின் மேல் பொன்னெடுஞ் சக்கரத் துன்னையே அவிவின்றி யாதரிக்குமென தாவியே * என்ற திருவாய்மொழிப் பாசுரம் (2979) இங்கே அநுஸந்தேயம். ஆக இவ்வளவும் ஸ்ரீ க்ருஷ்ணாவதாராநுபவமாய்த் தலைக்கட்டிற்று. ... ... 116

त्वं हि सुन्दर ! वनाद्रिनाथ ! हे वेङ्कटाह्वयनगेन्द्रमूर्धनि ।

देवसेवितपदाम्बुजद्वयः संश्रितेभ्य इह तिष्ठसे सदा ॥११७॥

த்வம் ஹி ஸுந்தர ! வநாத்ரிநாத ! ஹே
வேங்கடாஹ்வய நகேந்த்ர மூர்த்தநி,
தேவ ஸேவித பதாம்புஜத்வய:
ஸம்ச்ரிதேப்ய இஹ திஷ்டஸே ஸதா. 117

* * * மத்ஸ்யாவதாரம் தொடங்கி விபவாவதாரங்களை அடைவே அநுபவித்து வாராநின்றவர் கீழ் ச்லோகத்தினோடே க்ருஷ்ணாவதாராநுபவத்தைத் தலைக்கட்டினார்; அநந்தரம் பவிஷ்யத்தான கல்கியவதாரத்தைப்பற்றி யருளிச்செய்ய ப்ராப்தமாயிருந்தும் அதை மேலே (120ல்) அருளிச் செய்பவராய் இடையில் மூன்று ச்லோகங்களினால் திருமலை, பெருமாள் கோயில், திருவரங்கம் பெரிய கோயிலாகிற மூன்று திருப்பதிகளை யநுபவிக்கிறார். கோயில் திருமலை பெருமாள் கோயில் என்று இங்ஙனே க்ரமமிருக்க வ்யுத்க்ரமமாக அருளிச் செய்வதேன்? எனில்; இதுவும் ஒரு க்ரமத்திலே சேர்ந்திருக்குமாயிற்று. "தென்னனுயர் பொருப்பும் தெய்வ வடமலையு மென்னுமிவையே முலையா" (பெரிய திருமடல்) என்கிறபடியே தெற்குத் திருமலையான இத்திருமலையோடே வட திருவேங்கட மலைக்கு ஒரு சேர்த்தியுண்டாகையாலே அதனை முந்துறவெடுத்தார்; இவ்விரண்டு திருமலைகளோடே ஹஸ்திகிரியாகிற திருவத்திமாமலைக்கும் பர்வதத்வேந ஒரு சேர்த்தியுண்டாகையாலே அடுத்தபடி அதனையெடுத்தார். அனந்தரம் பாரிசேஷ்யாத் கோயில் அநுஸந்திக்கப்படுகிறது.

ஹே வநாத்ரி நாத ஸுந்தர!—வாரீர் திருமாலிருஞ்சோலைத் தலைவரான அழகரே!. த்வம்—தேவரீர்.

வேங்கடாஹ்வய நகேந்த்ர மூர்த்தநி—திருவேங்கடமென்னும் திருமலையினுச்சியிலே.

தேவ ஸேவித பதாம்புஜ த்வயஸ் ஸந்—* சுரர்கள் முனிக்கணங்கள் விரும்புந் திருவேங்கடத்தானே * என்றும், * மந்திபாய் வடவேங்கட மாமலை வானவர்கள் சந்தி செய்ய நின்றான் * என்றும் சொல்லுகிறபடியே வானவர் தொழுந் திருவடித்தாமரை யிணையை யுடையீராய்க்கொண்டு.

இஹ ஸம்ச்ரிதேப்யஸ் ஸதா திஷ்டஸே—இத்தலத்திலே அடியவர்களுக்கு ஸ்வாபிப்ராயத்தைத் தெரிவித்துக்கொண்டு என்ஞான்று மெழுந்தருளி யிருக்கிறீர். ஸ்வாபிப்ராயமாவது—ஸம்ஸாரம் கிழங்கெடுத்தாலல்லது பேரேன் என்பதாம். 'ஸம்ச்ரிதேப்ய:' என்கிற சதுர்த்தியும், 'திஷ்டஸே' என்கிற ஆத்மநே பதமும் வியாகரண ரீதியில் இங்ஙனே பொருள் பெறுவிக்கும் * प्रकाशनस्थेयाख्ययोश्च * श्लाघह्नुङ्स्थाशपां ज्ञीप्स्यमानः * என்னும் பாணிநி ஸூத்ரங்களை இங்கே அநுஸந்திப்பது. வரதராஜஸ்தவத்திலும் * विश्वस्मैवं करिगिरिपुरस्तिष्ठस इह * என்று ப்ரயோகமுள்ளது. பட்டரும் ஸ்ரீகுணரத்நகோசத்திலே * யத் தஸ்மை திஷ்டதேங்ய: * என்று ப்ரயோகித்தது இக்கட்டளையிலேயாம். ... ... ... 117

हस्तिशैलनिलयो भवन् भवान् साम्प्रतं वरदराजसाह्वयः ।
इष्टमर्थमनुकम्पया दददि्वश्वमेव दयते हि सुन्दर ! ॥११८॥

ஹஸ்திசைலநிலயோ பவந் பவாந் ஸாம்ப்ரதம் வரதராஜ ஸாஹ்வய:,
இஷ்டமர்த்த மநுகம்பயா ததத் விச்வமேவ தயதே ஹி ஸுந்தர. 118

* ** ஸ்ரீ ஹஸ்திசைல சிகரோஜ்ஜ்வல பாரிஜாதத்தின் ஔதார்யத்தை யநுபவிக்கிறுரிதில்.

ஹே ஸுந்தர பவாந் ஸாம்ப்ரதம் வரதராஜஸாஹ்வய: ஹஸ்திசைல நிலயோ பவந்—வாரீர் அழகரே! தேவரீர் இப்போது வரந்தரும் பெருமாளென்று திருநாமமுடையீராய் திருவத்திமாமலையில் வாழ்பவராய்க்கொண்டு.

அநுகம்பயா இஷ்டம் அர்த்தம் ததத் ஸந்—திருவருளாலே அர்த்திதார்த்த பரிதாந தீக்ஷிதராய்.

விச்வமேவ ஹி தயதே—உலகுக் கெல்லாம் அருள்புரியா நின்றீர்.

சதுர்முகப்ரஹ்மா தானொருவன் ஸாக்ஷாத்கரித்து அநுபவித்துக் களிப்பதற்காக அச்வமேதயாகஞ் செய்து எம்பெருமானைப் பெற்றுன்; * चातकस्त्रिचतुरान्पयः कणान् याचते जलधरं पिपासया । सोऽपि पूरयति विश्वमम्भसा हन्तहन्त ! महतामुदारता—சாதகஸ் த்ரிசதுராந் பய:கணாந் யாசதே ஜலதரம் பியாஸயா, ஸோபி பூரயதி விச்வமம்பஸா ஹந்தஹந்த! மஹதாமுதாரதா * என்றும் * நெல்லுக்கிறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப் புல்லுக்குமாங்கே பொசியுமால் * என்றும் சொல்லுகிறபடியே பேறு உத்தேஷ்டாவான வொருவனளவிலே சுவறிப்போகாமல் உலகமெல்லாம் பேரருள் பெற்று வாழநின்றது என்றுராயிற்று. ... ... ... 118

मध्येक्षीरपयोधि शेषशयने शेषे सदा सुन्दर ! त्वं तद्वैभवमात्मनो भुवि भवद्भक्तेषु वात्सल्यतः ।
विश्राण्याखिलनेत्रपात्रमिह सन् सह्योद्भवायास्तटे श्रीरङ्गे निजधाम्नि शेषशयने शेषे वनाद्रीश्वर ! ॥११९॥

மத்யேக்ஷீரபயோதி சேஷசயநே சேஷே ஸதா ஸுந்தர !
த்வம் தத்வைபவமாத்மநோ புவி பவத் பக்தேஷு வாத்ஸல்யத:.
விச்ராண்யாகிலநேத்ரபாத்ரமிஹ ஸந் ஸஹ்யோத்பவாயாஸ் தடே
ஸ்ரீரங்கே நிஜதாம்நி சேஷசயநே சேஷே வநாத்ரீச்வர! 119

* * * * குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி வடதிசை பின்பு காட்டித் தென்திசை யிலங்கை நோக்கிக் கடல் நிறக் கடவுளெந்தை யரவணைத் துயிலுமாற்றைத் திருவரங்கம் பெரிய கோயிலிலே அநுபவித்து இனியராகிறுர். * க்ஷீர

ஸாகர தரங்க சீகராஸாரதாரகித சாருமூர்த்தயே, போகி போக சயநீய சாயிநே மாதவாய * என்கிறபடியே திருப்பாற்கடலில் அரவணைமேல் பள்ளிகொண்டருளுங் கோலம் காட்டிலெறித்த நிலாவாகவன்றே வுள்ளது; அது அங்ஙனுகாமே கண்படைத்தாரெல்லாரும் கண்டு களித்து வாழலாம்படி * திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையா லடிவருடப் பள்ளிகொள்கின்றபடியைப் பேசுகிறாராயிற்று.

ஹே வநாத்ரீச்வர ஸுந்தர!—வாரீர் திருமாலிருஞ்சோலைத் தலைவரான அழகரே!

மத்யேக்ஷீரபயோதி சேஷசயநே ஸதா சேஷே—திருப்பாற்கடலினிடையே அரவணைப் பள்ளியிலே அநவரதம் பள்ளிகொண்டருளாநின்றீர்.

ஆத்மந: தத் வைபவம் புவி பவத்பக்தேஷு விச்ராண்ய—சேஷசாயித்வ ரூபமான அந்த ஸ்வகீய வைபவத்தை இந் நிலவுலகத்திலும் பக்தர்கள் பக்கலில் வாத்ஸல்யாதிசயத்தாலே காட்டிக் கொடுக்கத் திருவுள்ளம்பற்றி.

அகில நேத்ர பாத்ரம் ஸந்—எல்லாருடைய கட்புலனுக்கும் இலக்காய்க்கொண்டு.

இஹ ஸஹ்யோத்பவாயாஸ் தடே—இங்கே திருக்காவேரிக்கரையில்.

நிஜதாம்நி ஸ்ரீரங்கே—விசேஷித்துத் தன்னிலமான திருவரங்கம் பெரிய கோயிலிலே.

சேஷசயநே சேஷே—அரவணைமேல் பள்ளிகொண்டருளாநின்றீர். ... ... 119

कल्कीभविष्यन् कलिकल्कदूषितान्दुष्टानशेषान् भगवन् ! हनिष्यसि ।

स एष तस्यावसरस्सुसुन्दरः प्रशाधि लक्ष्मीश ! समक्षमेव नः ॥१२०॥

கல்கீபவிஷ்யந் கலிகல்கதூஷிதாந்

துஷ்டாநசேஷாந் பகவந்! ஹநிஷ்யஸி,

ஸஏஷ தஸ்யாவஸரஸ்ஸுஸுந்தர:

ப்ரசாதி லக்ஷ்மீச ஸமக்ஷமேவ ந:. 120

* * * கல்கியவதாரம் பவிஷ்யத்தாகையாலே அதனை ஒரு சமத்காரமாக அநுபவிக்கிறாரிதில். என்றைக்கோ செய்வதாகத் திருவுள்ளம்பற்றியிருக்கிற அந்த அவதாரத்தை மஹா க்ரூரர்கள் மலிந்துள்ள இக்காலத்திலேயே செய்தருள்வது நன்று என்கிறார்.

ஹே லக்ஷ்மீச பகவந்!—ச்ரிய: பதியான திருமாலிருஞ்சோலைப் பெருமானே!

கல்கீபவிஷ்யந்—இனி யொருகால் கற்கியவதாரம் செய்து.

கலிகல்க தூஷிதாந் அசேஷாந் துஷ்டாந் ஹநிஷ்யஸி—கலிகல்மஷ தூஷிதர்களான ஸகல துஷ்டர்களையும் தொலைத்தருளப் போகிறீர். அதற்கொரு ஸமய ப்ரதீக்ஷை வேணுமோ?

தஸ்ய ஸஏஷ: அவஸர: ஸுஸுந்தர:—அதற்கு இந்த ஸமயந்தான் மிக வாய்ப்பானது.

ந: ஸமக்ஷமேவ ப்ரசாதி—எங்கள் கண்முகப்பே பாபிகளைத் தொலைத்தருளவேணும். கல்கியவதாரஞ்செய்து தொலைக்கவேண்டிய பாபிகள் மலிந்திருப்பதாக ஆழ்வான் திருவாக்கில் வெளிவந்தால் அக்காலத்தின் கொடுமையை என்னென்போம்! 120

ईदृशास्त्वदवतारसत्तमास्सर्व एव भवदाश्रितान् जनान् ।

त्रातुमेव न कदाचिदन्यथा तेन सुन्दर ! भवन्तमाश्रये ॥१२१॥

ஈத்ருசாஸ் த்வதவதார ஸத்தமா: ஸர்வ ஏவ பவதாச்ரிதாந் ஜநாந்,

த்ராதுமேவ ந கதாசிதந்யதா தேந ஸுந்தர பவந்தமாச்ரயே. 121

* * * இந்த ச்லோகத்திலே திருமாலிருஞ்சோலையழகர் திருவடிகளிலே ஸ்வாபிமத ஸித்திக்காக ப்ரபத்தியும் செய்தருளுகிறார். ப்ரபத்திக்கு அபேக்ஷிதங்களான குண விசேஷங்களையெல்லாம் கீழே பஹு முகமாகப் பரக்க அருளிச்செய்து இதிலே சரணம் புகுகிறார்.

ஹே ஸுந்தர ஈத்ருசாঃ த்வதவதாரஸத்தமாঃ ஸர்வே ஏவ பவதாச்ரிதாந் ஜநாந் த்ராது மேவ—அழகரே? இப்படிப்பட்ட உம்முடைய மிகவும் சிறந்த திருவவதாரங்களெல்லாமும் * परित्राणाय साधूनाम् * என்கிற வாயோலைப்படியே ஸாதுபரித்ராணத்திற்காகவேயாம்.

கதாசித் அந்யதா ந—அவதாரத்திற்கு இதுவே ப்ரயோஜனமல்லது வேறு ப்ரயோஜனமில்லை யொருபோதும்.

தேந பவந்தம் ஆச்ரயே—இத் திருமலையிலே வந்து திருவவதரித்திருப்பதும் ஸாது பரித்ராணத்திற்காகவே யாதலால் அடியேனையும் ஒரு ஸாதுவாகத் திருவுள்ளம்பற்றி ரக்ஷித்தருளவேணுமென்று தேவரீரைச் சரணம் புகுகிறேன் என்றாராயிற்று. 121

त्वामामनन्ति कवयः करुणामृताब्धिं त्वामेव संश्रितजनिघ्नमुपघ्नमेषाम् ।
येषां व्रजन्निह हि लोचनगोचरत्वं हे सुन्दराह्व ! परिचस्करिषे वनाद्रिम् ॥१२२॥

த்வாமாமநந்தி கவயঃ கருணாம்ருதாப்திம்
த்வாமேவ ஸம்ச்ரித ஜநிக்ந முபக்ந மேஷாம்,
யேஷாம் வ்ரஜந்நிஹ ஹி லோசந கோசரத்வம்
ஹே ஸுந்தராஹ்வ! பரிசஸ்கரிஷே வநாத்ரிம். 122

* * * கீழ் ச்லோகத்தில் பண்ணின சரணாகதி ஸபலமாகியே தீரவேணுமென்பதற்காக நான்கு ச்லோக மருளிச்செய்கிறார்.

ஹே ஸுந்தராஹ்வ த்வாம் கவயঃ கருணாம்ருதாப்திம் ஆமநந்தி—வாரீர் அழகரே! அப்ரத்யக்ஷ தத்வார்த்த ஸாக்ஷாத்காரக்ஷமர்களான பராசர பாராசர்யாதிகள் தேவரீரை அருட்கடலாகச் சொல்லுகின்றார்கள். [கவயঃ] "कविः क्रान्तदर्शी" என்னக்கடவதிறே.

த்வாமேவ ஸம்ச்ரித ஜநிக்நம் ஏஷாம் உபக்நம் (ஆமநந்தி)—ஆச்ரிதர்களுக்கு ஸம்ஸார விமோசகராகவும், அவர்களுக்கு ஆச்ரய பூதராகவும் தேவரீரையே சொல்லுகிறார்கள். எவர்களுக்கென்னில்;

இஹ ஹி யேஷாம் லோசந கோசரத்வம் வ்ரஜந் வநாத்ரிம் பரிசஸ்கரிஷே—இந் நிலத்திலே யாவர் சிலர்க்குக் கட்புலனுக்கிலக்காகித் திருமாலிருஞ் சோலைமலையைப் பரிஷ்க்ருத மாக்கியருள்கின்றீரோ.

பராசர பாராசார்யாதிகளான மஹர்ஷிகளின் வாக்கு பொய்யாகாதபடி அருள் புரிய வேணுமென்றதாயிற்று. ... ... ... 122

अशक्यं नो किञ्चित्तव न च न जानासि निखिलं दयालुः क्षन्ता चास्यहमपि न चागांसि तरितुम् ।
क्षमोऽतस्त्वच्छेषो ह्यगतिरिति च क्षुद्र इति च क्षमस्वैतावन्नोऽफलमिह हरे ! सुन्दरभुज ! ॥१२३॥

அசக்யம் நோ கிஞ்சித் தவ நச ந ஜாநாஸி நிகிலம்
தயாலுঃ க்ஷந்தா சாஸி, அஹமபி ந சாகாம்ஸி தரிதும்,
க்ஷமோதஸ் த்வச்சேஷோ ஹ்யகதிரிதி ச க்ஷுத்ர இதி ச
க்ஷமஸ் வைதாவந்நோபலமிஹ ஹரே ஸுந்தரபுஜ! 123

ஹரே ஸுந்தரபுஜ தவ அசக்யம் நோ கிஞ்சித்—வாரீர் சுந்தரத் தோளுடைய பெருமாளே! ஸர்வசக்தரான தேவரீருக்குச் செய்யமுடியாததொன்றுமில்லை காணீர். ஸங்கல்ப மாத்ரத்தாலே எதையும் செய்யவல்லீரென்கை.

நிகிலம் ந ச ந ஜாநாஸி—சக்தியில் குறையில்லாதாப்போலே ஜ்ஞானத்திலும் குறையில்லை கிடீர்; * உள்ளுவாருள்ளிற்றெல்லா முடனிருந்தறிதி * என்னப்பட்ட தேவரீர் அறியாததொன்றில்லை.

தயாலுः க்ஷந்தா ச அஸி—ஜ்ஞாந சக்திகளுக்குமேலே தயாகுணமும் க்ஷமாகுணமு முடையீராயிராநின்றீர்.

தேவரீர் படியை விண்ணப்பஞ்செய்த அடியேனே என் படியையும் விண்ணப்பம் செய்துகொள்ளுகிறேன், கேட்டருளீரென்று தம்படியையும் பேசுகிறார்;—

அஹமபி ஆகாம்ஸி தரிதும் நக்ஷமः—அடியேனோ செய்த பாபங்களை ப்ராயச்சித்தாதிகளால் போக்கிக்கொள்ள க்ஷமனுகின்றிலேன். பாவங்கள் கூடு பூரித்துக் கிடக்கிறேனென்கை.

அதः—தேவரீர் ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தத்வ தயாலுத்வ க்ஷமாநிதித்வாதி குணபூர்ணராயிருப்பதனாலும், அடியேன் பாபநிபர்ஹண க்ஷமனன்றிக்கே யிருப்பதனாலும்.

த்வச்சேஷ இதி அகதிரிதி க்ஷுத்ர இதி ச—தேவரீருக்கு சேஷப்பட்டவன், வேறு புகலற்றவன், பிறரும் கண்ணெடுத்துப் பார்க்கத்தகாத நீசனானவன் என்னுமிக் காரணங்கள் கொண்டும்.

க்ஷமஸ்வ—ஸர்வாபசாரங்களையும் க்ஷமித்தருளவேணும்.

நः இஹ ஏதாவத் பலம்—தேவரீருடைய ஜ்ஞானசக்த்யாதிகளை அநுஸந்திப்பதும் அடியோங்களுடைய அஜ்ஞாந அசக்திகளை யநுஸந்திப்பதுமே இங்கு எங்கள் பக்கலுள்ள கைம்முதல் என்கை.

நான்காவது பாதத்தில் 'நோபலம்' என்றவிடத்து 'நः அபலம்' என்று பதம் பிரித்து 'நः ஏதாவத் அபலம் க்ஷமஸ்வ' என்று அந்வயிப்பாருமுளர். அபலமாவது அபசாரம். ... ... ... 123

लङ्कायुद्धहतान् हरीन् द्विजसुतं शम्बूकदोषान्मृतं सान्दीपन्यभिजं मृतं द्विजसुतान् बालांश्च वैकुण्ठगान् ।
गर्भे चार्जुनिसंभवं व्युदधरस्स्वेनैव रूपेण यः स्वामीष्टं मम मद्गुरोश्च ददसे नो किं वनाद्रीश्वर ! ॥१२४॥

**லங்காயுத்தஹதாந் ஹரீந் த்விஜஸுதம் சம்பூக தோஷாந்ம்ருதம்**
**ஸாந்தீபந்யபிஜம் ம்ருதம் த்விஜஸுதாந் பாலாம்ச்ச வைகுண்டகாந்,**
**கர்ப்பஞ் சார்ஜுநிஸம்பவம் வ்யுததரஸ் ஸ்வேனைவ ரூபேண யः**
**ஸ்வாபீஷ்டம் மம மத்குரோச் ச ததஸே நோ கிம் வநாத்ரீச்வர!** 124

* * * பண்டு ராமக்ருஷ்ணவதாரங்களிலே செய்தருளின அதிமாநுஷ மஹோபகார விசேஷங்களை யெடுத்துரைத்து, இப்படி விலக்ஷண சக்தியுக்தரான தேவரீர் எம்மபேக்ஷிதம் தலைக்கட்டாமையென்று ஒன்றுண்டோவென்கிறார்.

ஹேவநாத்ரீச்வர!—வாரீர் திருமாலிருஞ்சோலை யழகரே!

லங்காயுத்தஹதாந் ஹரீந்—இலங்கையில் நடந்த ராக்ஷஸ யுத்தத்திலே கொலையுண்டொழிந்த வானர முதலிகளையும்;

சம்பூக தோஷாத் ம்ருதம் த்விஜஸுதம்—தவம்புரியத் தகாத சூத்ர யோநியிலே பிறந்த சம்புகன் த்வம்புரிதலாகிற குற்றத்திற்குப் பலனாக அகால ம்ருத்யுவையடைந்த அயோத்யாவாஸி ப்ராஹ்மண குமாரனையும்;

ம்ருதம் ஸாந்தீபங்யபீஜம்— * மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல் வீழ்ந்து மாண்டானை * என்கிறபடியே ப்ரபாஸ தீர்த்தத்திலே மாண்டுபோன ஸாந்தீபநிபுத்ரனையும்;

வைகுண்டகாந் த்விஜஸுதாந் பாலாந் ச— * பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும் * என்கிற பெரியாழ்வார் பாசுரத்தில் சொல்லப்பட்டபடியே தன்னடிச் சோதி சேர்ந்த ப்ராஹ்மண புத்ரர்களான நான்கு சிசுக்களையும்;

ஆர்ஜுநிஸம்பவம் கர்ப்பஞ்ச— * மருமகன் தன் சந்ததியை உயிர்மீட்டு * என்றும் * உத்தரைதன் சிறுவனையு முய்யக்கொண்ட வுயிராளன் * என்றுமுள்ள பெரியாழ்வார் பாசுரங்களிற் பேசப்பட்டபடியே அச்வத்தாமாவின் அபாண்டவாஸ்த்ர ப்ரயோகத்தினால் கரிக்கட்டையாய் விழுந்த அபிமன்யு புத்ரனையும். [அர்ஜுநஸ்ய அபத்யம் புமாந்—ஆர்ஜுநிః]

யః த்வம் ஸ்வேநைவ ரூபேண வ்யுததரః—யாவரொரு தேவரீர், பண்டிருந்த வடிவில் சிறிதும் குறையாமே சிதையாமே அப்படியே புநருத்தாரம் செய்தருளிற்றோ; அப்படிப்பட்ட தேவரீர்.

மம மத்குரோச் ச ஸ்வாபீஷ்டம் நோ ததஸே கிம்—அடியேனுக்கும் அடியேனது ஆசார்யரான எம்பெருமானார்க்கும் அபீஷ்டமானதைக் கொடுத்தருளாதொழியுமோ? அவச்யம் கொடுத்தருளுமென்கிற ப்ரத்யயமுள்ள தெமக்கு—என்றபடி. 124

आयोध्यिकान् सपशुकीटतृणांश्च जन्तून् किंकर्मणो नु बत ! कीदृशवेदानाढ्यान् ।
सायुज्यलभ्यविभवान्निजनित्यलोकान् सान्तानिकानगमयो वनशैलनाथ ! ॥१२५॥

ஆயோத்யிகாந் ஸபசுகீடத்ருணாம்ச்ச ஜந்தூந்
கிங்கர்மணோ நு பத ! கீத்ருச வேதநாட்யாந்,
ஸாயுஜ்ய லப்யவிபவாந் நிஜநித்ய லோகாந்
ஸாந்தாநிகாந் அகமயோ வநசைலநாத ! 125

* * * முனிவன் வேண்டத் திறல் விளங்குமிலக்குமனைப் பிரிந்ததனால் தரிக்கமாட்டாதே போரக்லேசித்த பெருமாள் ராஜ்யத்தை விட்டெழுந்தருளத் தொடங்கிய போது, அயோத்யா நகரத்து உயிர்களெல்லாம் பெருமாளைச் சரணமடைந்து 'தேவரீர் எங்குச் சென்றாலும் அடியோங்களையும் கூடவே அழைத்துக்கொண்டெழுந்தருள வேணும்' என்று வேண்ட, பெருமாள் அவர்களுடைய ஆர்த்தியைக் கண்டு திருவுள்ள முகந்து அப்படியே யென்றிசைந்து அனைவரையும் தன்னைப் பின்தொடர்ந்து வருமாறு பணித்தருளி ப்ரயாணப்பட்டார்; அப்பொழுது அந்நகரத்திருந்த மனிசர்மாத்திரமேயல்லாமல் பசுக்கள் பக்ஷிகள் முதலான ஸமஸ்தவஸ்து ஜாதமும் பெருமாளைப் பின் சென்றன. இப்படி பலரும் புடைசூழப் பெருமாள் ஸரயூநதியிலிறங்கித் தன்னடிச் சோதிக்கெழுந்தருளும்போது தம்மிடத்து இடையறாத அன்புகொண்டு பின்பற்றி ஸரயுவில் மூழ்கி உடம்பைத் துறந்த எல்லா வுயிர்கட்கும், ப்ரஹ்ம லோகத்துக்கு மேற்பட்டதாய் பரமபதம்போலவே அபுநராவ்ருத்தியாகிற சிறப்புடைத்தான ஸாந்தானிகமென்னும் லோகத்தை யளித்தருளினரென்று இதிஹாஸமுள்ளது. இதனை "அன்று சராசரங்களை வைகுந்தத்தேற்றி" என்கிற பாசுரத்திலே குலசேகரப் பெருமாள் சுருங்கவருளிச்செய்தார். திருவாய்மொழியில் * கற்பாரி ராமபிரானையல்லால் * (7-5-1) என்கிற பாசுரத்திற்கு இவ் விதிஹாஸத்தை ப்ரமேயமாக்கி நிர்வஹிக்கு மாசாரியர்களும் சிலருளர். இவ்விதிஹாஸத்தை யுட்கொண்டே இந்த ச்லோகமருளிச்செய்கிறார்.

ஹே வநசைலநாத !—வாரீர் திருமாலிருஞ் சோலையழகரே!

ஆயோத்யிகாந் ஸபசுகீடத்ருணாம்ச்ச ஜந்தூந்—அயோத்யாவாஸிகளாய், பசுக்களும் கீடங்களும் புற்களுமுட்பட ஸகல ஜந்துக்களையும்.

ஸாயுஜ்யலப்யவிபவாந் நிஜநித்ய லோகாந் ஸாந்தாநிகாந் அகமய:— ஸாயுஜ்யமென்னும் மோக்ஷத்திலே அடையக்கூடிய செல்வம் மல்கிய ஸ்ரீவைகுண்ட துல்ய பகவதநுபவாநுகூலங்களான ஸாந்தாநிகமென்னும் லோக விசேஷங்களை ப்ராபிக்கச் செய்தருளிற்றே; இது,

கிங்கர்மணோ நு கீத்ருச வேதநாட்யாந்—அந்த ஜந்துக்களை என்ன கர்மயோகமுடையனவாகவும் எவ்விதமான ஜ்ஞாநயோக முடையனவாகவும் திருவுள்ளம்பற்றியோ? கர்மயோகாதிகளொன்றிலும் அந்வயமின்றிக்கே யிருக்கச் செய்தேயும் ஸ்வகீய நிர்ஹேதுக க்ருபையாலேயிறே செய்தருளிற்று; அங்ஙனே இங்குமானாலாகாதோ என்று கருத்து.

இந்த ச்லோகத்தின் முதற்பதத்தை **आयोध्यगान्** என்று கொண்டார் ஸம்ஸ்க்ருத வ்யாக்க்யாதா; " अयोध्यासंबन्धिनो देशाः—आयोध्याः ; तान् गच्छन्तीति तथोक्ताः । साक्षादयोध्यावासिन एव न ; अयोध्यासंबन्धिदेशवासिनोऽपीत्यर्थः " என்றெழுதியுள்ளார். இது க்லிஷ்டமான பாடம்; **आयोध्यिकान्** என்பதே பெரியார் கொண்ட பாடமாகக் காண்கிறது. **अयोध्यायां भवा :— आयोध्यिकाः ।**

மூன்றுவது பாதத்தில் **बत** என்கிற ஸ்தானத்தில் **वद** என்றும் பாடமுண்டு, **किंकर्मणः** என்பது ஏகபதம். **किंकर्मणो मत्वा कीदृशवेदनाढ्यान् मत्वा सान्तानिकानगमयः**—என்று. (மத்வா என்பதை அத்யாஹரித்துக்கொண்டு) அந்வயிப்பது. அத்யாஹாரம் செய்யாதொழியினும் தாத்பர்யமதுவே தேறும். .. ... 125

**हरितवारणभृत्यसमाह्वयं करिगिरौ वरदस्त्वमपूर्विकाम् ।**
**दृशमलम्भय एव हि सुन्दर ! स्फुटमदाश्च वरान् शतमीदृशान् ॥१२६॥**

ஹரித வாரணப்ருத்ய ஸமாஹ்வயம்
கரிகிரௌ வரதஸ் த்வமபூர்விகாம்,
த்ருச மலம்பய ஏவஹி ஸுந்தர !
ஸ்புட மதாச்ச பரச்சத மீத்ருசம். 126

* * * ஸ்ரீஹஸ்திசைல சிகரோஜ்ஜ்வல பாரிஜாதமான தேவப் பெருமாளுக்கும் திருமாலிருஞ்சோலையழகர்க்கு முண்டான ஐக்கியத்தை ஒரு விலக்ஷண ப்ரக்ரியையாலே யருளிச்செய்கிறார். பச்சைவாரணதாஸர் என்றொரு பரம பாகவதோத்தமர் திருக்கச்சி நம்பிகளுக்கு தேஹாநுபந்தமுடையவர் இருந்தார்; [இவர் திருக்கச்சிநம்பிகளுக்குப் பிதாவென்று சிலரும், பிதா மஹரென்று சிலரும், பித்ருவ்யரென்று சிலரும் சொல்லக் கேள்வி.] இப்பெரியார் பிறவிக்குருடராயிருந்து தேவப் பெருமாளுடைய திருவருளாலே கண் பெற்றாரென்று இதிஹாஸமுள்ளது. ஆளவந்தார் தேவப்பெருமாள் விஷயமாக அருளிச்செய்த * யஸ்ய ப்ரஸாதகலயா * என்கிற ச்லோகத்தில் * **अन्धः प्रपश्यति**— அந்த: ப்ரபச்யதி * என்றது இவ்விதிஹாஸத்தை யவலம்பித்தேயென்று சொல்லுவர்கள்; அதுதன்னை இங்கு அருளிச்செய்கிறாராயிற்று.

ஹே ஸுந்தர ! கரிகிரௌ வரதஸ் த்வம்—வாரீர் அழகரே ! * வேகவத்யுத்தரே தீரே புண்யகோட்யாம் ஹரிஸ் ஸ்வயம், வரதஸ் ஸர்வபூதாநாம் அத்யாபி பரித்ருச்யதே * என்கிறபடியே ஸ்ரீ ஹஸ்திகிரியில் வரதாதிராஜனாக ஸேவை தந்தருளாநின்ற தேவரீர்.

ஹரிதவாரணப்ருத்ய ஸமாஹ்வயம் அபூர்விகாம் த்ருசம் அலம்பய ஏவ ஹி—பச்சை வாரணதாஸரென்னும் பரம பக்தர்க்கு அபூர்வமான த்ருஷ்டியைக் கொடுத்தருளினது ப்ரஸித்தமேயன்றோ. இது த்விகர்மக ப்ரயோகம்.

சத்ருசம் பரச்சதம் ஸ்புடம் அதாச் ச—இது ஒன்றே யன்றிறே; இப்படி யருள்செய்தது பரச்சதமுண்டிறே. அடியேனுக்கும் இங்ஙனேயொரு திருவருள் செய்தாலாகாதோ வென்பது உள்ளுறை. நான்காவது பாதம் "स्फुटमदाश्च वरान् शतमीदृशान्" என்கிற பாடமர்கவும் காண்கிறது. ... ... 126

इह च देव ! ददासि वरान् परान् वरद ! सुन्दर ! सुन्दरदोर्धर ! ।
वनगिरेरभितस्तटमावसन्नखिललोचनगोचरवैभवः ॥१२७॥

இஹ ச தேவ! ததாஸி வராந் பராந்
வரத ஸுந்தர ஸுந்தர தோர்த்தர !,
வநகிரேரபிதஸ் தடமாவஸந்
அகில லோசந கோசரவைபவः. 127

* * * ஸ்ரீ ஹஸ்திகிரியிலே வரந்தரும் பெருமாளாயிருக்கிறபடியைக் கீழ் ச்லோகத்திலருளிச்செய்தார்; அத் திருமலையிற்போலவே இத் திருமலையிலும் வரந்தரும் பெருமையைப் பேசுகிறாரிதில்.

ஹே வரத ஸுந்தர ஸுந்தரதோர்த்தர! தேவ!—வாரீர் வரதரே! அழகரே! சுந்தரத் தோளுடைய தேவபிரானே!

இஹ ச வநகிரேः அபிதஸ் தடம் ஆவஸந்—இங்கும் திருமாலிருஞ்சோலைத் தாழ்வரைகளிலே யெழுந்தருளியிருந்து.

அகில லோசந கோசர வைபவஸ் ஸந்—எல்லாருடையவும் கண்ணுக்கு மிலக்கான வைபவத்தையுடையவராய்க் கொண்டு.

பராந் வராந் ததாஸி—சிறந்த வரங்களைத் தந்தருளா நின்றீர். ... 127

इदमिमे शृणुमो मलयध्वजं नृपमिह स्वयमेव हि सुन्दर ।
चरणसात्कृतवानिति तद्वयं वनगिरीश्वर ! जातमनोरथाः ॥१२८॥

இதமிமே ச்ருணுமோ மலயத்வஜம்
ந்ருபமிஹ ஸ்வயமேவ ஹி ஸுந்தர !,
சரணஸாத்க்ருதவாநிதி, தத் வயம்
வநகிரீச்வர ! ஜாதமநோரதாः. 128

* * * பெரியாழ்வார் திருமொழியில் (4-2-7.) * கொன்னவில் கூர்வேல் கோன் நெடுமாறன் தென்கூடல் கோன், தென்னன் கொண்டாடும் தென் திருமாலிருஞ்சோலையே * என்றவிடத்து விவக்ஷிதமான இதிஹாஸத்தை யுட்கொண்டு இந்த ச்லோகமருளிச் செய்கிறபடி. அப் பாசுரத்தின் வியாக்கியானத்திலே மணவாள மாமுனிகள் அருளிச்செய்த இதிஹாஸமே இங்கு ஸாரமாக எழுதப்படுகின்றது. அகஸ்த்ய முனிவன் வீற்றிருக்கும் மலய பர்வதத்திற் சென்று தர்மமே நடத்தக் கடவேனென்று மலயபர்வதத்தை யெழுதிக் கொடியெடுத்த மலயத்வஜனென்னு மரசன் தேரேறிக் கங்கை நீராடப் போகாநிற்கச் செய்தே * மதிதவழ் குடுமியளவிலே சென்றவாறே தேர் வடக்கு ஓடாமல் நிற்க, அவ்வரசன் அவ்விடத்திலே தேரை நிறுத்தி 'இங்கே தீர்த்த விசேஷமும் எம்பெருமானும் ஸந்நிதி பண்ணியிருக்கவேணும்' என்று நினைத்து இறங்கி ஆராய்ந்து பார்க்க, அவ்விடத்தில் நித்ய ஸந்நிஹிதரான அழகர் அவ்வரசனை நோக்கி 'இவ்வாற்றிலே நீராடு' என்று நியமித்தருள, நதியின் பெயரைக் கேட்டுணர்ந்து நீராட வேண்டுகையால் 'இவ்வாற்றுக்குத் திருநாமமென்?' என்று அரசன் கேட்க; 'முன்பு நாம் உலகளந்தபோது பிரமன் திருவடி விளக்கின காலத்தில் நம் பாதச் சிலம்பின் நீர்

இதிலே தெறித்துச் சிலம்பாறென்று பெயர் பெற்றதாக அழகர் அருளிச்செய்ய, அது கேட்ட அரசன் அம் மஹாநதியில் நீராடி கங்காஸ்நான விருப்பத்தையும் தவிர்ந்து அத் திருமாலிருஞ்சோலையில்தானே பேரன்பு பூண்டிருந்தானென்பது இதிஹாஸம். இதைத் திருவுள்ளம்பற்றியே "கொன்னவில் கூர்வேல்கோன் நெடுமாறன் தென்கூடல்கோன் தென்னன் கொண்டாடும் தென் திருமாலிருஞ்சோலையே" என்று பெரியாழ்வாரருளிச் செய்தார். அதைத் தழுவியே இந்த ச்லோகமும் அவதரிக்கிறது. இதில் மலயத்வஜ ராஜனென்று சிறப்பித்துக் கூறப்படும் அரசன் * பருப்பதத்துக் கயல்பொறித்த பாண்டியர் குலபதிபோல் * என்ற பெரியாழ்வார் திருமொழிப் (5-4-7) பாசுரத்திலும் கூறப்பட்டவன். அவ்விடத்து வியாக்கியானமும் ஸேவிக்க.

ஹே வநகிரீச்வர ஸுந்தர—வாரீர் திருமாலிருஞ்சோலையழகரே !

இஹ மலயத்வஜம் ந்ருபம்—இத் திருமலையிலே மலயத்வஜனென்னு மரசனை.

ஸ்வயமேவ—அவனுடைய ஸாதநாநுஷ்டாநாதிப்ரதீக்ஷையின்றிக்கே தேவரீருடைய நிர்ஹேதுக க்ருபையினாலேயே என்றபடி.

சர்ண ஸாத்க்ருதவாநிதி இதம் இமே வயம் ச்ருணும:—திருவடிக்கு ஆளாக்கிக்கொண்டீரென்னுமிவ் வரலாற்றை யாம் கேள்விப்படுகின்றோம்.

தத் வயம் ஜாதமநோரதா:—அப்படிப்பட்ட நிர்ஹேதுகக்ருபை நம்பக்கலிலும் பெருகுமென்று மநோரதித்திரா நின்றோமென்கை. ... ... ... 128

विज्ञापनां वनगिरीश्वर ! सत्यरूपामङ्गीकुरुष्व करुणार्णव ! मामकीनाम् ।
श्रीरङ्गधामनि यथापुरमेकतोऽहं रामानुजार्यवशगः परिवर्तिषीय ॥१२९॥

விஜ்ஞாபநாம் வநகிரீச்வர ! ஸத்யரூபாம்
அங்கீகுருஷ்வ கருணார்ணவ ! மாமகீநாம்,
ஸ்ரீரங்கதாமநி யதாபுர மேகதோஹம்
ராமாநுஜார்யவசக: பரிவர்த்திஷீய. 129

***—திருமாலிருஞ் சோலையழகருடைய திருக்கல்யாண குணாநுபவத்தைக் கீழ் ச்லோகத்தோடே தலைக்கட்டினாராயிற்று. இனி இது முதலாக நான்கு ச்லோகங்களாலே ஸ்வாபீஷ்டத்தை விஜ்ஞாபித்து ஸ்தவத்தைத் தலைக்கட்டியருளுகிறாராயிற்று. இந்த ஸ்தவமருளிச் செய்கிற காலத்திலே எம்பெருமானார் மேல் நாட்டிலே திருநாராயண புரத்திலே யெழுந்தருளியிருக்கவும், அவரைப் பிரிந்து தாம் கோயிலில் வஸிக்க மாட்டாமே திருமாலிருஞ்சோலையிலே வர்த்திக்கவும்நேர்ந்தது. இங்ஙனேநேர்ந்த ஆசார்ய விச்லேஷம் அஸஹ்யமாயிருக்கையாலே இந்த விச்லேஷவ்யஸனம் நீங்கப்பெற வேணுமென்று ப்ரார்த்திக்கிறாராயிற்று.

கருணார்ணவ வநகிரீச்வர !—கருணைக் கடலான திருமாலிருஞ் சோலையழகரே !.
ஸத்யரூபாம் மாமகீநாம் விஜ்ஞாபநாம் அங்கீகுருஷ்வ—யதார்த்தமான அடியேனது விண்ணப்பத்தைத் திருவுள்ளம்பற்றி யருளவேணும். அந்த விஜ்ஞாபனந்தானேதென்ன வருளிச் செய்கிறார் மேல் ;

அஹம் யதாபுரம் ஸ்ரீரங்கதாமநி ஏகத: ராமாநுஜார்யவசக: பரிவர்த்திஷீய—அடியேன் முன்பு போலத் திருவரங்கம் பெரிய கோயிலிலே ஒரு புறத்திலே எம்பெருமானாருடைய திருவடி நிழலிலே வாழ்வேனாக. எம்பெருமானாரும் கோயில் வந்து சேர, அடியேன் அவரது திருவடிகளிலே சேர்ந்து வாழ்வேணும்படி அருள் செய்ய வேணுமென்றாராயிற்று. ... ... ... ... ... ... 129

किंचेदञ्च विरिञ्चभावन ! वनाद्रीश ! प्रभो ! सुन्दर ! प्रत्याख्यानपराङ्मुखो वरदतां पश्यन्नवश्यं शृणु ।
श्रीरङ्गश्रियमन्वहं प्रगुणयंस्त्वद्भक्तभोग्यां कुरु प्रत्यक्षं सुनिरस्तमेव विदधत्प्रत्यर्थिनां प्रार्थनम् ॥१३०॥

கிஞ்சேதஞ்ச விரிஞ்சபாவந வநாத்ரீச ப்ரபோ ஸுந்தர !
ப்ரத்யாக்க்யாந பராங்முகோ வரததாம் பச்யந்நவச்யம் ச்ருணு,
ஸ்ரீரங்கச்ரியமந்வஹம் ப்ரகுணயந் த்வத்பக்த போக்யாம் குரு
ப்ரத்யக்ஷம் ஸுநிரஸ்தமேவ விதத‍த் ப்ரத்யர்த்திநாம் ப்ரார்த்தநம். 130

*** கீழ்ச்லோகத்தில் செய்த ப்ரார்த்தனையைச் சிறிது விவரிக்கிறதாயிற்று இந்த ச்லோகம்.

ஹே விரிஞ்சபாவந வநாத்ரீச ப்ரபோ ஸுந்தர !—* உய்யவுலகுபடைக்க வேண்டி உந்தியில் நான்முகனைத் தோன்றுவித்த திருமாலிருஞ் சோலையழகரே !.

வரததாம் பச்யந்—அடியார் வேண்டினவற்றைத் தந்தருளக் கடவோமென்று இருக்கு மிருப்பைத் திருவுள்ளம்பற்றி.

ப்ரத்யாக்க்யாநபராங்முகஃ—உபேக்ஷித் தருளாமலென்றபடி. நெறிகாட்டி நீக்கிவிடாமல்.

கிஞ்ச இதஞ்ச அவச்யம் ச்ருணு—கீழ்ச்லோகத்திற் சொன்னதையேயன்றிக்கே இதையும் கேட்டருளியே யாகவேணும். அதுதான் ஏதென்னில்;

ப்ரத்யர்த்திநாம் ப்ரார்த்தநம் ப்ரத்யக்ஷமேவ ஸுநிரஸ்தம் விததத்—அடியேன் போலவே ப்ரதிபக்ஷிகளும் விபரீதமாக ஏதேனும் ப்ரார்த்திக்கக்கூடும் ; அந்த ப்ரார்த்தனையை யெல்லாம் எங்கள் கண்முகப்பே நிரஸ்தமாக்கி.

ஸ்ரீரங்கச்ரியம் அந்வஹம் ப்ரகுணயந் த்வத்பக்த போக்யாம் குரு—தென்திருவரங்கங் கோயிற் செல்வத்தை நாடோறும் அபிவ்ருத்தமாக்கி தேவரீருடைய பக்தர்களுக்கே போக்யமாம்படி செய்தருள வேணும். ... ... ... .... 130

कारुण्यामृतवारिधे ! वृषपते ! हे सत्यसङ्कल्पन ! श्रीमन् ! सुन्दर ! योग्यताविरहितानुत्सार्य सद्वत्सल ! ।
क्षाम्यन् साधुजनैः कृतांस्तु निखिलानेवापचारान् क्षणात् तद्भोग्यामनिशं कुरुष्व भगवन् ! श्रीरङ्गधामश्रियम् ॥

காருண்யாம்ருத வாரிதே ! வ்ருஷபதே ! ஹேஸத்ய ஸங்கல்பந !
ஸ்ரீமந் ஸுந்தர ! யோக்யதா விரஹிதாந் உத்ஸார்ய ஸத்வத்ஸல,
க்ஷாம்யந் ஸாதுஜநைஃ க்ருதாம்ஸ்து நிகிலாநேவாப சாராந் க்ஷணாத்
தத்போக்யாம்நிசம் குருஷ்வ பகவந் ஸ்ரீரங்கதாமச்ரியம். 131

*** கீழிரண்டு ச்லோகங்களிற் பண்ணின ப்ராத்தனைக்கு சேஷபூதமே இந்த ப்ரார்த்தனையும்.

காருண்ய அம்ருதவாரிதே !—கருணைக்கு அமுதக்கடல் போன்றவரே ! பரதுஃகா ஸஹிஷ்ணுத்வமே காருண்யமாகையாலே அதுதன்னையுடைய தேவரீருக்கு அடியேன் பிரார்த்திப்பது மிகையன்றேயென்று காட்டுகிறபடி.

வ்ருஷபதே !—வ்ருஷபாத்ரிபதே ! என்றபடி. வருஷபாத்ரியென்கிற திருமாலிருஞ் சோலைமலைக்குத் தலைவரே ! ஸ்ரீவைகுண்டம் க்ஷீராப்தி முதலானவற்றைவிட்டு தேவரீர் இங்கே வந்தெழுந்தருளியிருப்பதை நோக்கியருளவேண்டுமென்று காட்டு கிறபடி.

ஹே ஸத்யஸங்கல்பந !—ஸத்யஸங்கல்பரான தேவரீருக்கு எதுவும் ஸங்கல்ப மாத்ரஸாத்ய மாயிருக்க, அந்த ஸங்கல்பத்திற்கு வந்த துர்பிக்ஷமென்னேயென்க.

ஸ்ரீமந் ஸுந்தர பகவந்!—தேவரீருடைய வடிவழகிலேயே கண்வைத்திருக்கு மடியோங்கள் இவ்வழகுக்கு நித்ய ஸ்ரீர் நித்யமங்கலமென்று மங்களாசாஸநம் பண்ணவேண்டு மத்தனைபோக்கி வேறொன்று ப்ரார்த்திக்கத் தகாது. ஆயினும் ப்ரார்த்திக்க நேர்கின்றதென்கை. [பகவந்!] தேவரீருடைய ஜ்ஞாநசக்தி பலைச்வர்ய வீர்ய தேஜஸ்ஸுக்களாகிற ஷாட்குண்யம் காட்டிலெறித்த நிலவாகாமே ஸபலமாகைக்காக ப்ரார்த்திக்கிறோமென்று காட்டுகிறார் போலும்.

ஸத்வத்ஸல—தேவரீருடைய வாத்ஸல்யமாகிற குணவிசேஷமும் ப்ரார்த்திக்கச்செய்கிறதென்கை. ப்ரார்த்தனைதான் ஏதென்னில்;

யோக்யதாவிரஹிதாந் உத்ஸார்ய—* நல்லார்கள் வாழும் நளிரரங்கம் * என்கிறபடியே நல்லார்களே வாழ்ந்தவிடமான கோயிலிலே இப்போது மண்ணின் பாரமான அயோக்யர்களேயன்றோ மலிந்துகிடக்கிறது; அவர்களை அங்கு நின்றும் அகலவித்து-

ஸாதுஜநை: க்ருதாந் நிகிலாநேவ அபசாராந் க்ஷணாத் க்ஷாம்யந்—தேவரீருக்கு உயிர்நிலையான ஸத்புருஷர்கள் தேவரீருடைய வாத்ஸல்யத்தை நம்பி அபசாரங்கள் பட்டிருந்தாலும் அவற்றை ஒரு நொடிப்பொழுதில் க்ஷமாவிஷயமாக்கியருளி.

ஸ்ரீரங்கதாமச்ரியம் அநிசம் தத்போக்யாம் குருஷ்வ—திருவரங்கம் பெரியகோயிற் செல்வம் எந்நாளும் ஸத்புருஷர்களுக்கே போக்யமாம்படி செய்தருளவேணும். இதிற் காட்டிலும் வேறு ப்ரார்த்தநீயமில்லை யென்றதாயிற்று. ... ... 131

इदं भूयोभूयः पुनरपि च भूयः पुनरपि स्फुटं विज्ञीप्सामीत्यगतिरबुधोऽनन्यशरणः ।
कृतागा दुष्टात्मा कलुषमतिरसीत्यनवधेः दयायास्ते पात्रं वनगिरिपते ! सुन्दरभुज ! ॥१३२॥

இதம் பூயோபூய: புநரபி ச பூய: புநரபி
ஸ்புடம் விஜ்ஞீப்ஸாமீத்யகதிரபுதோ நந்ய சரண:,
க்ருதாகா துஷ்டாத்மா கலுஷமதிரஸ்மீ த்யநவதே:
தயாயாஸ் தே பாத்ரம் வநகிரிபதே ஸுந்தரபுஜ! 132

* * * ஆழ்வான் நைச்யாநுஸந்தானமே வடிவெடுத்திருப்பரென்றிறே ப்ரஸித்தி. மணவாள மாமுனிகளும் யதிராஜ விம்சதியிலே * वाचामगोचर महागुण देशिकाग्र्यकूराधिनाथ कथिताखिलनैच्य........வாசாமகோசர மஹாகுண தேசிகாக்ர்ய கூராதிநாத கதிதாகில நைச்ய... * என்று ஆழ்வானுக்கு நைச்யாநுஸந்தானமே நிரூபகமென்பது தோன்றவிறே யருளிச்செய்தது. அப்படி தமக்கு அஸாதாரணச் செல்வமான நைச்யாநுஸந்தானத்தைப் பதியவைக்குமிந்த ச்லோகத்தோடே ஸ்தவத்தைத் தலைக்கட்டியருளுகிறாயிற்று. அகதி: அபுத: அநந்யசரண: க்ருதாகா: துஷ்டாத்மா கலுஷமதி: என்னுமிவை ஆழ்வானென்னும் திருநாமத்திற்குப் பர்யாய பூதங்களாகவாயிற்று இவர் தாம் நினைத்திருப்பது.

ஹே வநகிரிபதே ஸுந்தரபுஜ!—வாரீர் திருமாலிருஞ்சோலைமலைத் தலைவரான சுந்தரத் தோளுடைய பெருமாளே!

அகதி:—உபாய சூந்யனாய், அபுத: —ஜ்ஞாந சூன்யனாய், அநந்யசரண:—தேவரீரைத் தவிர்த்து வேறொரு புகலறியாதவனாயிருக்குமடியேன்.

இதம் பூயோபூய:புநரபிச பூய: புநரபி ஸ்புடம் விஜ்ஞீப்ஸாமி—இது தன்னையே மீண்டு மீண்டும் திருப்பித் திருப்பி விண்ணப்பம் செய்யாநின்றேன்.

"விஜ்ஞீப்ஸாமி" என்னும் பதத்தின் தத்வத்தையறியாதார் 'விஜ்ஞாப்ஸ்யாமி' என்று தவறான பாடம் கொண்டிருப்பர். வடமொழியில் (விஜ்ஞாப்ஸ்யாமி) என்றொரு சொல்வடிவமே கிடையாது. விஜ்ஞீப்ஸாமி என்றது விஜ்ஞாபயாமி என்றபடி.

'விஜ்ஞாபயிது மிச்சாமி' என்று ஸம்ஸ்க்ருத வ்யாக்யாதாவும் எழுதியிருப்பது பிறழ்வான பாடத்தில் ப்ரத்யயத்தாலே போலும்.

இதி—செய்த விஜ்ஞாபநத்தையே மீண்டு மீண்டும் செய்கிறேனென்ற காரணத்தினால்.
க்ருதாகாஃ துஷ்டாத்மா கலுஷமதிஃ அஸ்மி—குற்றவாளனாகிறேன்; துஷ்டஸ்வபாவமுடையேனாகிறேன்; கலங்கின புத்தியை யுடையேனாகிறேன். இதி—என்று திருவுள்ளம் பற்றும்படியாகி.

தே தயாயாஃ பாத்ரம்—தேவரீருடைய திருவருளுக்குக் கொள்கலமாகிறேனத்தனை. தேவரீருடைய தயாகுணம் அடியேன்பால் அவசியம் ப்ரஸரிப்பதற்கு விஷய பௌஷ்கல்யமுண்டென்று விண்ணப்பஞ் செய்து தலைக்கட்டிற்றாயிற்று. ... 132

इत्थं वादिभयङ्करवंशीयाण्णङ्गरार्यसंकलिता । सुन्दरबाहुस्तवबरटीका सुधियां मुदे सदा भूयात् ॥

" अर्वाञ्चो यत्पदसरसिज द्वंद्वमाश्रित्य, पूर्वे मूर्ध्ना यस्यान्वयमुपगता देशिका मुक्तिमापुः ।
सोऽयं रामानुजमुनिरपि स्वीयमुक्तिं करस्थां यत्संबन्धादमनुत, कथं वर्ण्यते कूरनाथः ॥ "

इति प्रसिद्धवैभवेन सद्गुणामृताब्धिना गुरूत्तमेन कूरनाथदेशिकेन निर्मिताः ।
बुधैकभोग्यपञ्चरत्नकल्पपञ्चसत्कृतीः विवृत्य जन्मसार्थकत्वमाप वादिभीकरः ॥

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர் இயற்றிய

பஞ்சஸ்தவ வியாக்கியானத்தில்

**ஸுந்தரபாஹுஸ்தவ வியாக்கியானம்**

முற்றிற்று.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஆழ்வான் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

